உ

சிவமயம்.

# தோத்திரமாலை.

இது

கோயிலூரென்று வழங்குஞ் சமீவனக்ஷேத்திரம்

ஸ்ரீ முத்துராமலிங்கதேசிகர் பரம்பரை

சிதம்பரஞானதேசிகர்பேரில்

ஷை. தேசிகர்

பாதசேகரராகிய

காரைக்குடி மேலைமடாலயம்

சேவு. பழ. பழநியப்பய்யா அவர்கள்

இயற்றியது.

திருக்கைலாய பரம்பரைத்

திருவாவடுதுறையாதினத் திருக்கூட்டத் தொருவராகிய

தொண்டர்சீர்பரவுவார் தம்பிரான்

சுவாமிகளவர்களால்

பார்வையிடப்பட்டு

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

பிலவ௵ மாசி௴.

1902

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௬ | கழநியேலாம் | கழநியெலாம் |
| ௭ | ௨௬ | தூய்ப்பணி | தூஉய்ப்பணி |
| ,, | ,, | மொய்மலர் | மொய்ம்மலர் |
| ௧௨ | ௧ | பேரியோர் | பெரியோர் |
| ௧௪ | ௧௫ | மறிவெ | மறிவே |
| ,, | ௧௮ | சகக்குரு | சகத்குரு |
| ௧௫ | ௧௩ | திகழத்தியு | திகழ்த்தியு |
| ௧௭ | ௧௩ | மெய்முறை | மெய்ம்முறை |
| ௨௩ | ௧௬ | யாற்கருள் | யார்க்கருள் |
| ௩௧ | ௩ | கூற்றினை | கூத்தினை |
| ௩௪ | ௧௧ | சுற்றமா | சுத்தமா |
| ௪௨ | ௬ | வேன்டுமென் | வேண்டுமென் |
| ,, | ௧௬ | பிரமத் | பிரம |
| ௬௩ | ௧௩ | புரிந்தருளுரு | புரிந்தருளுஞ் |
| ௭௭ | ௩ | முத்திச்சொரூப | முத்திசொரூப |
| ,, | ௧௧ | கண்ணெண்ண் | கண்ணனெண்ண |
| ,, | ,, | கண்ணணெணண் | கண்ணனென் |
| ௮௬ | ௩ | மாரனுடைய | மாரனுடை |
| ௯௦ | ௯ | சிதம்பர | சிதம்பரமா |
| ௯௪ | ௨ | போற்றினற்கு | போற்றினர்க்கு |
| ௧௦௫ | ௨௦ | யின்றேருகாற் | யின்றொருகாற் |
| ௧௧௦ | ௧ | பாரதன் | பாரதனின் |
| ௧௧௩ | ௧௬ | காணம்மானை | காணம்மானை |
| ௧௨௨ | ௨௦ | ணின்றிடுங் | ணின்றிடுங் |
| ,, | ௨௨ | வகைபிலை | வகையிலை |
| ௧௨௫ | ௧௮ | லாலகிலோ | லாகிலலோ |

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க௩கூ | க௨ | யாணாந்த | யானந்த |
| க௫அ | ௫ | ககனைனன் | ககனநன் |
| ,, | க௪ | மில்லாத | மில்லா |
| க௭௨ | அ | மிட்டு | மிட்டுப் |
| க௭௪ | க௬ | பாமளை | பாமனை |
| க௭௫ | கூ | பரத்தனி | பரத்தினி |
| ,, | ௨௨ | லழுழ்ந்தி | லழுந்தி |
| கஅ௬ | ௩ | வெண்டு | வேண்டு |
| கஅஅ | க | நிக்தமு | நித்தமு |
| ,, | ௨ | பேத்தம | பெத்தம |
| ,, | ௨0 | வெங்கு | வென்கு |
| ககூ௨ | அ | செ்சால்லாய். | சொல்லாய். |
| ககூ௩ | ௬ | சூத்திரமு | சூத்திரமும் |
| ௨0௫ | க௩ | செயதங் | செய்தங் |
| ௨0௬ | க௪ | வண்டெட, (௨) | வண்டேட, (௩) |

# அட்டவணை.

அகவனீக்கி ஆக மொத்தம்-௭௯௯.

அட்டவணை முற்றும்.

சிவமயம்.

# சாத்துக்கவிகள்.

காரைக்குடியிலிருக்கும்
மழவை-சிதம்பர தீக்ஷிதரவர்கள் குமாரர்
சதாவதானம். பாலசுப்பிரமண்ய அய்யாவர்க ளியற்றிய
அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பந்துவந்தோர்க் குபசரித்துப் பாலனமுங் கொடுங்கலியாற்
பதைத்து வாடி
நொந்துவந்தோர்க் குபசரித்து நினைத்தவையு மளிக்குமுகி
லுவலை வர்க்குச்
சந்துவந்தோர் கீதைமுத லுணர்மதிமான் பழனியப்பன்
றனன் பாக
வந்துவந்து பணிகுருமேற் றோத்திரப்பா மாலையொன்று
வனைந்திட் டானே. (௧)

கோவினூ ரிடத்தினுயர் குருவணிக மன்னரெலாங் கும்பிட் டேத்து, மாவிநய சிதம்பரத யாநிதிமேற் றோத்திரப்பா மாலை சொற்றான், பூவினுயர் காரைவளர் சேவுகமா லருளருமைப் புதல்வன் ஞான, காவியமெ லாந்தேர்ந்த பழநியப்ப னெனுந்திருப்பேர்க் கவிவல் லோனே. (௨)

இது
புதுக்கோட்டை யிராயபுரத்தி லிருக்கும்
மழவை-திருவிளையாடல் சுப்பிரமண்ய பாரதிகளின் புத்திரர்
இராமஸ்வாமியய்ய ரியற்றிய
கட்டளைக்கலித்துறை.

கோத்திரப் பார்புகழ் காரை வணிகர் குலமணியா
நேத்திரப் பாவை நிகரும் பழனியப் பேந்த்ரன் வன்னி
க்ஷேத்திரப் பாலமர் ஞான சிதம்பர தேசிகர்க்குத்
தோத்திரப் பாவையின் சொன்மலர் மாலையிற் சூட்டினனே.

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

காரைக்குடியிலிருக்குந் திருக்கோட்டியூர் வித்வான்

சத்தியேசாசாரியரவர்களியற்றிய

[illegible]

[illegible]
[illegible] க||

[illegible]
[illegible] உ||

[illegible]
[illegible] ௩||

---

கும்பகோணங் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ,

வெ. சாமிநாதய்யரவர்கள் இயற்றிய.

நேரிசை வெண்பா.

கேத்திரப்பா மாலை கெழுமுதன தாரியன்மேற்
றோத்திரப்பா மாலைவனைஇச் சூட்டினனால்—சாத்திரங்கள்
கற்றோன் பழநியப்பக் கம்பீரன் சாதுசங்க
முற்றோன் பெரிதாய்ந் துவந்து.

திருவாவடுதுறை யாதீனத்துத் திருக்கூட்டத் தொருவராகிய தொண்டர்சீர்பரவுவார்தம்பிரான் சுவாமிகள் இயற்றிய பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேத மணக்கு மகரமெலாம் விடையே மணக்குங் கொடிகளெலாம் வித்த மணக்கு மேடையெலாம் விளைவு மணக்குங் கழநியெலாம், போத மணக்கு மடங்களெலாம் பூவே மணக்கும் வனங்களெலாம் பொன்னே மணக்கு மாடையெலாம் புலமை மணக்குங் கழகமெலா, நீத மணக்குஞ் சபைகளெலா நெருப்பு மணக்குங் குண்டமெலா நீறு மணக்கு நெற்றியெலா நிசமே மணக்கும் வாய்களெலாஞ், சாத மணக்குஞ் சாலையெலாந் தவமே மணக்குங் குகைகளெலாந் தமிழே மணக்குஞ் செய்புளெலாந் தருவே மணக்குங் கரங்களெலாம்.

வான மணக்குங் கோபுரங்கண் மதின்மேன் மணக்கும் புயலினங்கள் வண்டு மணக்குஞ் சோலையெலா மதியே மணக்கு மானனங்க, டான மணக்கு மிடங்களெலாஞ் சங்க மணக்கு மாலயங்க டண்ணீர் மணக்குந் தடங்களெலாந் தயவு மணக்குஞ் சிந்தையெலாம், பான மணக்கு நூல்களெலாம் பத்தி மணக்குஞ் செயல்களெலாம் பாலே மணக்கும் பசுக்களெலாம் பசன மணக்குங் கோட்டமெலாஞ், சான மணக்கு மனங்களெலாஞ் சாறு மணக்கும் வீதியெலாந் தகர மணக்குங் குழல்களெலாந் தந்த மணக்குந் தண்டமெலாம்.

இன்ன வளஞ்சேர் சமிவனமா மெழிலார் கோயி லூராதி னி லெம்ம னோர்க ளினிதுய்ய விந்நா டுறவுங் குறுகலிக்க, முன்னைப் பொருளா முப்பொருட்கு முடிவாய் நின்ற முதற்

பொருளே முத்து ராம லிங்கமென மொழியும் பெயரோ டவ
தரித்துப், பின்னத் துவிதப் பொருளாகிப் பெருகி யொளிர்
சங் கரகுருவைப் பிறங்கு பாச னாகுருவாய்ப் பெற்றுப் பேதா
பேதமற, மன்னத் துறந்து சமிவனத்து வடிவா னந்தத் திரு
நெல்லை மாதைத் துறவா தகத்தடக்கி டருப் பணிகள் பல
வியற்றி. (௫)

மின்னிற் பொலியும் பிரமசபை யிடத்தோ வியம்போல்
வீற்றிருந்து மேய சீட ரனைவருக்கும் வீட்டி மலத்தை யின்
பருளித், தன்னிற் பிறிதொன் றிலையெனவே தானே தானா
ய்த் தனித்திருந்த தனிச்சற் குருவா மாண்டவன்றன் றனி
ப்பொற் பீடத் தினிதிருந்தோன், பொன்னைப் புவியை யிதற்
கான பொருளை மடவார் போகத்தைப் போகேன் போகே
னென்றிருக்கும் பொல்லா தாய வகங்கரப்பேய், தன்னைப்
பின்னை யிருவினையைத் தமதோ ரிளமைப் பருவத்திற்றானே
விடுத்தாண் டவனடியைச் சார்ந்து சரண மவணடைந்து. (௬)

பத்தி வயிராக் கியமுதலிற் பகருஞ் சீவ கருணையொடு
பரம ஞானம் வடிவெடுத்துப் பாரில் வந்த தெனும்படியுஞ்,
சித்தசாமி யெனுந்தனது சிறப்புப் பெயருக் கிசைந்தபடி
திகழு மகத்தும் புறத்து நன்றாய்த் தீரத் துறந்த துறவொழு
க்கு, மெத்த வுயர்ந்த கல்வியுமவ் வீறுக் கிரட்டி யாம்பொ
றையும் வியோமா காச நடம்புரியும் விமலப் பெருமா னிடத்
தன்பும், வைத்துப் பரமா னந்தமதாய் மாறா தென்று மொரு
படித்தாய் வயங்கு மருணா சலப்பெயரை வாய்ந்த தேசி கோ
த்தமனே. (௭)

## சிறப்புப்பாயிரம்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருள்பூத்த குருபரனு மாண்டவன்றன் னடியண்ணி யருள்வ சப்பட், டிருள்பூத்த மலங்கழுவி யினிப்பிறவா வமல மருந் தெனுஞா னத்தைத்,தெருள்பூத்த மனத்தினிற்கொண் டெக்கலையுங் கற்றுணர்ந்த திறத்தி னோங்கி, மருள்பூத்த மதி யினரு நங்கருணு நிதியெனவே வாழ்த்தப் பொங்கி. (சு)

துதிபூத்த துறவடிகட் கனுசனெனும் பெரும்புகழைத் துலங்கப் பெற்றுக், கதிபூத்த கழுகியின்முன் சொல்லியபீ டத்தினுக்குக் கர்த்தா வாகி, மதிபூத்த முகமெல்லை நாயகியோ டமர்கொற்ற வாளீ சற்கு, நிதிபூத்த கற்பணிபொற் பணி மணியா லிழைத்தபணி நிரம்பச் செய்து. (எ)

எங்கடிரு வாவடுதண் டுறையின்மகா வித்துவா னென ப்பேர் கொண்ட, துங்கமிகு கவிச்சிங்க மீனுட்சி சுந்தரப்பே ர்த் தூயோன் றன்னுற்,றங்களொரு சமிவனமான் மியத்தினை ச்செந் தமிழ்ப்பாவாற் ருனி யற்றிச், சங்கமிகு மந்திரத்தில் வெகுசிறப்பா யரங்கேற்ற முஞ் செய் வித்து. (அ).

அன்னகவி சாகரற்கு மனங்களிக்கு முபசார மனைத்து மாற்றி, இன்னிலமும் பொன்னிலமு மிறைஞ்சவெழு நிலத் தின்மே லென்று முள்ள, நன்னிலம்வாழ் சுகவடிவைத் தம க்குரிய வடிவெனக்கொ ணலஞ்சிறந்த, வென்னவனுஞ் சித ம்பரதே சிகன்றனது பொன்போன்ற விணைய டிக்கண். (சு)

கல்வியறி வொழுக்கநடை மதிநுட்பம் பரசிவன்பாற் கனிந்த பத்தி, செல்வமுட லாதியொன்று நிலையலவென் றுள்

ளபடி தெளிந்த சீரு, நல்லசிவ ஞானநூற் பற்பலதே ருணர்ச்சியொடு நலஞ்சி றந்தோன், செல்வமலி காரைநகர்ப் பழநியப்ப வணிகர்குல சீலன் மாதோ. (௧௦)

இம்மைமறு மைக்கிறுவே யாதார நிலையமென விதயத்தெண்ணிச், செம்மையுறு மத்துவிதச் சொற்பொலியுங் குருபத்திச் சிறப்பும் வாய்ந்த, வெம்மைதவிர் தோத்திரப்பா மாலையொன்று வனைந்துமிக விருப்ப மாகத், தம்மையருண் முன்சொன்ன குருவடிக்கு வலங்கலெனச் சாற்றினனே. (௧௧)

வேறு.

திருமணக்குங் கோயிலூர்ச் சிவமணக்குஞ் சிதம்பரதே வன்றன் பாதக், குருமணக்கு மரைமலரிற் றமதுமனப் பொறிவண்டைக் குலவச் செய்புந், தருமணக்குங் கரகமலன் பழநியப்ப னருண்மணக்குந் தமிழ்ப்பாட் டின்ப, வுருமணக்கும் பாடுதொறு நினைத்திடினு மனமணக்கு முணர்வுண்டாமே.

காரைக்குடியிலிருக்கும் தி. சுந்தரதேசிகர் இயற்றிய
அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மதம்பரவு செருக்ககற்றி யுபநிடதத் துட்பொருளை வடித்துக் காட்டுஞ், சிதம்பரதே சிகன்பதத்திற் றோத்திரப்பா மாலையொன்று சிங்காரித்தான், பதம்பரவு பொருளிரண்டிற் றேகியென்போர்க் கினிதளிக்கும் பழநியப்பன், முதம்பரவு மனமொழியான் காரைநகர்க் கதிபனென்றும் முனிவிலோனே. (௧)

சிவமயம்.

பரமகுரு திருவடிவாழ்க.

# ஸ்ரீ கோயிலூர் சிதம்பரதேசிகர்

# தோத்திரப்பாமாலை.

## நிஷ்கள கணபதி வணக்கம்.

கலிவிருத்தம்.

நித்த முத்த நிமலசொ ரூபனைப்
பத்தி செய்பவர் பாவம்ப றித்தருண்
மத்த வாரண மாமுகன் சேவடி
சித்தம் வைத்துத் தினந்துதி செய்குவாம். (க)

சித்த னெந்தை சிதம்பர தேவனைப்
பத்தி யோடும் பரவித் துதிசெய
வித்து ரூப விமலக் களிற்றினை
நித்த மேத்தி நினைந்து பணிகுவாம். (உ)

சத்துச் சித்துச் சதோதய மாகிய
சுத்த மாகுஞ் சொரூப வறிவினை
யெத்தி னத்து மிருந்துதி செய்யவென்
புத்தி மேவும் புகர்முகத் தெய்வமே. (ங)

## சிவசத்தி சந்தானதேவர்கள் வணக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கொற்றவர் வணங்குங் கொற்றவா ளிறையைக் கோதிலாத் திருநெலை மாதை, நற்றவர்க் கருளு முத்தரா மேச நாயக னணிமலர்த் தாளைப், பற்றற விடுத்த துறவியின் றுணையாம் பரவுஞ் சிதம்பர குருவை, முற்றுமெய் மெண்ண முடிவுற நினைத்து மொய்மலர் தூய்ப்பணிந் திடுவாம். (க)

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சத்திய ஞான வனந்தவா னந்தஞ் சார்ந்துள பேரறி வி னர்முன், சுத்தமா யறியா வெனதுபுன் வாக்காற் சொல்லிய தோத்திர மதனின், மெத்தவெக் குற்ற மிருப்பினு மதனின் மெய்யையே யான்புகன் றதனாற், சிற்றறி வுடையேன் பிழை தனைப் பொறுக்கச் செய்தருள் சிவசிதம் பரமே.

---

சிற்சபாநாயகர் துதி.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்னம் பலத்தி னடம்புரியும் புனிதா வுன்றன் றிரு வடிதா, னென்னம் பரமா மிதயமதி லிணையில் பரமா னந்தம தாய், மன்னிப் பொலிய நான்வணங்க வாழ்த்த நினைக்க வர ந்தருவாய், தன்னைப் பில்லா மறைமுடிவி னிடத்து நடஞ் செய் தனிச்சிவமே. (க)

---

சிவமயம்.

# திருவருட்பிரகாசவகவல்.

[நிலைமண்டில வாசிரியப்பா.]

நித்திய நிற்குண நிறைவின் புருவாய்ச்
சத்திய சிற்சுக தன்மயப் பொருளாய்ச்
சுத்தப் பிரமமாய்ச் சுடரொளி யுருவா
யத்து விதமா யகண்டசின் மயமா
யெத்துவி தங்களு மில்லா விறையாய்ச் 5
சத்து மசத்துந் தயங்கலில் பொருளாய்ச்
சுத்த வெளியாய்ச் சுயம்பிர காசமாய்
வித்து ரூபமாய் வெறுஞ்சிவ மயமா
யாணும் பெண்ணு மன்றி யமலமாய்த்
தாணு வாகிச் சகசவான் பொருளா 10
யெல்லா மாகி யிருந்துள பரம
னல்ல லில்லா வானந்த வுருவ
னில்லாச் சத்தியை யியக்கி யருளின
னில்லாச் சத்தியி லெல்லா மியங்கின
வம்முறை யுரைப்பி னருமறை முடிவெலாஞ் 15
செம்முறை யாகத் திகழ்த்துகின் றனவே
யச்சுத மாய்நின் றறிவா யிலங்கிய
மெச்சு பொருளில்லை யில்லா தெழுந்தன

வனலிற் சூடு மப்பினிற் சீதமு
மனல்புன லதனி லபினமாய் நிற்றல்போல் 20
பின்ன மின்றிப் பிறங்கிய சத்திதான்
மின்னித் தொடர்ந்து விசிறிவிம் பித்தவே
பரையொடு மமர்ந்த பானம தானவை
பரப்பிர மமதாய்ப் பகரநின் றனவே
யிந்தவ கண்ட விரும்பூ ரணச்சிவ 25
னுந்து சச்சிதா னந்தமா முருவே
யிப்பிர மத்தி னிலங்கிய சத்திதான்
சொப்பனம் போலத் தோன்றிநின் றனவே
யப்பிர மத்தி லமர்ந்தாள சத்திதா
னிப்பியில் வெள்ளி யெழுந்தது போலாங் 30
கானலிற் சலமுங் கயிற்றினி லரவும்
வானதி னீலமும் வயங்கிய போலாங்
கட்டையிற் கள்வனுங் ககன குசுமமு
முட்டையிற் குஞ்சு முயங்கிய மானும்
பொன்னிற் பணியும் புனலி னலைகளு 35
மின்னி னொளியும் விளங்கிய பொருவும்
விவர்த்த மாக வெளிப்படுஞ் சத்தியால்
விவர்த்த காரணன் வெறுஞ்சிவ னாமே
காரண சத்தியைக் கலந்துநிற் றலினாற்
காரணப் பிரமமாய்க் கழறுனு மாமே 40
மூலப் பகுதி முயங்கிய சிவமே
சாலச் சதாசிவ னென்னலுந் தகுமே
முக்குண மாயை முயங்கிய சிவமே

இக்குண சகிதமா கேசனு மாமே
மாயா சத்துவம் வயங்கிய சிவமே 45
மாயாத் திதியை வயக்கிடு மாயனு
மாயா ராசதம் வயங்கிய சிவமே
மாயா சிருட்டி வயங்கு கமலனு
மாயா தாமத மருவிய சிவமே
மாயா கார்யசம் மாரவு ருத்திர 50
னனுக்ரக சத்தியா லளவி லுயிர்களைத்
தனக்கு ளடக்கியே சாயுச்ய மருள்வன்
றிரோபவ சத்தியாற் றிரமி லுயிர்களைத்
திரோபவஞ் செய்து தியக்கந் தழுத்துவன்
காரிய சத்தி கலந்துள வீசர்கள் 55
காரிய வசத்தினாற் காரியப் பிரமமே
யெல்லாம் பிரம மெனவறி பெரியோர்
சொல்லார் மயக்கஞ் சுருக்க மிதாமே
யெங்குஞ்சிவமென வெண்ணியபெரியோர்
தங்கு மிடமே தலத்தி லுயர்ந்ததாங் 60
காரணந் தன்னிற் கலந்த வுலகெலாம்
பூரண மென்றே புகலுவர் பெரியோர்
காரண மின்றிக் காரிய மிலையென
வாரணம் புகன்ற வருமறை மாணமு
முத்தி முதலா முயர்பிர மாணமுஞ் 65
சத்திய மென்றே சாற்றினர் பெரியோர்
மெய்யெனக் கருதும் விவேகம தின்றிப்
பொய்யெனநினைந்து போக்கினேன் கால

மிம்முறை யறிந்தா ரிணையில் பெரியோ
ரம்முறை யறியா தலைந்தன னியானே 70
பொல்லா வினையேன் புழுத்தலை நாயினேன்
கல்லாக் கயவன் கடையரிற் கடையே
னுய்வயி னுள்ளதோர் நலமது மில்லேன்
பேயினும் பெரிய பேய்க்குண முடையேன்
விடயம் மெய்யென விரும்புஞ் சிறியேன் 75
முடையுடைத் தேக முதலென வறிந்தேன்
கள்ளக் கோலக் கருங்குழன் மாதரார்
முள்ளிற் றேனை முயன்று வருந்தினேன்
பழிமுலை தன்னைப் பாங்கென் றறிந்தே
யிழிவுடை யோனு மெங்கணு மலைந்தேன் 80
பொல்லா நரகம் புகுவழி யிதுவென
நல்லா ரறியு நயனம தொழிந்தே
னெல்லா வுயிரு மிழிவுறைப் பதற்கே
நல்லா யமைந்த நாய்த்தலைப் புலையேன்
பொல்லாக் கயவர் புகும்வழி யெல்லா 85
நல்லா வழுந்தி நடிக்கும் புன்மையே
னிழிவிற் பெரியவ னிகழ்விற்குரியவ
னிழிவிற் பெரும்புக ழெனைவிட விலையே
நானே யுலகம் பழிக்க நயந்தவ
னானே யுலக நகைக்கச் சிறந்தவன் 90
றனத்தைப் பொருளெனத் தாவித் திரிந்தவ
னினத்தைப் பெரிதென வேங்கி யிழிந்தவன்
மக்கள் பெரிதென மகிழ்ந்துகொண் டாடினேன்

மிக்கதுன் பதனுன் மெலிந்தன னியானே
யாபத் துடைய வருங்கொடு வினையெலா 95
மாபத் திலாதநல் லமிர்தாய் மதித்தனன்
றனதா னியாதிசம் பந்த னைத்தையு
மினமாய் மதித்துநா னிழிவுடைத் தாயினேன்
குலம்பெரி தென்று கொடுஞ்சொல் வழங்கினே
னலம்பல வுளவென நவின்று மகிழ்ந்தனன் 100
கோத்திர மதனைக் குணமாய் மதித்துநான்
காத்திர மாகிக் கலங்கி யழிந்தனன்
றேக மழகெனுந் தியக்கத் திழிந்துநான்
மோக மதனுன் முழுமதி கெட்டன
னூறுதந் துவமா யகன்மலக் கேணியாய் 105
வேறுவே றுக விரிபுழுக் குறையுளாய்க்
கோழையுஞ் சீயுங் கொளுவிய பொதியதாய்ப்
பீழை யுடைத்தாய்ப் பெருங்குழி வாசலாய்
நாறி யூறி நலமிலா நாற்றமாய்ச்
சீறிக் காறித் தினமு முமிழ்வதாய் 110
மலமுஞ் சீயு மறுகிநின் றிழிவதாய்ச்
செலமும் வழுவுஞ் செறிந்து கழிவதாய்
மூத்திரக் கேணியாய் மும்மலக் குழியதாய்ப்
பார்த்தவர் வாயாற் பகரவொண் ணாதநா
யன்ன ரசமே யாகிப்பு ரீசமா 115
யுன்ன முடியா வூர்முனி பண்டமாய்ச்
சுக்கில சோணிதந் தோன்றுபே ருருவா
யெக்குலத் தவரு மிழிவுறை பண்டமாய்

மின்னினு நொய்தாய் மிளிர்சலக் குமிழியாய்
மன்னிய கட்டையில் வயங்கும் புருடனு 120
யிந்திரசாலத் தியங்கும் புவியதாய்க்
கந்தர்வ நகரங் கண்டிடு முறைபோ
னீரிற் குமிழியு நீரினி லெழுத்தும்
பாரின் மட்கலம் பயில்வெயிற் குஞ்சமு
மிந்திர தனுவு மியைந்தசொற் பனமுஞ் 125
சந்தையிற் கூட்டமுஞ் சாயை சகட்டுருள்
போலவே தோன்றும் பொய்யுட லதனைச்
சால மதித்துத் தயங்கினின் றனனே
தேக மெய்யெனுந் தியக்கத் திழிந்தேன்
போகம் பொய்யெனப் புலம்பித் திரிந்தே 130
னில்லா வுலக நிலையென வறிந்தே
னெல்லாத் துன்பு மெனவந் தடைந்தன
வாரண முழுது மறிவெ சிவமெனப்
பூரண மாகப் புகன்றன வறியேன்
வேத நான்கு மெய்ப்பொரு ளொன்றென 135
வோதத் துணிந்த வுயர்ச்சிய தறியே
னங்க மாறு மருமறை முழுமையு
மெங்குஞ் சிவமென வியம்பியு மறியேன்
ஞாய சாத்திர நன்கு மதித்திட
ஞானஞ் சிவமென நவின்றது மறியே 140
னுத்ரமீ மாஞ்சை யுயர்சிவ னொருவனென்
றித்திற மியம்பியு மெளிதினி லறியேன்
மிருதி முழுது மெய்யறி வொன்றெனக்

கருதித் துணிந்து கழறியு மறியேன்
புராண மனைத்தும் பூரணன் சிவனெனக் 145
காரணத் தோடு கழறியு மறியே
னாகமம் முழுது மறிவே சிவமெனு
வேக மாக வியம்பியு மறியே
னிதிகாச மெல்லா மெங்குஞ் சிவமென
வதிசயத் தோடு மறைந்தது மறியே 150
னறுசம யங்களு மகில கலைகளு
மறிவே சிவமென வறைந்தது மறியே
னுபவே தங்களு முபவா கமங்களு
முபநிட முழுமையு மோதியு மறியேன்
றேவ னருளுந் தேவிகா லோத்திரந் 155
தேவ னறிவெனத் திகழ்த்தியு மறியேன்
சங்கர குரவன் சமஸ்தமு முணர்ந்தே
யெங்குஞ் சிவமென வியம்பியு மறியேன்
வித்தியா ரணிய வேதவி முப்பொருள்
வித்து வறிவென விளம்பியு மறியே 160
னாதி சுகக்குரு வருளிறை யருளினு
னேதித் தறிவை நிகழ்த்தியு மறியேன்
சதுர நால் வருக்குஞ் சாற்றிய சிவனே
மதூரஞ் சிவனென வழங்கியு மறியே
னாதி பகவா னருளிய கீதையி 165
னீதி தவறு நெறியையு மறியேன்
கமல நான்முகன் கழறிய கீதையில்
விமல வறிவை விரித்தன வறியேன்

றிருமூலர் சொன்ன திருமந் திரத்திற்
றிருக்குச் சிவனெனத் தீட்டியு மறியேன் 170
சுந்தர மூர்த்தியுந் தூய ஞானமே
மந்திர சிவமென வழங்கியு மறியேன்
ஞானசம் பந்தர் நவிலருட் பாவின்
ஞானஞ் சிவமென நாட்டியு மறியே
னப்ப மூர்த்தியு மகண்ட வறிவையே 175
யொப்பச் சிவனென வுணர்த்தியு மறியேன்
மாணிக்க வாசகர் மலர்ந்த வறிவையே
யாணிச் சிவனென வறைந்தது மறியேன்
வதிட்ட முனிவரும் வயங்கிய வறிவே
யதிட்ட சிவமென வறைந்தது மறியே 180
னறிவே சிவமென வாரிய ரனைவரும்
பிறிவற வுணர்த்திய பெற்றிய தறியேன்
குரவ ரனைவருங் குலமறை முழுவதும்
பரமுத லொன்றெனப் பகர்ந்தது மறியேன்
பரமாத் துவிதம் பகர்ந்தமெய் ஞானிக 185
டிரமாய்ச் சிவமெனச் செப்பியு மறியேன்
றற்போத மாய்ந்தாற் சகலமுஞ் சிவமென
விற்பன ரெல்லாம் விளம்பியு மறியேன்
சீவ பேதஞ் சிதைந்த வவ்விடத்தே
மேவுஞ் சிவமென விளம்பியு மறியே 190
னெம்மதத் தோர்களு மெங்குஞ் சிவமெனல்
சம்மத மேயெனச் சாற்றிய தறியேன்
பெரியோ ரெல்லாம் பிரமஞ்சிவ மெனச்

சரியா யுணர்த்துஞ் சாத்திர மறியேன்
முதியோ ரெல்லா மூலச் சிவமதைக் 195
கதியே யாகக் கழறிய மறியேன்
சிவப்பொரு ளொன்றே செகமய மாகி
விவர்த்த மாக விரிந்தன வறியேன்
றற்பதந் துவம்பதஞ் சாட்சி யசிபத
முப்பத மொன்றென முடிந்தது மறியேன் 200
முனிகண மிருடிகண் முதியோ ரனைவருந்
தனிமுதல் சிவமெனச் சாற்றிய மறியே
னறியா மூடரி லடிமையைப் போலத்
தறியா மூடன் சகத்தினி லுண்டோ
விப்படி யறியா வென்போ லுயிர்கண் 205
மெய்ப்படி யாக விளங்கவு முளதோ
நானென தென்னு நாட்டம தொழித்துத்
தானது வாகத் தந்தருள் புரிவாய்
நின்றூர் வாசனை நெடும்பகை வென்று
பொன்றும் படியான் போயின னன்றோ 210
விம்முறை கைவிட லெனையிகழ் வொரிலை
மெய்முறை யாக விளம்புவன் கேணீ
யென்னுளந் தின்னை யெவரறி வார்கணின்
பொன்னடி யடைந்தது புவியெலா மறியுமே
யானு முன்ற னடியடைந் தார்கள் 215
வீணாய் நரகினில் வீழ்வ தறிந்தா
லுன்னை யிகழ்வா ருலகி லுயிரெலா

மென்னுடை நிலைமை யாரறி வாரே
யதனா லுன்னுடை யடியடைந் தேனுக்
கிதமா ஞான மின்றுநீ யருளே 220
யருளவே வேண்டு மல்லா தொழிந்தான்
மருளனென் றென்னை மதிப்பா ரெவருமே.
யிதுநினக் கழகோ விதுநின் பெருமையோ
யிதுநினக் கருமையோ விதுநின் முறைமையோ
பொல்லா வினையேன் புகலுமா றறியே 225
னெல்லா மறிந்தநீ யென்றனக் கருளே
யருளா தொழிந்தா லடிமை யென்செய்வேன்
மருளுடை யோனாய் மடிந்திடு வேனான்
கடைக்க ணளித்தெனைக் காத்தருள் புரிவா
யடைக்கல மென்றே யடிபணிந் தேனான் 230
கிருமி கீடமாய்க் கிளர்சர வுயிர்களாய்ப்
பெருமரு ளுடைய பேயாய்க் கணங்களாய்ப்
புல்முதற் பூண்டாய்ப் புழுமுத லுருவாய்க்
கன்முதன் மலையாய்க் கடலாய்க் கானமா
யசரஞ் சரமதா யவனியி னனைத்துமாய்க் 235
கஜவுரு வாகிக் கழுதையாய்ப் பாம்பாய்
நாயாய் நரியாய் நலமில் குரங்காய்க்
காயாய்க் கனியதாய்க் கன்றாய்ப் பறவையா
யெல்லாப் பிறப்பும் பிறந்தே யிளைத்தனன்
பொல்லாப் பிறவி புகும்வழி நீக்கியா 240
ளசர முதலா மளவிலா யோனியில்
விசன முற்றுமேல் வெகுவுயிர் பிழைத்தும்

மானை முதலா யரவணில் பரவையா
மேனை யுயிரா யிறத்தலிற் பிழைத்து
மனுடப் பிறப்பின் மாதா கருவினிற் 245
றனுவா யுதித்த சங்கடம் பிழைத்தும்
பத்து மாதமும் பரிதவித் திருந்து
தொத்து மலத்திற் றோய்ந்திடல் பிழைத்து
மைம்பெருந் துன்பா மரவு கடித்திடத்
தம்ப மாகித் தயங்கலிற் பிழைத்தும் 250
வருடங் களிலே மாந்தங் கணையொடு
கருட தோடமாங் காந்தலிற் பிழைத்துங்
கடும்புலி போலுங் காமக் கனலா
மடுந்துய ராரு மவைதியிற் பிழைத்து
நித்திரை முதலா நெடுஞ்சோம் பதனை 255
வித்தரை தன்னி வியங்குதல் பிழைத்து
மாயை யென்னு மருங்கலி பிழைத்தும்
வேசை யென்னும் வெவ்வழல் பிழைத்துந்
தெய்வ மெண்ணாச் சிந்தையிற் பிழைத்து
மைய மென்னு மடுகரி பிழைத்து 260
மைமத வில்லா வாணவம் பிழைத்துஞ்
சமைய மென்னுஞ் சழக்கினிற் பிழைத்தும்
வாத மென்னும் வன்குழி பிழைத்துங்
காத லுற்ற கடுஞ்சொற் பிழைத்து
மில்லற மென்னு மல்லலம் பிழைத்துந் 265
தொல்லை வெறிபாக் குழியினிற் பிழைத்துஞ்
சோத்திர மென்னுங் கொள்கையிற் பிழைத்து

மியாத்திரை யென்னு மிரவினிற் பிழைத்துங்
கன்ம மென்னுங் கருங்கடற் பிழைத்துஞ்
சன்ம மென்னுஞ் சாகரம் பிழைத்தும் 270
பத்தி செய்யாப் பான்மையிற் பிழைத்து
முத்தி யென்னு முதலை விரும்பியே
ஈச னென்னு மெண்ண முண்டாகிப்
பாச நீக்கப் பதறி யலைந்துநான்
றெய்வம் பலவாந் தியக்கத் திழிந்து 275
மெய்யன் பிலாது வெருவழி யலைந்தனன்
கல்லா மனத்தினன் கலக்கம்யார் காண்குவர்
நல்லா யுன்னை நயந்தனன் காண்க
கமலனு மாலுங் கண்ணுத லறியா
விமலம தான மெய்க்குரு காண்க 280
வாலமர் கடவு ளாகி யமர்ந்தருள்
கோலம தில்லாக் குருபரன் காண்க
வெல்லா மாகி யிருந்தரு ளிறைவ
பொல்லேன் றன்னைப் பொருந்திக் காண்க
வல்லா தில்லா வருளிறை காண்க 285
வல்லா யெல்லாம் வகுத்தனை காண்க
நல்லா ளனுமுமை நண்பன் காண்க
சொல்லான் மனத்தாற் றொடராய் காண்க
வட்ட மூர்த்தி யானவன் காண்க
சிட்ட ருளத்தின் றிருவே காண்க 290
துட்ட ரறியாச் சுகமே காண்க
வெட்ட வெளியாம் விமலன் காண்க

பொன்னே மணியே பொருளே காண்க
மன்னே மனனே மானே காண்க
தன்னே ரில்லாத் தலைவா காண்க 295
கன்னு ருரித்த கடவுள் காண்க
குருவா யமர்ந்த கோனே காண்க
மருவே மலரே வானே காண்க
வருவா யுருவா யல்லாய் காண்க
தெருளே யருளே தேனே காண்க 300
காரண குருவாய்க் கழுநி யமர்ந்தரு
ளாரணப் பொருளா மையா காண்க
விதம்பெற வடியாற் கிதமா யருளிச்
சிதம்பர மாகித் திகழ்ந்தனை காண்க
தாயு நீயென் றந்தையு நீயே 305
காயமு நீயென் கரணமு நீயே
காயத் தமர்ந்தோர் கடவுளு நீயே
மாயப் புலன்களு மனமுத லியாவையு
நீயே யன்றி நிலைபிற விலையே
பேயே னறிந்த பெற்றியி தாமே 310
மையா வுன்ற னடியிணை யொழிய
மெய்யா வெனக்கு வேறு கதியிலை
யிதுநின் றிருவுள மென்று மறியுமே
பொதுவி னடம்புரி பொருளே போற்றி
கழுநி யமர்ந்தருள் காவே போற்றி 315
மொழிமனை மறியா முனிவா போற்றி
சிந்தா மணியாந் தேவே போற்றி

பந்தங் கடந்த பரனே போற்றி
யென்ற னுயிரா மிறைவா போற்றி
யந்த மொன்றில்லா வாதி போற்றி 320
சங்கரா போற்றியென் றாயே போற்றி
யெங்கு நிறைந்த விறைவா போற்றி
தில்லையி லாடுந் தேனே போற்றி
யெல்லையில் பெரிய வின்பே போற்றி
வையா துய்யா வருளே போற்றி 325
பொய்யா துறையும் பொருளே போற்றி
மெய்ப்பத மளித்த விமலா போற்றி
பொய்ப்பதங் கெடுத்த பொருளே போற்றி
மெய்யும் பொய்யு மேவாய் போற்றி
ஐய மில்லா வனந்தா போற்றி 330
யணுவு மகத்து மானாய் போற்றி
யணுவிற் கணுவா யமர்ந்தனை போற்றி
யருளே போற்றி யசலா போற்றி
மருளே கெடுத்த மனனு பொற்றி
கண்ணே கருத்தே கதியே போற்றி 335
யெண்ணே யெழுத்தே யிசையே போற்றி
முப்பதங் கடந்த முதல்வா போற்றி
செப்பம தளித்த சிவமே போற்றி
மூவரு மறியா மூத்தா போற்றி
தேவரு மறியாச் செல்வா போற்றி 340
சச்சிதா னந்தத் தனிப்பர போற்றி
சொச்சம தான சுகமே போற்றி

யான்ம வுருவா மரனே போற்றி
பானம தாகும் பரனே போற்றி
நிற்குண மாகி நிறைந்தனை போற்றி 345
சற்குண முடைய தாயே போற்றி
முக்குணங் கடந்த மூர்த்தி போற்றி
யெக்குணங் களுமா யிசைந்தனை போற்றி
யெல்லா மாகு மீசா போற்றி
நல்லா ருளத்தி னடிப்பாய் போற்றி 350
வல்லார் போற்றுமென் வாழ்வே போற்றி
கல்லா மனத்திற் கலவாய் போற்றி
யல்லும் பகலு மானாய் போற்றி
சொல்லும் பொருளுந் தொடாராய் போற்றி
ஞான மருளு நற்குரு வடிவமாய்த் 355
தானே யமர்ந்த தனியே போற்றி
கழிநிப் பதியிற் கனிவுட னமர்ந்து
பழவடி யார்க்கருள் பரமா போற்றி
சிற்சபை தன்னிற் றிரமாய் நடித்துச்
சற்சன ருக்கரு டருவே போற்றி 360
மெச்சு மடியார் விரும்பிய படியே
யச்ச மறுத்தரு ளய்யா போற்றி
சிதம்பர மென்னுந் திருநா மத்துடன்
பதம்பெற வருளும் பரனே போற்றி
பாசப் பகையைப் பதைக்க வறுத்தெனக் 365
கீச னாகிய வெந்தாய் போற்றி
கோச மென்னுங் கொடும்பகை தன்னை

நாச மாக்கிய நாதா போற்றி
யவத்தை யென்னு மரும்பகை வென்றிப்
பவத்தை நீக்கிய பரமா போற்றி. 370
மூன்று தேகமா முப்பகை யகற்றிச்
சான்று தானெனத் தந்தருள் போற்றி
திரிசிய முற்றுந் திகழா வண்மே
யரிய திருக்கா யமைந்தனை போற்றி
சான்று சாக்கிய மிறந்த தனிப்பத. 375
மீன்றருள் புரியு மெந்தாய் போற்றி
ஞானந் தன்னை நவின்று வருளினுன்
மோன மாக்கு முனிவா போற்றி
தேனே யமுதே தித்த கற்கண்டே
பான மாகிய பதமெனக் கருளுவாய் 380
நீயா யமர்ந்த நிலைதனை யெனக்குநீ
தானே யாகத் தந்தருள் போற்றி
தானே யெனக்குத் தனையருள் புரியக்
கோனு யெழுந்த குருமணி போற்றி. 385
நாம வுருவமு நாமல வென்றுநான்
ருனு யிருக்கத் தந்தருள் போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
யத்தா போற்றி வமிர்தே போற்றி
பத்தர்க டமக்கருள் பரனே போற்றி. 390
சித்த ருளமதிற் றிகழ்ந்தாய் போற்றி
நானெனு மகங்கர நாடா தகற்றியென்
மாநிதிப் பொருளாய் வயங்கினை போற்றி

பூரணந் தன்னிற் பொலிந்த வுயிர்க்கெலாங்
காரண மாகவே கலந்தனை போற்றி 395
தற்பதந் தொம்பதஞ் சாட்சி யசிபத
முப்பதங் கடந்த முதலே போற்றி
முப்பாழ் கடந்த முதற்பா ழதுவோ
வப்பாழ்க் கப்பா லமர்ந்தனை போற்றி
காரிய காரணங் கடந்துள துரியமாய்ப் 400
பூரிய ருளமதிற் பொருந்தினை போற்றி
சத்தசத் தினுக்குச் சாட்சியா யிருந்துநீ
சத்தசத் தனைத்துமாய்ச் சமைந்தனை போற்றி
யடியவ ருளமே யமைந்த கோயிலாய்க்
குடிகொண் டிருந்தருள் கோவே போற்றி 405
சகல கேவலஞ் சான்றாய் நின்றநீ
சகலகே வலமாய்ச் சார்ந்தனை போற்றி
யறிவறி யாமைக் கதீதமாய் நின்றே
யறிவறி யாமை யாகினை போற்றி
மெய்யும் பொய்யு மாகி யிருந்து 410
மெய்யும் பொய்யு மாகா திருந்தனை
யின்பமுந் துன்பமு மில்லா திருந்து
மின்பமுந் துன்பமு மாகி யிருந்தனை
யநிலை நிலைகளு மாகா திருந்துநீ
நிலை நிலைகளாய் நிறைந்து நின்றனை 415
யெப்பொருள் களுமா யிலங்கி யிருந்துநீ
யப்பொருள் கடந்தொளிர்க் கதீதமாய் நின்றனை
நன்மையுந் தீமையு மானாய் போற்றி

நன்மையுந் தீமையு மல்லாய் போற்றி
யென்தர மோங்க விசைந்தனை போற்றி 420
யுன்தரங் கண்டுநா னுவந்திலன் போற்றி
யிமையவ ரெல்லா மேமாந் திருக்க
வெமையறி வுருவா யிருவென் றருளினை
கோமா னினதடி கூடா துழல்பவ
ரேமாப் படையவெற் கிணையடி யருளினை 425
நல்லோ ரெல்லா நலமுறப் புகழுவென்
கல்லா மனத்தினைக் கரையக் கனித்தனை
வானோ ரெல்லாம் வகைவகை மயங்கக்
கானே றணையவென் கன்மங் கரைத்தனை
யையா வுன்ற னடியடைந் தார்க்கெலா 430
மெய்யாஞ் சொரூப மேவ வருளினை
யனர்த்த நிவிர்த்தியு மானந் தாப்தியு
மெனக்கே யருளி யின்புறச் செய்தனை
நித்தியா னந்தமா நிலையே தந்து
சத்திய சிற்சுக சாந்தமு மருளுக 435
வஞ்ஞான மென்னு மகங்கரப் பேயை
மெஞ்ஞான வாளால் வெட்டி யருளுக
விச்சை யென்னும் வேற்படை யானே
கொச்சை ஞாலங் குலைத்தெனை யருளுக
வேக மென்னும் விவேகா யுதத்தா 440
லாக மென்னு மலகையை வெல்லுக
ஞான மென்னு நலமுள வாளா
லீன மனத்தை யினிதுவென் றருளுக

சற்குண மென்னுந் தனிப்பெருங் கதையாற்
றுற்குண மனைத்துந் துணித்துநின் றருளுக 445
வாரணப் பொருளெனு மரும்பெரும் படையாற்
காரண மான கரணம்வென் றருளுக
விசாரணை யென்னும் வெற்றிக் கணையாற்
றசாபி மானந் தம்மைவென் றருளுக
விஞ்ஞான மென்னும் வேலா யுதத்தா 450
லஞ்ஞான மென்னு மரணழித் தருளுக
வாசான் வாக்கெனு மங்குச மதனாற்
பாசா டவிக்கரி பதைக்கவென் றருளுக
தன்னை யறியுந் தனிச்சூ லத்தினு
லென்னை முதலெனு மிச்சைவென் றருளுக
பான மென்னும் பருத்த மழுவினு 455
ஞை னென்னு நச்சைவென் றருளுக
மோன மென்னு முரணார் தண்டான்
மான மென்னு மாயையை வெல்லுக
சுஞ்ஞான மென்னுந் தோமரப் படையால்
பொய்ஞ்ஞா னத்தின் போக்கைவென் றருளுக 460
நின்மல மான நிமலாக் கினியான்
மும்மல மென்னு மூளையைவென் றருளுக
வண்ட மடங்க வடங்கா வழிவினைப்
பிண்ட மதனிற் பிறிவிலா தருளுக
சித்தா முனது திருவுரு வதனைப் 465
பத்த னய்யப் பகர்ந்தினி தருளுக
வனுக்க ளெல்லா மண்டங்க ளாக

நுணுக்க வறிவினை நுவலா தருளுக
வெல்லா வுலகையு மீன்றழிக் கின்றநீ
பொல்லா வினையைப் பொடித்தினி தருளுக 470
பல்லா யிரமறை பகர்தற் கரியவ
கல்லா வெளியனைக் கடைக்கணித் தருளுக
பஞ்ச பாணனைப் பாறச் செய்தவ
வெஞ்சலில் காம மெரித்தினி தருளுக
வெங்கு நிறைந்த விரும்பியா பகத்திற் 475
றங்கும் படியே தயவுசெய் தருளுக
வுன்னை நினைந்துநா னுருகிக் கரையவுன்
றன்னிற் பத்தி தயவுசெய் தருளுக
வுன்ற னடியா ருடனிருந் துருகநா
னென்றனக் கின்னே யின்புரு வருளுக 480
சத்தா வரணமுந் தலைசாய்ந் தோடப்
பித்தா மெனக்குப் பெரிது மருளுக
துக்க மனைத்துந் தொடரா தொழிய
மிக்குப தேசம் விரும்பின னருளுக
துரியா தீதச் சுகத்தை யடையநான் 485
பெரிய வாக்கியம் பெட்பா யருளுக
வெக்கலை முடிவையு மிமைப்பொழு தறியநான்
றக்க வுணர்வைத் தந்துநின் றருளுக
வுன்னடி யிணைநினைந் தோயா துருகநான்
பொன்னடி யென்றலை பொருத்திநின் றருளுக 490
வையா வுன்ற னடியிணை தொழுதயான்
மெய்யா முத்தி வேண்டின னருளுக

மெய்ப்பத மதுவே வேண்டினன் வேறு
பொய்ப்பத மெல்லாம் பொருந்தா தருளுக
தாயே யுன்றன் றனிமல ரடிதொழ 495
நீயே யெனக்கு நினைத்தருள் புரிவாய்
போற்றி போற்றிநின் பொன்னடி தொழுதனன்
போற்றி நின்னடிப் போதருள் புரிகவே

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# சிவ சிதம்பர சங்கீர்த்தனம்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருமலி கழுநித் திருநக ரெழுந்த தேவனு மெமதுசற் குருவே, கருவிடை யழுந்து துன்பம தகற்றிக் கண்ணளித் தென்னையாண் டருள்வாய், நிருமல மாக நித்தமுந் துதிக்க நேசமாய்த் திருவருள் புரிவாய்ச், சொருபமாய் நிறைந்த சோதியாம் பொருளே சுத்தமாஞ் சிவசிதம் பரமே. (க)

காலனைக் காலா லுதைத்திடுங் கடவுள் கனிந்தவெம் பமதாங் கடவுண், மூலம தறியா முழுமுதற் கடவுண் மூ... யை யளித்திடுங் கடவுண், ஞாலம தொழித்த ஞானமா கடவு ளுன்மறை யறிந்திடாக் கடவுள், சிலமா மடிய ரமர் கடவுள் சிதம்பர குருவெனுங் கடவுள். (உ

சித்தம தறியாச் சிற்கன தேவன் றில்லையி லமர்ந்த தேவன், பத்தர்தம் முளத்திற் பதிந்திடுந் தேவன் பார்மு...

னிறைந்துள தேவன், கத்திடும் வாதக் கலக்கிலாத் தேவன் கரணம தறிந்திடாத் தேவ, னித்தமு மறிவா நின்மல தேவ னிற்குண சிதம்பர தேவன். (௩)

போதமாந் தன்னைக் கொடுத்திடு நாதன் புண்ணிய பூரணநாதன், சாதமாம் வடிவந் தந்திடு நாதன் சாந்தமாங் கனிவுடை நாதன், பேதமாஞ் சகத்தைப் பிரித்திடு நாதன் பிரிவிலா தளித்திடு நாதன், சீதமா யுளத்தைச் செய்தரு ணாதன் சிதம்பர தேவனு நாதன். (௪)

நிற்குண வடிவாய் நிறைந்திடு மைய னித்திய முத்தனு மையன், சற்குணர் தமக்குத் தனையருள் ளையன் சான்றதாய் நின்றிடு மையன், சொற்குணங் கடந்த துரியமா மையன் சோதிக்குஞ் சோதியா மையன், சிற்கன முடைய தில்லைவா ழையன் சித்ததாஞ் சிதம்பர வையன். (௫)

எமக்கறி வருளு மீசனுங் குரவ னெம்முளே யிருந்திடுங் குரவன், நமக்கென வொன்று மில்லதோர் குரவன் சகமதி னிறைந்திடுங் குரவ, னமக்கென வெழுந்த யோகியாங் குரவ னன்மைசெய் புண்மையாங் குரவ, னகப்பொரு ளாகி யமர்ந்திடுங் குரவ னருளுருச் சிதம்பர குரவன். (௬)

கற்பனை யின்றிக் கதிரொளி வடிவாய்க் கனகவம் பலத்துளே நின்று, சொற்பனம் போலத் தோன்றிடு முலகைத் துரியமென் றருளிடுந் தோன்ற, னிற்பன நடப்ப வனைத்துமே யறிவாய் நிகழுமென் றனுக்கிரகித்த, வற்புதப் பொருளே வம்பலத் தரசே வனந்தமாஞ் சிவசிதம் பரமே. (௭)

எப்பொருள் களுமா யிலங்கிடு மறிவே யேகமே யென்னுயிர்த் துணையே, யொப்புயர் வில்லா வுள்ளொளி விளக்கே

வோங்கிய கனகமன் றதனிற், செப்பரி தாய நடம்புரிந் தெனையுந் திருக்கழ னிப்பதி யாண்டு, வற்புத மாக வடியனுக் கருளு மய்யனே சிதம்பர வரசே. (௮)

சுதந்தரன் சுத்தன் சூட்சுமன் சுமுகன் சூனியன் சுருணமார் பெரியோ, னிதந்தரு மனத்தால் வழுத்துநல் லடியார்க் கிதத்தையே நினைந்திடு மிறைவன், பதந்தனைப் பணியும் பத்தர்தம் முளத்தே பதித்தருள் செய்திடும் பரம, னதஞ்செயு மகந்தை யதனையு மகற்றி யறிவருள் சிதம்பர குரவன்.

ஆரிய ரனைத்து மடிபணிந் தேற்று மற்புதக் கூற்றினையுடையோன், கூரிய மனத்தால் விசாரணை செய்து கொடுமனப் பாம்பினைக் கொன்று, நேரிணை யில்லாப் பெரியவ ருளத்தே நித்தமு நிறைந்திடு மறிவோன், காரிய மின்றிக் காரண வடிவாய்க் கண்ணதாஞ் சிவசிதம் பரமே. (௧௦)

வாக்கினு லுரைத்து மனத்தின னினைக்கு மாறிலாப் பரம்பொரு ளனையே, நோக்கினு லுணர்த்தி நுண்ணிய பொருளை நொடிதனி லெனக்கருள் புரிந்தாய், தாக்கிலாப் பரமாத் துவிதமாந் தன்னிற் றனித்தொரு கணமிருப் பதற்கே, நீக்கிலா வுனது புரணமா மடியை நீயருள் சிவசிதம் பரமே. ()

தற்பர விசும்பிற் கற்பனை யாலே சகசமா யெழுந்துள சகத்தைச், சொற்பனம் போலத் தோன்றிநின் றழியப் படுமெனச் சொல்லிய தோன்ற, லுற்பவித் தழலா வொருசிவ நீயென் றொருமொழி தன்னையே வழங்கும், கற்பனை கடந்த சிற்சுதா னந்தக் கனியதாஞ் சிவசிதம் பரமே. (௧௨)

சகலகே வலமாய்ச் சார்ந்துள வுலகஞ் சாட்சியி னிடத் திலை யென்றே, புகலநீ கேட்டும் பொருடனை யுணராப் புன் மையே னென்செயக் கடவேன், விகலமாந் தூல வுடம்பினை த்தானே மெய்யெனக் கருதிடும் வெறியன், பகலவன் போல வொளிர்ந்திடு நினது பதமருள் சிவசிதம் பரமே. (௧௩)

பஞ்சகோ சத்தைப் பாங்கென வுணர்ந்து பரமுத லறு வென வறிந்து, விஞ்சமா வாசை மேலுமே லோங்க மெலிந் துள வகங்கரன் றன்னைத், துஞ்சவே நீக்கிச் சோதிய தாகத் துணிந்துநீ யருளிய ஞானஞ், சஞ்சல மில்லா வென்மனத் திருக்கத் தந்தருள் சிவசிதம் பரமே. (௧௪)

அகந்தையி னுருவா மளவிலா வரந்தை யதனையே யடை ந்துள வடியேன், செகந்தனி லெனைப்போற் சிதடனு முள் ளோன் சேதன வுருவிடை யிலையே, யுகந்துநீ யாண்டிங் கொ ருமொழி யருளி யுள்ளொளி விளக்கவே வேண்டு, மகந்தனி லிருந்து மம்பர வுருவா யமைந்தநற் சிவசிதம் பரமே. (௧௫)

ஆதியு நடுவு மந்தமு மில்லா வகண்டவா னந்தமாம் பொருளே, சோதியே யென்னுட் டூண்டிடா விளக்கே சுத்த மாம் பரசிவ வொளியே, நேதிசெய் யறிஞர் நேயமா மருளே நினைவினி லொளிர்ந்திடு நினைவே, நீதிய மில்லா நெஞ்சுமா மவித்தை நீக்கியாள் சிவசிதம் பரமே. (௧௬)

தற்பர மான சிவனிடத் துண்டாஞ் சத்தியே மனமதாய் விளங்கி, சிற்பர மதனைச் செகத்தெனக் காட்டிச் சிறந்துள தெனவெனக் கருளு, மற்புத மான வருமறைப் பொருளே யடியருக் கருள்செய விரும்பிக், கற்பனை கடந்த கற்பகத் தருவாய்க் கழனியி லமர்ந்தவொண் கனியே. (௧௭)

மாதவ முடைத்தாய் மகத்துவ மடைந்த மாமணி போன்றுள வடியார், காதலோ டடைந்து கடவுளை யறியக் கருதி யவிருப்பினைக் கண்டு, போதமா முருவைப் பொருந்திட வளித்த புண்ணிய மூர்த்தியே யுனது, பாதமே கதியாய்ப் பணிந்தன னடியேன் பணித்தருள் சிவசிதம் பரமே. (௧௮)

நன்மன மில்லா நாயினுங் கடைய நாயினுக் கருளியநாதா, பொன்மய மான வம்பலந் தனிலே பொற்புட னடித்துள போதா, வென்மய மெனக்கே வெளிதினி லளிக்க வென்னுடைக் குருவதாய் விளங்குஞ், சின்மயப் பொருளே சித்தமதமர்ந்த தெய்வமே சிவசிதம் பரமே. (௧௯)

மானுட வடிவாய் வந்தவ தரித்த வாணமே மன்னுயிர்த் துணையே, யானுமா யெனது வடிவமா யிலங்கு மீனமாங் கனாங்கம தகற்றாய், வானமாய் மண்ணாய் வளியொடும் புனலாய் வன்னியாய் வளர்கதிர் மதியாய், மானுமா யிலங்கி வடிவம தாகா மாசிலாச் சிதம்பர தேவே. (௨௦)

அப்பனே யன்னையே யாருயிர்க் கமுதே யானந்த மாகியே நிறைந்த, துப்பனே துரியா தூமணி விளக்கே துரியத்தி கதீதமாய் நின்ற, செப்பொனே சிவனே செம்பொருட் பொலிவே தேசிகா சிதம்பர நாதா, வொப்புயர் வில்லா வுன்வடி வளித்த வுணர்வருட் சிவசிதம் பரமே. (௨௧)

தன்னுடைச் சொருபஞ் சிவமென வளித்த சங்கரா தாணுவே தலைவா, வென்னுடைக் குருவா யெழுந்துள வீசா யேகமே யென்னரும் பொருளே, மின்னினு மொய்தாருஞ் சகத்தினை நீக்கி விழுப்பொரு ளிதுவெனக் காட்டும், பொன்னி

னற் பொருளே பொருளெலா நிறைந்த போதமே சிவசிதம் பரமே. (உஉ)

கனகமன் றதனிற் களித்தினி தாடுங் கடவுளே ககன மாய் நிறைந்த, வுனதுபொற் பதமெற் குறை விட மாக வுகந் துநீ யளித்திட வேண்டும், மனமய லகற்று மாசிலா மறையே வழங்கிய வான்சுடர்க் கொழுந்தே, தினகரன் முதலாந் தேவ ர்க்குந்தேவே தேசுடைச் சிவசிதம்பரமே. (உ௩)

ஈசனு மெழுந்த வீசர்க்கு மீசா வெம்முளே நிறைந்திடு மிறைவா, பாசம தொழித்துப் பத்தருக் கருளும் பரமனே ப ரமநா டகனே, நேசம தில்லா நீசனே னெனக்கு நின்கழற் கன்பினை யளித்துத், தோசம தகற்றிச் சுற்றமா யறிவாந் து ணிவருள் சிவசிதம் பரமே. (உ௪)

அன்னையும் பிதாவு முன்னறி தெய்வ மாமென வறைந் தனர் பெரியோர், தன்னையு மறியேன் சதுர்மறை யறியேன் சதுர்வித முத்தரை யறியேன், என்னையு மறியே னிறைவனை யறியே னிறைவனு மொன்றென வறியேன், நின்னையே தந் தை தாயென வறிந்தே னிமலமாஞ் சிவசிதம் பரமே. (உ௫)

ஓதுமா மறைக ளாயிரங் கோடி யுன்னுருத் துதித்திட வறியா, காதும்வா தியர்கள் கண்டடி பரவிக் களிப்பரோ கன கவம் பலவா, நீதியே நினது திருவடி கண்டு நித்தமுங் கை தொழ வடியேன், பாதியா மனத்தைக் கெடுத்திடு ஞானம் பகர்ந்தருள் சிவசிதம் பரமே. (உ௬)

தற்பர சிவமே கற்பனை யாலே சகலகே வலமதா யிலகு மற்பமு மறிவில் வேறிலா தடங்கு மதனையே யறிருவ மொன்

றுஞ், சொற்பனம் போலத் தோற்றிடு முலகுஞ் சொரூப மா யிலகுறு மென்று, நற்பத மாக வெனக்கருள் புரியு நாத னே சிவசிதம் பரமே. (௨எ)

வாக்கினாற் றுதிக்க மனத்தினு னினைக்க வந்தனை பல புரிந் திடவே, பாக்கியம் போல வெழுந்துள வுனது படிவமே நோக்கியா னிருந்தேன், நீக்கிலாப் பரமாந் துவிதநூ னாத் தை நீயெனக் களித்திட வேண்டுஞ், சாக்கிராட் டியங்க ளிறந்திடத் திலகு சம்புவே சிவசிதம் பரமே. (௨அ)

சுத்தமாம் பரத்திற் றோற்றிடு முலகுஞ் சொரூபமா யில கிட வதனை, நித்தமென் றுணரு மெய்ம்மையோர் தனக்கு நீய ருள் செய்திட வேண்டுங், கத்தமோங் காவாய்க் கருதிடுங் கருத்தைக் கண்டிடுஞ் சாட்சிமாத் திரமாஞ், சித்தியை விரு ம்புஞ் சீரடி யார்கள் சித்தமாஞ் சிவசிதம் பரமே (௨௯)

பொன்னவன் குலிசன் புனிதமா முராரி பூவையி னிற நன் மலரோன், பன்னரு மருக்கன் சந்திரன் பவனன் பாரி னில் முனிவரர் பலரு, மின்னமுந் தேடி நின்னடி யறியா தி னைத்தன ரென்பதை யுணர்ந்து, நின்னடி கடை நினைத்தன னடியேன் நிலையருள் சிவசிதம் பரமே. (௩0)

கண்ணென வெழுந்த கற்பகக் கனியே கருணையா மலையென வமர்ந்த, விண்ணெனுஞ் சோதி விமலையா மதிசே வேதனே வேதமு நினைந்து, வெண்ணுதற் கரிய மெய்ப்பொரு மானே யேழையே னுளத்தினி லிருந்தே, கண்ணனைத் தயனித் த கடவுளே யென்னைக் காத்தருள் சிவசிதம் பரமே. (௩௧)

வேதனு மாலும் விண்ணவர் குழுவும் விமலமா முனிவ ரர் யாரு,மாதவன் முதலா மரும்பிறிர் யாரு மறியலார் மறை களு மறியாப், போதவா னந்த மாகிய பொருளே புண்ணிய வுருவமா யெழுந்து, சீதமாங் கழற் தனிலடி யார்க்குச் சிவம ருள் சிவசிதம் பரமே. (௩௨)

கண்ணையே யளிக்குங் கண்ணனே ககன கடவுளா ரெவர் க்குமே கடவுள், விண்ணென விளங்கி வீடருள் விமலா விகிர் தனே விண்ணவர் பிரானே, யெண்ணம திறந்த வெந்தையே யிறைவா வேழையேன் றனக்கருள் புரிந்த, நண்ணினர்க் கி னிய நாதனே நின்னை நம்பினேன் சிவசிதம் பரமே. (௩௩)

சிற்பர விசும்பிற் கற்பனை யாலே செகபர மெனும்த் தோ ன்றி, யற்பமும் வேருய் விளங்கிடா திருந்து வடங்கிடு மெ ன்னவே வேதம், பற்பல புகன்றும் பாவியேன் மனத்திற் பதிந்திடா தழன்றன னந்தோ,சொற்பதங் கடந்த துரியமே நின்னைத் தொழுதனன் சிவசிதம் பரமே (௩௪)

அண்டமுங் கடந்த வரும்பெருஞ் சோதி யானந்த மான பே ரருளாய்ப், பிண்டநின் றகன்ற பேரருட் பிழம்பாய்ப் பெ ரும்பற்றப் புலிதனி லமர்ந்தோய், அண்டருந் தொழுதுன் னடிதனில் வீழ்ந்தங் கருமறை முடிவினுற் றறிக்கத், தொ ண்டர்க ளுளத்திற் றோய்ந்திடுமறிவே தூயநற் சிவசிதம் ப ரமே. (௩௫)

கற்பனை கடந்த ககனநன் மணியே கனகவம் பலத்தானே நடஞ்செய், பொற்பினிற் றிகழும் பொறிகளி னாலும் பொரு ந்திடற் கரியமா பொருளே, சிற்பர வெளியே தேவினு தே

வாஞ் சிதம்பர நாதனைச் சிறந்த, நற்குணக்குன்றே நாயகா வெனக்குன் னலமருள்சிவசிதம்பரமே. (௩௬)

எவனுடை யருளா லிந்தமா ஞால மெலையிலாச் சித்தா யுணரு, மெவனுடை யருளா லிந்தமா கரண மெலையிலாச் சுத்ததா யிலகு, மெவனுடை யருளா லிந்தமா வவித்தை யெலையிலா வந்தமா யொளிரு, மவனெனுங் கற்ப தருவினை லன்றி யறிவரோ சிவசிதம் பரமே. (௩௭)

குற்றியிற் கள்வன் குறுகயிற் றரவு கொடியதாங் கானலிற் புனல்போ, லுற்றதோர் விடய மனைத்தையு நீக்கி யுனதரு வதனையே நோக்கிப், பெற்றபே றனைத்தும் பேரமு தாக்கி பேரின்ப மதனையே விரும்பி,யுற்றதோர் வெறிய லுனது பொற் கமல முனவருள் சிவசிதம் பரமே. (௩௮)

விடயமே மெய்யென் றுளத்தினிற் கருதி மீண்டுமீண் டதனையே விரும்பிக், கடையினைப் போன்று வலைந்துழ லிந்தக் கசடனை யாளவே நினைவாய், முடையுடை யுடலை நானென மயங்கி முழுநர கடைந்திடு மெனக்குந், தடையிலா ஞானந் தந்தெனைக் காத்த சங்கரா சிவசிதம் பரமே. (௩௯)

ஆவியோ டாக்கை யடைவுறும் பொருள்க ளவையெல்லாங் கைக்கொண்டு நீயிப், பாவியேன் மனதைப் பதைப்பற நிறுத்திப் பயமெலா மகற்றியே யருள்வாய், கோபமே முதலாங் கொடும்பகை தனையுங் குலையவே தவிர்த்துநீ யாளக்,காவினை நிறைத்த கழநியம் பதியிற் கலந்துள சிவசிதம் பரமே()

முத்தனே முதல்வா மூவராங் கடவுள் முதல்மறை முடிவெலாந் தேடு,மத்தனே வையா வம்பலத் தாடு மரசனே வருட்பெருங் கடலே, மத்தனேன் மயங்கி மங்கையர்க் காளாய் மாளுத னீதியோ மணியே, தொத்தர வில்லாத் துரியமே யாக்குந் தோன்றலே சிவசிதம் பரமே. (௬௧)

எப்பொருள் களுமா யிலங்கிடு மறிவே யெம்முளே யமர்பெருஞ் சோதி, சொப்பனம் போலத் தோற்றமாஞ் சகத்தைத் துரியமே யாக்கிய சுடரே,கைப்பொரு ளாவி காயமுங் கொண்டு கழநியம் பதிதனி லெனையுஞ், செப்புதற் கரிய சின்மய மாக்கித் திகழ்த்திடுஞ் சிவசிதம் பரமே. (௬௨)

அரிமுத லரனு மம்புயத் தவனு மண்டரு மருமறை முடிவுந், துரிதமாய்த் தேடித் தொடர்வரி தாகித் தூயமா வெளியதாய் நின்ற,பெரியதோர் பொருளே பேரொளிப் பிழம்பே பினுமுனு மின்றியே விளங்கு, மரியமா முனிவ ரமரருங் காணு வாதியாஞ் சிவசிதம் பரமே. (௬௩)

அண்டமா யண்டங் கடந்ததா யண்டத் ததிபனு மாதியே யாகிப்,பிண்டமாய்ப் பிண்டங் கடந்ததாய்ப் பிண்டத் ததிபனாய்ப் பேரொளி விளக்காய்க், கண்டிட வெல்லாங் கடந்ததோர் வெளியாய்க் காரண காரிய மிலதாய்த், தொண்டர்களெல்லாந் தொடர்ந்துகொண் டாடுஞ் சோதியாஞ் சிவசிதம் பரமே. (௬௪)

மாசிலா மணியே மரகதத் தொளியே வான்சுடர் தனக்குமுட் சுடரே, யேசிலாஞான மிமைப்பொழு தருளு மிணையிலா வானந்தக் கடலே, கோசமா மிந்தப் பின்னலை யகற்

றிக் கோசத்திற் கதிதனுய் நின்ற, வீசனை யெனக்கே யெள்
ளிடைக் காட்டு மெழிலுடைச் சிவசிதம் பரமே. (௩௫)

அம்பொனே மணியே யடியவ ரகத்தி லுறைவிளக் கனை
வதாய் நின்ற, செம்பொனே பவளச் செழியொளி யாகித்
திசையெலாங் கலந்துள வழிவே, பம்பரம் போலச் சுழலுமு
மனத்தைப் பரந்தெழா வகையெனக் கருளிச், செம்பொருள்
காட்டத் தில்லையி னிறைந்த தேவனுஞ் சிவசிதம் பரமே. ()

பந்தமாம் பகையைப் பாறவே யறுத்துப் பரகதி யடை
விக்க விரும்பிச், சிந்தனைசெய்து செகமெலா மித்தை சேத
னமொன் றுமே திரமென், றந்தமை யெனக்கே யறவருள்
செய்ய வெழிலுலாங் குருவடிவாகிப், பந்தவே ரறுத்த பரம
சற் குருவாம் பரமனே சிவசிதம் பரமே. (௩௭)

ஒருவருங் காணு வொளியெனக் கருளி யொருபொரு
டன்னையே யுளத்திற், கருதியே யிருக்கக் கருணையே புரிந்த
கருணைமா கடலினைக் கண்டு, திருவடி வணங்கிச் சிந்தமை
துருகிச் செங்கணி னீர்வர நின்று, குருவடி தொழுதிங் குய்
யுநா ளுளதோ கோதிலாச் சிவசிதம் பரமே. (௩௮)

சிதம்பர குரவன் றிருவடி யடைந்தாற் சிறப்புத்துவை
றத்துவ ஞானஞ், சிதம்பர குரவன் றிருவடி நினைந்தாற் செக
மெலாஞ் சிவமய மாக்குஞ், சிதம்பர குரவன் றிருவடி சா
ர்ந்தாற் சேதன மாகவே திகழுஞ், சிதம்பர குரவன் றிரு
வடியென் றுஞ் சிதமாஞ் சிவசிதம் பரமே. (௩௯)

பதம்பெறு மடியார் பரகதி வேண்டிற் பரமசற் குரவனை
யெழுந்த, பரசிதா காச னடியிணை பணிந்து பாவனை செய்

யவே வேண்டும், பரகதி யவன்ற வடியரி லொருவர் பதம்ப ணிந் தடையவே பலிக்கும், பரசிவ ஞானே பரகுரு வன்றிப் பலிக்குமோ சிவசிதம் பரமே. (ரு 0)

நலமிலா வடியே னாயினுங் கடையேன் நாய்வயி னுள்ள தோர் குணமு, நலம்பெற வடையே னற்குண மிலதா நாரி யை நயந்துநா னிழிந்தே, னலமுள ஞான நவின்றிடும் பெரி யோர் நடுவிலே யிருந்துநா னடித்தேன், நடுவதா ஞான நாயி னுக் கருளு நாதனுஞ் சிவசிதம் பரமே. (ருக)

சொற்பன மாகத் தோற்றிடுஞ் சகத்தைச் சுத்தமா யுள் ளதாய் நினைந்து, கற்பனை யாகக் கருதிடா லென்போற் கடை யரு முலகினி லுளரோ, முற்பவம் புரிந்த தவத்தினா லன்றி முடியுமோ வருட்குரு வருடான், தற்பர ஞானந் தானியி லெனையுந் தந்தது சிவசிதம் பரமே. (ருஉ)

பொன்னினிற் பணியும் புவிதனிற் கடமும் புனலினி லலையுமே போல, வென்னிடை யெழுந்த வுலகெலா மென்னி னுள்ளன வன்னிதா யுளதோ, பன்னக சயனன் முதலிய தேவர் பற்பல வடிவமா யுறினு, மன்னிய நினது சச்சிதா னந்த வடிவமே சிவசிதம் பரமே. (ருங)

அருளதே யுருவா யமர்ந்துள வமல னம்பர மாகியே யொளிருங், கரியதாய் நின்ற கடவுள் சிற்பரமாங் கனகவம் பலத்திலே நடிப்போ, னரிமுகற் கமல னண்டரு மறியா வானந்த வுருவனென் போல்வார், பரிவுடன் வணங்கித் துதி செயக் குருவாய்ப் பரிந்தெழுஞ் சிவசிதம் பரமே. (ருச)

முத்தருக் குரிய முழுமறை யறியா முதல்வனே பாரினி லெழுந்து, சுத்தமா ஞானந் தோன்றிட வெனக்குச் சுருதியம் பொருளினை யருளான், மெத்துமிவ் வுலகம் வெறும் வெளி யென்றே விளங்கவே விளம்பினன் விமல, தத்துவ மான தற்பதப் பொருளே தானெனுஞ் சிவசிதம் பரமே. ()

எல்லையில் பரமாத் துவிதஞா னத்தை யியம்புநற் குருபர னாகி, நெல்லைநா யகியின் றிருவரு ளதனை நேரினி லடைந்துள பெரியோன், கல்லையுங் கனியாய்க் கரைக்கும்வல் லபனாய்க் கழனியி லமர்ந்துள முதல்வன், றில்லையி னடித்துச் சிதம்பர தேவாய்த் திகழ்ந்தனன் சிவசிதம் பரமே. (௫௬)

முத்துரா மேச னருளிய ஞான வாரியை முழுதுண்ட முனிவன், பத்தர்க ளுய்யப் பரமகா ரணனாய்ப் பரமமாங் கழனியிலெழுந்த, வெத்தவர் களுந்தம் மிணையடி பிறியா திலங்கிட நின்றிடு மிறைவன், கொத்தவா லீசன் கிருபையை யடைந்த கோதிலாச் சிவசிதம் பரமே. (௫௭)

இப்படி யதனிற் பழகிடு மடியா ரிடர்மன மொழித்திட நினைந்து, மெய்ப்படி யாக விடயங்கள் முனிந்து மேவிய சிரவணப் பொருளைக், கைப்பட விரும்பிக் கனகமன் றதனிற் களித்துறை கடவுளைக் கருதி, யொப்பிலா மனன முயர்மனத் தழுந்த வுணர்த்திய சிவசிதம் பரமே. (௫௮)

நிதித்தியா சனத்தை நியமமாய்ப் பழகி நெடிதுள காலங்க ணிலைக்கக், ததியதாஞ் சமாதி யதனையே பயின்று காலங்கள் கழித்துள வடியார், முதிதநற் குணமே யோருருவான

முத்துரா மேசனல் லருளாற், பதிதனை யடையப் படியொ ழுங்
காகப் பணித்துள சிவசிதம் பரமே. (௯)

இப்படி யதனி னிணையிலா ஞான மெய்நிலையொன் றினைத்தெ
ரிந்தச், செப்படி போலுஞ் செகத்தைமென் றகற்றிச் சேதன
வுருவமாய் விளங்கி, மெய்ப்படி வந்தான் விமலனைக் கருணால்
விளங்கிட வேண்டுமென் றறைந்தா, ரொப்புயர் வில்லா வொ
ளியுரு வான வுயர்வுடைச் சிவசிதம் பரமே. (௧௦)

சொற்பனம் போலத் தோற்றிடுஞ் சகத்தைச் சொருப
மாய்க் கண்டிட வேண்டின், கற்பனை யனைத்துங் கனசிதம்
பரமாய்க் கண்டுளங் கரைத்திட வேண்டு, நிற்பய மான நிலை
யினை யுணர நினைத்திடு மடியவர் நிகழுஞ், சிற்பர முத்தரா
மனை வணங்கிற் சேர்ப்பனாற் சிவசிதம் பரமே. (௧௧)

சிற்பர மதனைச் செகத்தென வறிந்து சிதடரைத் திரிந்
துள வெனக்குஞ், சொற்பன சமமாய்த் தோற்றிடுஞ் சகத்
தைத் தோற்றமாத் திரமென வருளிக், கற்பனை கெடுத்த
கடவுளே யெனது கருத்தினி னிறைந்திடும் பிரமந், தற்ப
ரப் பொருளாய்ச் சகளநிட் களமாய்ச் சார்ந்துள சிவசிதம்
பரமே. (௧௨)

விடயமெய் யெனவே வியந்துநா னடைந்து வெரு
வித வரந்தையிற் படிந்து, கடையனைத் திரிந்த கடையனை
யென்றுங் காத்தருள் புரியவே கடவாய், கடையிலா ஞானந்
தந்தருள் புரியுந் தந்தையே கருணைநற் றாயே, முடையுடைத்
தேக முதலென லகற்று முத்தனே சிவசிதம் பரமே. (௧௩)

கருங்கலா முளத்தைக் கரைத்தமு தாக்கிக் கனிவருள் புரியவே கருதா, யிரும்பைநேர் மனத்த னென்செய வல்லே னென்னுளத் தீங்கையா ரகற்றுங், கரும்பினின் ரசமே கனியினின் சுவையே கண்டொடு கலந்தநற் பாகே, யரும்பொனே மணியே யம்பலத் தாடு மையனே சிவசிதம் பரமே. ()

என்றுமே யாண்ட வெங்குரு பரனே வெம்முடை யீசனே யென்று, கன்றினை யீன்ற வாவெனக் கனிந்து கனிந்துமே யுருகிடு மடியார்க், கென்றுமே ஞான வெளிதினி னருளி வெம்முளே யறிவதா யிலங்கி, மன்றுளே நடித்தும் வானவ ருணரா மாசிலாச் சிவசிதம் பரமே. (௩௫)

உருவமு மிலதா யருவமு மிலதா யுருவமு மருவமு மிலதாய்க், கருவமு மிலதாய்க் கற்பனை யிலதாய்க் காரிய காரண மிலதாய், நிருமல மான பிரமநீ யென்று நேரதா யனுக்கிர கித்த, வருமைநற் பொருளே யம்பலத் தரசே யானந்த சிவசிதம் பரமே (௩௬)

செப்படி போலச் செனித்திடு முலகைச் சேதன மாகவே யறிந்து, தப்புத லில்லாச் சான்றதை யுணருஞ் சமமுள பெரியவ ருளத்தே, யொப்புயர் வில்லா தொருவனா யிருந்த வொண்மலர்ப் பாதம தெனக்குக், கப்பிலா தளித்த கருணைமா கடலே கனகநற் சிவசிதம் பரமே. (௩௭)

பிரணவ வடிவாம் பிரமநற் பதத்தைப் பேணிய பெரியவ ருளத்தே, யரணம தறைந்த வம்பர வுருவ மகப்படு மெனவறை கடவுள், கரணம தெல்லாங் கடந்தவப் பொருளைக் காட்டிடுஞ் சிற்பர மூர்த்தி, புரணம தான புத்தமு தளித்த புண்ணியா சிவசிதம் பரமே. (௩௮)

நித்திய மான நிலையெனக் கருளி நிலையிலா மனமதை யகற்றிச், சத்தியப் பொருளைத் தானெனக் காட்டிச் சமத்துவ முளத்தினி னிறைய, முத்தியா மின்ப வாரியின் மூழ்க மோகமுஞ் சோகமு நீங்க, யெத்தியே யாண்ட வெங்குரு பரனு மெழுந்துள சிவசிதம் பரமே. (சூகூ)

ஆண்டதோ ரமல னருளுரு வுணரி னண்டமே யாகியே நிறைந்தோன், காண்டகை யில்லாக் கடவுளெம் பெருமான் கனகவம் பலத்துளே நடிப்போன், மாண்டநின் மலமா மனமதி லொளிரு மாசிலா மணியென வயங்கி, யீண்டெனைக் காத்த வெங்குரு பரனு யிசைந்துள சிவசிதம் பரமே. (எ0)

சந்ததம் வேதஞ் சாற்றிடப் பறைபோற் சத்திய வீசரும் வணங்க, வெந்தமுள் ளிருந்தே யிணையடி காட்டி யெங்குரு பரமனு யிலகு, மந்தசிஞ் ஞாசு வறிந்திட முடியா மாமறை விளம்பவு மறியா, வந்தமொன் றில்லா வறிவுரு வடிவா மமலமாஞ் சிவசிதம் பரமே (எக)

சத்திய முத்தன் சான்றின னநலன் சங்கரன் சம்புவேயாகி, யெத்திசை களுமே நிறைந்துள விறைவ னேழைபங் காளனே யாவன், முத்தியை விரும்பு மடியருக் கருளு மூலமாங் கடவுளெங் குரவன், சித்துநற் சத்தன் சேதன ரூபன் சிவன்பவன் சிவசிதம் பரமே (எஉ)

பந்தவே ரறுக்கப் பழமறைப் பொருளே பார்த்தினி லெழுந்துவந் தினிய, சுந்தர வேடந் தரித்தருள் சுமுகன் சுகுணமா மலையெனுந் தோன்ற, லெந்தமை யாளத் தோன்றிய

கடவு ளெங்குரு பரனெனு மீசன், றந்தைபோ லெவர்க்குந் தயவுள நாதன் சாட்சியாஞ் சிவசிதம் பரமே (எ௩)

அகங்கர மென்னு மானையை வெல்ல வரும்பொறை யங்குச மளித்தோ, னிகன்மத வேளைப் புறங்கொளச் செய்யு மெண்ணமெற் களித்திடு மிறைவன், சகமது வனித்தஞ் சத்தியஞ் சிவமென் றுணர்த்திமெஞ் ஞானத்தை யருள்வோ, னகமதி னிறைந்த வருளுரு வடிவ னனந்தனுஞ் சிவசிதம் பரமே. (எ௪)

தோத்திரஞ் செய்யத் துணையடி பணியத் தூயமா மலரினை யெடுத்துச், சாத்திர விதியிற் சாத்தவென் மனது சத்துவ குணத்துட னினைய, நேத்திர மதனி னின்றெழுங் கண்ணீர் நெடுமலை யருவிபோ னிகழக், காத்திர முருகிக் கரைந்திட வளித்த கடவுளே சிவசிதம் பரமே (எ௫)

மாயையின் வசத்தான் மயங்கிடு முயிர்கண் மயக்கினைத் தீர்த்திட வெழுந்து, தாயெனப் பரிந்து சத்தியம் பிரமஞ் சகத்தெனு மயக்கிலை யெனவே, ஓய்விலா தோர்ந்தா லுண்மையா நிலைதா னுறைக்குமென் றனுக்கிர கித்த,தூயமா மணியே துன்பினை யகற்றுந் துரியமே சிவசிதம் பரமே. (எ௬)

சித்தம தொழித்துத் திருவருள் பெற்றுச் சிவத்தினி லிரண்டறக் கலக்கு, மத்தகை ஞான மருளுநற் புனித னடிமலர்க் கன்புசெய் தவனை, நித்தமு நினைந்து நிரந்தரம் பணிந்து நெடியமா பணியினைப் புரிந்தா, லுத்தம குரவ னருளுவ னென்றே யுணர்த்திய சிவசிதம் பரமே (எஎ)

மனநிறு லெண்ணி வந்ததிவ் வுலக மனமதைக் கெடுத் திடி லிலதா, மெனவறி பெரியோ ரிந்தமா மனதை யிமைப் பினி லழித்தினி திருப்பார், கனமுற நினைத்துக் கலங்குவர் சிறியோர் காரணங் காண்கில ராகி, வினயம தாக வுணர்தி யென்றுரைத்த மெய்புருச் சிவசிதம் பரமே. (எஅ)

ஓதியு முணர்ந்தும் பிரர்தமக் குரைத்து மொழுக்க மாய்ச் செய்கையா னடிக்கு, நீதியி னடவா நெடியமா மூடர் நேசமே நிலையெனத் துணிந்தேன், பேதியா வுனது பெரிய தாங் கருணை பெறும்படி யெனக்கருள் புரிவா, யாதியே யருளே வம்பலத் தரசே யையனே சிவசிதம் பரமே. (எகூ)

சற்குரு வருளா னித்தியப் பொருளைச் சாதன சதுட்டய மடைந்து, சிற்சுக விருப்ப முடையசிஞ் ஞாசர் திடமுட னடைகுவ ரதனைக், கற்கவுங் கேட்க நினைக்கவு மறியாக் கன மய லுடையனே வறிவேன், சொற்பொருட் கடங்காச் சோதி யை யருளுந் துய்யமா சிவசிதம் பரமே. (அ0)

அலையெறி கடல்சூழ் புவிதனி னவமே வாசையாம் வலை யினுற் பிணிக்கக், கலையறி யாது நிலையறி யாது காமுக னுகி யே யந்தேர், விலைமுலை மாத ரிடையினிற் சிக்கி வியனறி வெள்ளள விலதாய், நிலைதவிர்ந் தழலு மெனக்கருள் புரிகு னின்க்கழ காஞ்சிதம் பரமே. (அக)

ஆசையா மிருளா லகங்கரப் பேயா லனுதின மரிவையர் விழைவாம், பாசமாங் கயிற்றாற் பிணிப்புற வடியேன் பாத வித் தழலுத னலனே, வீசனுங் குருவா யிசைந்துள நீயு

மென்னுளக் குகைதனி லிருந்தே, நேசமா ஞான நெஞ்சதி னிலைக்க நிலையருள் சிவசிதம் பரமே. (அஉ)

கோசமா மிந்தக் குகைதனக் கயலாய்க் குலைந்திட லவ த்தைக ளனைத்தும், பாசமாஞ் சரீரப் பற்றதை யொழிக்கப் பரகதி கொடுத்தருள் செய்ய, நீசனென் மனதா நெடும்பகை வெல்ல நெல்லைநா யகியமர் பதிவாழ், தேசிகா வுனது திரு வடி தொழுதேன் சின்மயச் சிவசிதம் பரமே. (அங)

மன்றினி லாடு மரகத மணியே மாசிலா வுளத்தினி லொளியே, பொன்றிடு முடம்பு பொருந்திடா வெளியே பொதுவினி லெழுந்தருள் பொருளே, நன்றியுந் தீது மிலா தநல் லுணர்வே நலமுள வேதத்தி னலமே, யொன்றினுந் தோயா துயர்சிகா மணியே யுண்மையே சிவசிதம் பரமே.

கொடியபா தகங்க ளுருவுகொண் டனைய கோதுடல் வினையினு லெடுத்து, மடியுமவ் வளவு மைம்பெரும் பவத்தை மனதுடல் வாக்கினு லியற்றிக், கடியமா நரகில் வீழ்ந்துநான் வருந்தக் காண்பது நினக்கழ காமோ, நெடியமா கருணை நிதியுநீ யலவோ நிமலனே சிவசிதம் பரமே (அரு)

சத்திய னமலன் சாந்தன்மா தேவன் சான்றினன் சங்க ரன் சம்பு, நித்தியன் முத்தன் புத்தனே புராணன் நிரஞ்ச னன் நிர்க்குண னிமலன், சுத்தனே சுயம்பு சூனிய னசங் கன் சுதந்தர னச்சுதன் சோதி, முத்திமை யளிக்கு முடிவிலா முதல்வன் மோனநற் சிவசிதம் பரமே. (அச)

அவித்தையி னிடத்தே யகங்கர முண்டா யதனினு லெனதுபற் றுண்டாய்த், தவித்தல்செய் துன்ப மோகசம்

சார சகத்திர ளனைத்துமுண் டாகி, யவித்திடு நரக சுவர்க்கமே முதல வனைத்தினு மடைந்தடி பட்டுப், புவிக்கணே சனித்துத் துயருறு தருள்வாய் புனிதனே சிவசிதம் பரமே.

ஆலயப் பணிகள் செய்திட வறியே னரனடி பணியவு மறியேன், காலையு மாலை நினைநினைந் தறியேன் கடவுளைத் துதித்திட வறியே, னூலினைத் தினமுங் கற்றிட வறியே னுவன்றிடு பெரியவர் தங்கள், காலையுங் கதியாய்ப் பற்றிட வறியேன் காத்தருள் சிவசிதம் பரமே. (அஅ)

மாயையின் வசத்தின் மயங்கிடு மடியேன் மயக்கினை யறுத்தருள் புரியத், தாயென வூட்டித் தந்தைபோல் வளர்க்கச் சங்கரா வேண்டுமிப் பொழுதே, பேயெனு மனத்தோ டிருந்திட முடியாப் பேரின்ப மெனக்கருள் செய்ய, நாயினுக் கெதிரே யெழுந்தருள் புரிவாய் நாதனே சிவசிதம் பரமே.

சிருட்டியே யாதி செயலினுக் குரிய தேவனு யெழுந்தது நீயே, மருட்டிற மாயை வசமதா யெழுந்து மயக்கினை யடைந்தது நீயே, கருக்கெட வடியர் கருத்துடன் கலந்து கடவுளை நினைந்தது நீயே, தெருட்கழ லெமக்குச் சிரத்தினி லமைத்த தெய்வமே சிவசிதம் பரமே. (கூ0)

கற்றவர்க் கருளுங் கற்பகக் கனியே கரையிலாக் கடலென நிறைந்து, முற்றுநற் றவத்தோ ருளத்தமு தூற மோனமா ஞானம தளித்த, குற்றமில் பொருளே குணக்கடலமுதே கோதிலாக் கழகியின் வாழ்வே, பற்றுத லில்லார்க் கருளுநற் றேவே பரமனுஞ் சிவசிதம் பரமே. (கூக)

சத்திய முத்தன் சாந்தமெய் யுருவன் சற்குண முடையவா னந்த, னித்திய பூன்ற னிமலமாம் வடிவ னிர்க்குண முடையதோர் முனிவ, னெத்திசை களுமா யிலங்குசித் துருவ னெம்முளத் தெழுந்ததோர் பகவன், சித்தர்க ணிறைந்த கழநியி லமருந் தேவனுஞ் சிவசிதம் பரமே. (கஉ)

பேதம தில்லாப் பெரும்பொரு டனையே பிரிவிலா தளித்தநற் பெரியோன், போதம தில்லாப் புன்மையேன் றனக்கும் பொருவிலா னந்தமே யருளு, மாதியா மிறைவ னருங்குரு பரனு யரியதென் கழநியி லமர்ந்து, நீதியோ டடைந்த வடியருக் கிரங்கு நிமலமாஞ் சிவசிதம் பரமே. ()

மெய்யடி யார்கள் விரும்பிய தளிக்கு மெய்யனே யெனதுகண் மணியே, பொய்யர்தம் பொய்யே போதமா முளத்திற் பொருந்திய வான்சுவை யமுதே, யையமி லறிவே யகமதி னிறைந்த வானந்த மாகுணக் குன்றே, செய்யதா ளளித்துச் சிற்சுக மயமாய்ச் செய்திடுஞ் சிவசிதம் பரமே. (கச)

காரிரு ளனைய கருத்தினேன் றனக்குங் கண்ணதா மொளியினைத் தந்தா, யோரிரு ளகத்திற் பிடியா தகற்றிப் பெருமைதந் தருள்செய வேண்டு, நாரியின் வசத்தி லழிந்திடா துளத்தை நாதநீ யருளியே யெனக்கும், பேரியல்பான பெரும்புக ழளித்த பெரியமா சிவசிதம் பரமே. (கரு)

செகமயக் ககற்றுஞ் சிதம்பர குரவன் றிருவடி தனைத் தொழு திடவே, யகமதி னிறைந்த வம்பர வுருவை யருளுவ னறிவுறித் திடவே, பகலவன் போல வொருபடித் தாகிப்

பத்தர்க ளுளமதிற் றிடமாய், மிகல்குறை வின்றி யிருந்திடு மிறைவன் மிக்கநற் சிவசிதம் பரமே. (௯௬)

ஆத்தும வுருவை யகமதிற் றிடமா யருளுவ னம்பரத் ததிதன், சாற்றுமுக் கரணத் தால்வழி பட்டாற் சாட்சியை யருளுவ னருளாற், போற்றுமெய் பொருளும் பொய்யெனத் தெளிவாய் புகலுவன் போதமே வடியாய்த், தேற்றமாய்த் தெளிந்த சித்தர்தம் முளத்தே திகழ்ந்திடுஞ் சிவசிதம்பரமே.

அண்டம தனைத்து மறிவெனக் காட்டு மருளுரு வுடையவெம் மையன், றெண்டர்க ளகத்தே துரியமாய் நிறைந்த சோதியா னந்தமா யமைந்தோன், கண்டவர் கண்ணுங் கருத்துமே யழியக் கனகமன் றதினடம் புரிந்து, வண்டுகள் பாடுஞ் சோலைசூழ் கழநி வதிந்தனன் சிவசிதம் பரமே. ()

அஞ்ஞான மென்னு மரங்கினை யழித்து வகங்கரப் பேயினை யொழித்து, மெய்ஞ்ஞான விளக்கை விரிவுறச் செய்து மெய்ம்மன முதலிய வகற்றிப், பொய்ஞ்ஞால மனைத்தும் பொருளல வென்று போதமே யாக்கிய புனிதன், செஞ்ஞான மெல்லாஞ் சேர்ந்தொரு வடிவாய்த் திகழ்ந்திடுஞ் சிவசிதம் பரமே. (௯௯)

புகழுநற் பெரியோர் புண்ணியம் வாழும் புனிதமாங் கழனிநற் பதியிற், றிகழ்ந்தநற் கொற்ற வாளிறை யடியைத் திருநெலை யம்மைநற் றூளைச், சகம்புகழ் முத்து ராமனற் பதத்தைச் சார்ந்துநற் றவம்புரி யடியார்க், கிகம்பர மிரண்டு மருளுமெங் குருவா யிலங்கிடுஞ் சிவசிதம் பரமே. (௧௦௦)

சிதம்பர நாமஞ் செவிதனிற் கேட்டாற் றீர்ந்திடுந் தீவினை முழுதுஞ், சிதம்பர நாமஞ் சிந்தையி லுணர்ந்தாற் றீர்ந்திடுஞ் செகத்தெனு மயக்கஞ், சிதம்பர நாமஞ் சிந்தையிற் பதிந்தாற் சின்மய மாகியே திகழுஞ், சிதம்பர நாம மெனக்கினி தளித்த செல்வமாஞ் சிவசிதம் பரமே. (கoக)

சிதம்பர தேவே தேவினுந் தேவாஞ் சின்மயமாகி நிற்றலினாற், சிதம்பர வரசே வரசினு மரசாஞ் செகமெலா மடக்கிநிற் றலினாற், சிதம்பர பரனே பரத்தினும் பரமாஞ் சேதன மாகிநிற் றலினாற், சிதம்பர நாதன் றிருவடிச் செல்வர் செல்வரே சிவசிதம் பரமே. (கoஉ)

செகத்தெனு மாயை யில்லவே யில்லைச் சிற்கன வடிவமே திகழுஞ், செகத்தெனு மவித்தை யில்லவே யில்லைச் சின்மய மொன்றுமே திகழுஞ், செகத்தெனு மனது மில்லவே யில்லைச் சேதன வுருவமே திகழுஞ், செகத்தெனும் வார்த்தை மித்தையே யென்று செப்பினன் சிவசிதம் பரமே. ()

சிவப்பொருள் சத்தே செகப்பொரு ளசத்தே சிவத்தினும் வேறதா யிலையே, சிவப்பொரு ளதனிற் செனித்திடும் பொருளுஞ் சிவமய மாகவே திகழுஞ், சிவப்பொரு ளகண்டஞ் செகப்பொருள் கண்டஞ் சிவத்தினுள் விவர்த்தமா யிலகுஞ், சிவப்பொரு டவிர வேறுமோர் பொருளு மில்லெனுஞ் சிவசிதம் பரமே. (கoச)

ஆதியாஞ் சிவனி லம்பர முதலா யணுவரை விவர்த்தமா யிலகி, யாதியாம் பொருளுக் கயலதா யிலதா யதன்வடி வாகியே திகழு, மாதியாங் கட்டை யசைவிலா திருந்து மதனிட

யிலகுகள் வனைப்போ, லாதியாம் பிரமத் தெழுமுல கென்று
னருட்குரு சிவசிதம் பரமே. (க0ரு)

தில்லையி லமர்ந்த சிதம்பர தேவே திருக்கழு நிப்பதி
யெழுந்தே, யெல்லையில் பரமாத் துவிதஞா னத்தை யியம்
பிய சுருதியா திகளை, வல்லையி லுணர்த்த வுணர்ந்துள வடி
யார் வழுத்திநின் பொன்னடி பரவக், கல்லனே ரெனது மன
த்திடை யிருந்த கடவுளே சிவசிதம் பரமே. (க0சு)

வேதநான் கினுஞ்சொல் விழுப்பொரு ளுணர்த்து மெய்
யனே கழனிமா புரியி, லுதனே யென்னு ளிருந்திடு மழுதே
நல்லவர்க் கருள்புரிந் தாண்ட, பாதனே பரனே பானுவே
பரையும் பங்கயத் தபனுமா லறியா, நீதனே நிமலா நின்
புகழ் வழுத்த நீயருள் சிவசிதம் பரமே. (க0எ)

அருமறைப் பொருளே வம்பரத் தொளியே யகிலமாய்
நிறைந்துள வறிவே, கருவினை யகற்றுங் கதிரொளி வடிவே
கனகமன் றதனிலே நடிக்கும், பெருவெளி யுருவே பேரி
ன்ப நிறைவே பினுமுனு மில்லதோர் பேறே, யொருவரு
மறியா துளத்தமு தாறு முத்தமா சிவசிதம் பரமே. (க0அ)

தன்னையு முணரேன் றத்துவ மறியேன் சடத்துவ மாய்
மதி மயங்கிப், பொன்னையே விரும்பிப் பொருளெனப் போ
ற்றிப் புன்மையி லழுந்தினன் யானே, யன்னைபோல் வந்
தென் னரும்பவ நீக்கி யடிமைகொண் டருளினை யடியே,
னுன்னையே நம்பி யுனதடி பணிந்தே னுத்தமா சிவசிதம்
பரமே. (க0க)

ஒப்புயர் வின்றி யெப்பொருள் களுமா யோங்கிய விறைவனை யென்றுஞ், செப்பிட வறியா மறைகளுங் கலையுஞ் சிறந்துள புராணம தனைத்து, மைப்படு கணியர் வலையுணுட் சிக்கி மயங்கிடு மடியனே வறிவேன், கைப்படு பொருள்போன் மறைப்பொரு ளதனைக் காட்டிய சிவசிதம் பரமே. (ககO)

என்னுளக் கனியே யெங்குலக் கொழுந்தே யெங்குல தெய்வமே யென்றுன், பொன்னடி வழுத்தும் புரையிலா மனத்தைப் போதமே யாக்கிடும் பொருளே, மன்னருட் கோனே வானவர் முதல்வா மறையெலாந் தேடிடும் வடிவே, தன்னுரு வளிக்க வெழுந்தசங் கரனே சன்மயச் சிவசிதம் பரமே. (ககக)

நானென துருவாய்ப் பவித்திடு மறிவாய் நாடுதல் பந்தமென் றுரைத்தான், மோனம தாக நினதுளத் திருந்த முந்தனு முத்துரா மேசன், கானமாந் தில்லை தனினடம் புரிந்த காரண மூர்த்தியே நீயும், வானமே யல்லான் மற்றிலை யென்றாய் வள்ளலே சிவசிதம் பரமே. (கக௨)

அனித்தியந் தூல மனித்தியஞ் சூக்க மனித்திய மவித்தைய தென்று, நுனித்துநோக் கினர்க்கே நித்தியஞ் சாட்சி யெனநுவல் கருணைமா நிதியே, சனித்துமே மரிக்கு மவுத்தைகண் மூன்றுந் தாமல வென்றருள் புரிந்த, தனித்தநித் தியமே வோருரு வான சற்குரு சிவசிதம் பரமே. (கக௩)

சிற்கனு னந்த சிவமதா யொளிருஞ் சேதனு சேதன வுயிராய்த், தற்பொரு ளாகிச் சான்றதாய் நிறைந்து சகலமே

வலமிலா திலகிச், சொற்பொருள் கடந்த துரியமே யுருவா
ய்த் தோன்றியே கழுநியி லமர்ந்து, சிற்பரம் விரும்பு மடிய
ருக் கருளுந் தேவனே சிவசிதம் பரமே. (௧௧௪)

எப்பொருள் களுமா யிலங்கிடு மிறைவ னென்னுளே
நிறைந்திடு மிறைவ, னொப்புயர் வில்லா வொருவனு மிறைவ
னுயர்வுதாழ் வில்லதோ ரிறைவன், செப்புதற் கரிய தெய்
வமா மிறைவன் செகத்தெனு மாயைதீ ரிறைவன், சொப்
பன சமமாஞ் செகத்தையு நீக்கிச் சுகமருள் சிவசிதம் பரமே.

என்னுடைப் ப்ரம னிறைவனும் பரம னிலங்கிய ஞான
மாம் பரமன், றன்னுடை ஞால நிறைந்திடு பரமன் றாணி
யோர் வழுத்திடும் பரமன், பன்னிடு மவித்தை யகற்றிடும்
பரமன் பகர்ந்தருள் செய்திடும் பரம, னன்னலஞ் சிறந்த
ஞானவா னந்த நயந்தருள் சிவசிதம் பரமே. (௧௧௬)

வித்தகப் பரமன் வேதமாம் பரமன் வேதந்துட் பொ
ருளதா யிலங்குந், தத்துவப் பரமன் சம்புவாம் பரமன் சங்
கர னாகிய பரமன், மெத்துமிவ் வுலகம் விளக்கிடும் பரமன்
மெய்ப்பொரு ளாகியே விளங்கும், வத்துவாம் பரமன் மறை
ப்பொரு ளுணர்த்து மாசிலாச் சிவசிதம் பரமே. (௧௧௭)

துவந்துவ மில்லாத் துரியமா மையன் றுகளிலாக் கரு
ணையா மையன், பவந்தனை நொடியி லகற்றிடு மையன் பத்த
ருக் கருளிடு மையன், றவந்திகழ் கழுநி யமர்ந்திடு மைய்ன்
சான்றதாய் விளங்கிடு மையன், சிவந்தனைத் தானு யமைத்
திடு மையன் றேசதாஞ் சிவசிதம் பரமே. (௧௧௮)

சித்திரம் போல வொத்தநல் லுளத்தன் சீர்பெறும் பதர்த்த மகத்தன், வத்துவா யிலங்கும் வடிவருள் சமத்தன் வானுளோ ரறிவொணு மகத்த, னெத்திசை களிலு மிசைந்திடு முகத்த னேழையற் கினிதருட கத்தன், முத்தியை யருளுந் தெய்வமா சுகத்தன் முனிவனுஞ் சிவசிதம் பரமே. (கககசு)

மாசிலா ஞான வான்பொருள் விரும்பு மாதவத் தினர்க்கருள் புனிதா, வேசிலாக் குணங்க ளெவையு முண் ணிறைந்த வேகமே யெனக்கரு ளிறைவா, வாசிலாச் சிவமே யம்பலத் தாடு மையனே யரும்பொறை வடிவே, நாசமா மனத்தை நாசமே யாக்கு நாதனுஞ் சிவசிதம் பரமே. (கஉ0)

கோசமா மிந்தக் குகைதனி லொளித்துக் கோலநன் மணியென விளங்கி, மாசிலா மாட்சி தன்னையும் வழங்கும் வள்ளலே வான்சுவைப் பொருளே, பாசமா மிந்த மனமதை நிறுத்திப் பந்தம தொழித்துநீ யருள்வாய், தேசதா யொளிருஞ் சிவபத மளித்த செல்வமே சிவசிதம் பரமே. (கஉக)

எந்தையே யிறைவா யிமையவர்க் கருளு மீசனே யெம்முனே நிறைந்த, சிந்தைவிட் டகலாச் சிவபெரு மானே தேசிகா திருவுடை யமுதே, பந்தவே ரறுக்கும் பழமறைப் பொருளே பாதக னெனைத்தடுத் தாண்டு, சிந்தனை கெடுத்துச் சிவமய மாக்குந் தேசுடைச் சிவசிதம் பரமே. (கஉஉ)

மாதவஞ் செய்து மனமயக் ககற்றி மகத்துவ மடைவதற் கில்லாத், தீதகங் கரமாந் தீயவெம் புலியின் றீப்பசிக் கமுதென வமைந்தேன், கோதிலா நினது திருவடி குறித்

துக் குணமுடைத் தவஞ்செய்நா ளுளதோ, சோதியே சுக மே சுத்தமே சித்தே தோமிலாச் சிவசிதம் பரமே. (கஉ௩)

கல்வியை விரும்பாக் கயவனேன் சிந்தை கல்லினு மிரு ம்பினுங் கடிதாய்ப், பல்லுரு வடைந்து பதைத்திட வுலாவிப் பரபரப் புடையதாய்ச் சலித்திட், டல்லுறன் பசுவு மாசை யின் வசமா யலைவது நினதருட் கழகோ, சொல்லுறற் பொரு ளுங் கடந்துள வறிவே சுத்தமாஞ் சிவசிதம் பரமே. (கஉ௪)

பஞ்சமா விடயப் படுகுழி யழுந்திப் பரகதி யினதெனத் தெளியா, நெஞ்சினை யுடைய கொடியனு மென்னை நேசம் வைத் தாளுநா ளுளதோ, கஞ்சனு மாலு முனிவரு மறையுங் கருதியுங் காணொணாக் கதியே, நெஞ்சினு ணிறைந்த நிரஞ் சன நிமலா நிலையருள் சிவசிதம் பரமே. (கஉ௫)

பங்கயற் கருளும் பரமனும் பகவன் பானம துருவமாம் பகவ, னெங்குமே நிறைந்து மேமையற் கருளு மெம்மு டைக் குரவனும் பகவன், செங்கதிர் முதன்முச் சுடர்க்கட வுளர்க்குந் தேசரு டேசுடைப் பகவன், றுங்கமாம் பதவி கொடுத்தருள் பகவன் சோதியாஞ் சிவசிதம் பரமே. (கஉ௬)

வேதம தனைத்து மிருதிக ளனைத்தும் வேதத்திற் கங் கமா மனைத்துஞ், சாதமாந் தருக்க சாத்திர மனைத்துஞ் சமைந்திடு புராணம தனைத்து, மோதிடு மிருதி யாகம மனை த்து முள்ளநற் கலைமுத லனைத்து, நீதிய தாக வுரைப்பதுன் னடியை நீதனே சிவசிதம் பரமே. (கஉ௭)

மாயையின் வசமா யிருந்திடு முயிர்கண் மயக்கினு னுன் னடி யடையார், தாயென வுவந்து தன்னடி பணிந்து தமிய

னேற் கின்னருள் புரிந்து, காயமு மந்தக் கரணமு மற்றைக் கடும்பகை யெனுமகங் காமு, மாயமா மிதனின் மயங்கனீ யென்றுன் மாசிலாச் சிவசிதம் பரமே. (கஉஅ)

கண்டவர்க் கருளுங் கற்பகக் கழலைக் கருணைமா முகி லெனுங் கழலைத், தொண்டர்கள் வழுத்துந் தூய்மையாங் கழலைத் துரியமாம் பதமருள் கழலை, யண்டர்கள் வணங்கி யழுதடி பரவ வகப்படா வறிவுடைக் கழலைத், தண்டென வீழ்ந்து தரணியிற் பணியத் தந்தருள் சிவசிதம் பரமே. ()

அம்பர வுருவ னருமறை வடிவ னகண்டமே சொரூப மா யுடையோ, னம்புயல் லடிய ரகத்தைவிட் டகலா ஞரண னீசனுன் முகனு, மும்பர்கள் காணு வொளிமிகு மொருவ னுருவமு மருவமு மில்லோன், செம்பொரு ளருளத் தேசிக வுருவாய்த் திகழ்ந்தனன் சிவசிதம் பரமே. (கஙo)

அருளுடை யமல னம்பர வுருவ னறிவுடைச் சோதியா மகண்டன், தெருளுடைச் செல்வன் றேவர்மா லயனுந் தேடி யுங் காணுத் திருவன், மருளினை யகற்று மனமணி விள க்காய் மாசிலாப் பரம்பொருள் வடிவாய், நிருமல மான நித் திய சுத்த நிகழ்வுடைச் சிவசிதம் பரமே. (கஙக)

சுந்தர வடிவன் சூட்சுமன் சுமுகன் சுத்தமாம் வடிவு ண்டத் தூயோ, னெந்தர மறிந்து மிணையடி யருளு மினிய நற் கருணைமா தேவன், பந்தவே றறுக்கப் பரமசற் குருவா ய்ப் பாரினி லெழுந்ததோர் பரமன், சிந்தையி லிருந்து திரு வருள் புரிந்த தேவனுஞ் சிவசிதம் பரமே. (கஙஉ)

ஆதிமா மறைக ளறிந்திடற் கரிய வருவெனு மமர்ந்துள தேவன், சோதியா னந்த வடிவினை யருளுந் தூயசற் குருவென வெழுந்து, நீதிசெய் தறிவாம் பொருடனை யடியே னெஞ்சினி னிறைந்திட வளித்த, தேசுடைப் பொருளே தில்லையி லமர்ந்த தேசிகா சிவசிதம் பரமே. (௬௩)

முப்பொருள் கடந்த மூலைநற் சிவமா முடிவிலாப் பொருடனி லெழுந்த, செப்புசிற் சத்தி யேதன வுருவிற் செகத் தெனும் பொய்யினைக் காட்டுங், கப்பிலா வந்தப் பரத்தினில் வேறு கலப்பதோர் பொருளினு மில்லை, தப்பிலா தகண்ட சாட்சிமாத் திரமே தானெனுஞ் சிவசிதம் பரமே. (௬௪)

சுத்தமெய் யறிவைத் துலங்கிட வெனக்குச் சுருதி சொன் னெறியிலே யளித்த, வுத்தம குருவாஞ் சிதம்பர வரசை யொருபொழு திறைஞ்சுவா ருளரேல், பத்திசெய் யடியார் பாதமே கதியாய்ப் பணிந்தடி பரவினோர்க் கென்றுஞ், சித்தமாய் முத்தி யளித்திடு மெங்க டேவனுஞ் சிவசிதம் பரமே. (௬௫)

காதலித் ததனைக் கற்பக மனைய கமலமென் கரத்தினாற் கொடுப்பாய், தீதகன் மனத்தாற் றினைத்தின நினைத்தாற் சிவனுடைச் சொரூபம தருள்வாய், போதமா மூனது பொன்னடி யென்றன் புன்மையாஞ் சிரமதிற் புனைந்து, காதலாய் வெதும்புங் கருத்தினை நீக்குங் கடவுளே சிவசிதம் பரமே.

நொய்யவென் மனத்தா னேக்கிடும் விடய நுண்மையா மறிவென நினைந்து, பொய்யெலா மெனவே போக்கிட வளித்த புனிதமார் புண்ணிய மூர்த்தி, செய்யவொன்

றறியேன் றீவினையுடையேன் சிறியனைக் காத்தருள் புரிவாய், மையலொன் றில்லா மாமருந் தனையாய் மாசிலாச் சிவசிதம் பரமே. (கஙஎ)

முத்தியைக் கொடுக்கு முதல்வனல் லடியா மூதறி வருளுநல் லடியாம், பத்திய தான மாயையின் சாலம் படுத்தெனை யாண்டிடு மடியா, மெத்திய யாளு மெங்குரு வடியா மேழைகட் கிரங்கிடு மடியாகு, சித்தியை யருளுந் திருவுடை யடியாகு தெய்வமாகு சிவசிதம் பரமே. (கஙஅ)

காலங்க ளெல்லாங் கடந்தொளி ரடியாங் கற்பங்க ளனைத்தையுங் கடந்து, மூலமதில்லா மூலநல் லடியா மோகமதொழிக்குநல் லடியா, மாலமர் கடவு ளாழ்கிய வடியா மானந்த மாகுநல் லடியாகு, சீலம தருளுஞ் செல்வனல் லடியாகு சிதம்பர குரவனல் லடியே. (கஙக)

முற்பெறு தவத்தார் முன்பெறு மடியா முழுமதி கொடுக்குநல் லடியாங், கற்பகா லத்துங் காணுறு வடியாங் கடவுளர் களிக்குநல் லடியாந், தற்பர மான சாந்தநல் லடியாந் தனக்குமே லில்லதோ ரடியாகு, சிற்பர மான சேதன வடியாகு சிதம்பர குரவனல் லடியே. (கசo)

காரணமதெல்லாங் காந்திடு மாசன் கற்பனை யகற்றிடு மாசன், சாரணிணை தந்து சாந்தம தளித்த சங்கர குரவனு மாசன், பூரணிலா தடைந்த முழுமதி யுடைய முதல்வருக் கருள்செய் மாசன், மரணம தகற்றி மறுவிலா தொழித்த மாசிலாச் சிவசிதம் பரமே. (கசக)

தொண்டர்க ளெல்லாந் தொடர்ந்துகொண் டாடித் துதித்திடுங் கழநிவாழரச, னண்டமதெல்லா மனுவளவா க்கியசைத்திடு மய்யனு மரசன், சண்டபா னுவைப்போற் சக மெலாம் விளங்குஞ் சாட்சியா யிலங்கிடு மரசன், கொண் டவர் கோலங் கொண்டிடு மரசன் கோயிலூர்ச் சிவசிதம் பரமே. (கசஉ)

ஆரியர் பேணு மருளுடை யரச னம்பலத் தாடுநல் லா சன், வீரிய மிகுத்த விவேகநல் லரசன் வெந்துயர் தீர்த்திடு மரசன், சூரிய னொளிபோற் றுலங்கிடு மரசன் றொல்லுல கின்றிடு மரச, ஞரியின் வசத்தே நாடிடே லென்று நமக் கருள் சிவசிதம் பரமே. (கசங)

பந்தனை யகற்றும் பரமனு மரசன் பார்முதற் படைத் திடு மரசன், சிந்தனைத் துயரைத் தீர்த்திடு மரசன் செகமெ லா நிறைந்திடு மரசன், றொந்தனை கடத்துந் துரியமா மரசன் றாயதாங் குணமுடை யரச, னெந்தமை யாளு மிறைவனு மா னேகனுஞ் சிவசிதம் பரமே. (கசச)

ஞானவா ரிதியை நயந்தருள் கோமா னென்ன தறிந் திடாக் கோமான், மோனமா நிதியை மொழிந்தருள் கோ மான் முத்தியின் வடிவதாங் கோமான், றீனருக் கருளுந் தீரனுங் கோமான் றீரதை யருளிடுங் கோமான், மானம தொழித்து வடிவருள் கோமான் மாசிலாச் சிவசிதம் பரமே. (கசரு)

கொடியவென் னெஞ்சி லிருந்திடுங் குரிசில் கோயிலூ ருறைந்திடுங் குரிசில், படிமிசை யெழுந்த பரமனுங் குரிசில்

பார்முதற் பரவிடுங் குரிசின், முடிகவித் துலகாள் வதுந்துய
ரென்றே முடிவருண் மூலமாங் குரிசி, லடிபர வடியா ரகத்த
மர் குரிசி லானந்த சிவசிதம் பரமே. (௧௪௬)

எம்முனை பொருந்தி யெமக்கருள் புரிந்த வெம்மு
டைக் குரவனுங் குரிசி, றம்மடியார்க்குத் தனித்தினி தரு
ளுஞ் சாந்தமாஞ் சற்குணக் குரிசில், செம்மையின் மனத்
தைத் திடப்படச் செய்து சீரருள் செய்திடுங் குரிசி, லம்மை
யப் பனுமா யமர்ந்தருள் குரிசி லய்யனுஞ் சிவசிதம் பரமே.

அய்யவென் றன்னை யடைந்த நாண்முதலா யயலொரு தே
வரை யறியேன், செய்யபொற் கமலந் தினம்பணிந் தடி
யேன் சிந்தையிற் றரித்தன னியானே, மெய்ம்மன முதலாக்
கரணங்களாலே மேவொணாச் சித்தரா யொளிருந், துய்ய
மா ஞானந் தந்தருள் புரிவாய் சோதியாஞ் சிவசிதம் பரமே.

ஆத்தமா மங்கந் தானஞ் சற்பாவ மருமையாம் பணி
களைச் செய்து, காத்துமெய்க் குருவின் கழறனை விரும்பிக்
கருணையாற் பாத்திர மாகி, நேத்திரம் போல விமையவ ளகலா
திருந்துநேர் சிரவண முதலாய்ப், பூத்தனிற் பயிலு மாணவர்க்
குயர்வாம் பொருடரு சிவசிதம் பரமே. (௧௪௯)

சித்துரு வாகத் திகழ்ந்திடும் விமலன் சிலைநற் கொண்டை
றனை யுடையோன், பத்தருக் கருளும் விருப்பினுற் கழறிப்
பதிதனி லமர்ந்துள பரமன், றத்துவப் பொருளைச் சதுர்
மறை யுரைத்த தகைமையோ டருளுநற் சதுரன், முத்தரா
மேசனருள்வழி வந்த முமலமில் சிவசிதம் பரமே. (௧௫௦)

வாழ்கமா மறைகள் வாழ்கவா கமங்கண் மன்றுளே நடஞ்செயும் பதங்கள், வாழ்கமா மனுவி னிறையவன் வாழ்க வளம்பொலி கோயிலூர் வாழ்க, வாழ்கமா நெல்லை நாயகி கொற்ற வாளிறை யுடனவ னடியார், வாழ்கநம் முத்து ராமலிங் கப்பேர் வரகுரு பரன்றுற வடிகள். (௧௫௧)

என்னையோர் பொருளாய் மதித்தெனை யடிமை யினத்தின ருடனினி திருத்தி, யன்னையிற் சால வன்புட னோக்கி யகிலமே முதலிய வனைத்தும், பன்னூநற் சிவமாய்ப் பாவனை புரிதி படர்மன மொடுங்குமென் றுரைத்துத், தன்னைபெற் களித்த சிதம்பர குரவன் றனதடி யூழிவாழ்ந் திடவே. ()

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

௨

# வருகை.

வன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொருளே வருக வருளளிக்கும் போதா வருக புனிதருளாப் புரணன் வருக பொருவரிய புத்தேள் வருக புண்ணியமா, மூருவன் வருக வொப்பரிய வுணர்வே வருக வொளிர்மறைக ளோத வருக வம்பர்புக ழொருவன் வருக வெளியுருவா, மருவன் வருக வம்பலத்தெம் மையன் வருக வாரருளா மம்மான் வருக வான்முதலா மமரர் வணங்கு மருள்

வருக, குரவன் வருக கோதில்குணக் குன்றே வருக கோயி லூர்க் குருவா யெழுந்த சிதம்பரமாங் கோமான் வருக வரு கவே. (௧)

ஐயன் வருக வருள்சுரக்கு மத்தன் வருக வையமிலா வமலன் வருக வேதமரு ளாதி வருக வவித்தையிலாத், துய் யன் வருக துயரகற்றுந் துரியன் வருக துரிசதிலாத் தோ ன்றல் வருக சிவமயமாஞ் சோதி வருக சிவமருளுங்,கையன் வருக கரைகாணுக் கருணை வருக கமலபதங் காட்ட வருக கருணைரசக் கன்னல் வருக கண்ணுறும், பொய்ய தில்லாப் பொருள்வருக போத மயமா யெனையாக்கப் புனித குருவா யெழுந்தருளும் போதா வருக வருகவே. (௨)

பொன்னே வருக புவிமுழுதும் பொருந்த வருக புனி தநடை புணர வருக மலமதிலாப் பொருளே வருக பணிந்த வர்க்குக், கன்னல் வருக மதுரமிகு கண்டே வருக காமமெ னுங் கடுவா யதனைக் கடத்த வல்ல கனலேவருக கனிம துர, மன்ன வருக மாசிலருள் வண்ணன் வருக மனமணியா மகேசன் வருக வானவர்க்கோர் வள்ளல் வருக வடிவருளுந், தென்னன் வருக சிதம்பரமாந் தேசோன் வருக தில்லை தனிற் சிறந்த நடனம் புரிந்தருளுஞ் சித்தா வருகவரு கவே. (௩)

முத்தே வருக கருணைபொழி முகிலே வருக வெனை ய்பாளு முதல்வா வருக முதுமறையின் மோன வருக வடிய ருள், வித்தே வருக முடிவருளும் விதியே வருக வேதமருள் விளைவே வருக வன்பருள விழைவே வருக வானுருவா,

மத்தா வருக வகண்டமெனு மையா வருக வாரருளா மமலா வருக வறிவருளு மன்பே வருக வானந்தக், கொத்தே வருக குருவெனுமோர் கோமான் வருக கோதில் குணக் குன்றே வருக சிதம்பரமாங் கோவே வருக வருகவே. (௪)

நீதமருளு நிதிவருக நெடிய கருணைக் கடல் வருக நேரி லெழுந்து வெனக்கருளு நிமலா வருக நித்தியமாம், போத மயமே யெனையாக்கிப் பொன்று தருளித் தனையுணரும் பொற்பு மிகுந்த பெரியோர்கள் புந்தி யுறையும் பொருள்வருக, நாத வருக வருமறைக ணவில வருக நயந்தருளு நண்பா வருக நான்மறைதேர் நலமே வருக நாண்மலர்ச் செம், பாத வருக பரம்பொருளைப் பாட வருக பரிபூரண பரமா காச மாயிருக்கும் பரசற் குருவே வருகவே. (ரு)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## நமஸ்கார சங்கீர்த்தனம்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அரியேநின் பாதநம வரனேநின் பாதநம வருளேநின் பாதநம வசலாநின் பாதநம, கரியேநின் பாதநம கமலாநின் பாதநம கதியேநின் பாதநம கனியேநின் பாதநம, துரியாநின் பாதநம சொரூபாநின் பாதநம சுடரேநின் பாதநம சுமுகா

நின் பாதநம, பெருமானின் பாதநம பிறவாய்நின் பாதநம பெரியோர்கள் பரவுசிதம் பரவாநின் பாதநம (௧)

முத்தாநின் பாதநம முதிதாநின் பாதநம முனியேநின் பாதநம முகிலேநின் பாதநம, கத்தாநின் பாதநம கனியே நின் பாதநம ககனுநின் பாதநம கதியேநின் பாதநம, வத்தே நின் பாதநம வடிவேநின் பாதநம வரனேநின் பாதநம வளி யேநின் பாதநம, வித்தேநின் பாதநம விகிர்தாநின் பாதநம விண்ணேநின் பாதநம விமலாநின் பாதநம (௨)

அழகாநின் பாதநம வகிலாநின் பாதநம வமலாநின் பாதநம வருளேநின் பாதநம, வமுதேநின் பாதநம வசலா நின் பாதநம வனகாநின் பாதநம வரணேநின் பாதநம, வது லாநின் பாதநம வளியேநின் பாதநம வரனேநின் பாதநம வனந்தாநின் பாதநம, வசங்காநின் பாதநம வரூபாநின் பாத நம வய்யாசி தம்பரவெம் மெய்யாநின் பாதநம. (௩)

சொரூபாநின் பாதநம சுமுகாநின் பாதநம சுகியேநின் பாதநம சுகிர்தாநின் பாதநம, கருவாநின் பாதநம கருபாநின் பாதநம கமலாநின் பாதநம கதிரேநின் பாதநம, மருவாநின் பாதநம மலரேநின் பாதநம மணியேநின் பாதநம மகிபாநின் பாதநம, மருவாநின் பாதநம மறிவாநின் பாதநம வமலாசி தம்பரநம் விமலாநின் பாதநம. (௪)

உலகாய்நின் றுமெழிவி லுயிராய்நின் றுபுணர்வி லுள மாய்நின் றுமொளிசெய் புணர்வாய்நின் றுபுனிலே, வலவாய் நின் றுயறிவி னயலாய்நின் றுயமல வறிவாநின் சீரலது வல வாமென் றோர்விலர்கண், மலபாகந் தீரவருண் மணியேயுன்

பாதநம மறவாதன் போடுபக லறவேநின் ருர்கள்பெறு, நல மாரு ஞானமெனு நலமேவு பாதநம ஞானநந் தாயநம ஞா நந் தாயநம (ரு)

அமலாவென் கோவரிய வமுதேயென் கோவருளு மய் யாவென் கோவடியர் மெய்யாவென் கோபுரண, விமலா வென் கோவெளிய விண்ணேயென் கோபெரிய வேதாவென் கோவெனது நாதாவென் கோவிகிர்த, கமலாவென் கோக ரிய கண்ணேயென் கோகணிய காளாயென் கோவினிய கதி யேயென் கோகரண, கமனுவென் கோகதலி கனியேயென் கோகழுநிக் கரும்பேயென் கோகரையில் கடலேயென் கோ நமவே. (சா)

சித்தாவென் கோபெரிய சிவமேயென் கோதெளிய தேனேயென் கோவுரிய மானேயென் கோவரிய, சித்தே யென் கோசிறிய னுயிரேயென் கோசெழிய சீரேயென் கோசெறியுஞ் சுத்தாவென் கோதிணிய, முத்தேயென் கோ வென்முழு முதலேயென் கோமுனிவின் மோனுவென் கோ முடிவின் முனியேயென் கோயொழிவில், வத்தேயென் கோ வடிவில் வானேயென் கோவடியர் வசமேயென் கோபெரிய வரசேயென் கோநமவே. (எ)

பொன்னேயென் கோபுனித மணியேயென் கோமுனி வில் பொருளேயென் கோபுகழும் போதாவென் கோபெ ரிய, வன்னேயென் கோவெனது வத்தாவென் கோவரிய வ ருளேயென் கோவருள்செய் யமுதேயென் கோவடியர், மன் னேயென் கோவணிகர் வாழ்வேயென் கோவடிவில் வடிவே

யென் கோதுரிய வாழ்வேயென் கோவிமல, வன்றேயென் கோகடவு ளரசேயென் கோககன மாதீயென் கோகழநி யர சேயென் கோநமவே (அ)

நிலேயேயென் கோநிருப நிமலாவென் கோநெடிய நிபு ணாவென் கோகழநி நிதியேயென் கோகனக, மலேயேயென் கோகருது மதியேயென் கோபெரிய மணியேயென் கோ மணியி னொளியேயென் கோகவிஞர், தலேவாவென் கோவெ னது தவமேயென் கோவினிய தந்தாயென் கோவரிய தாயே யென் கோவினிய, கலேயேயென் கோதெளிய கடலேயென் கோமுனிவர் கத்தாசி தம்பரவெ னத்தாயென் கோநமவே.

முத்தாவென் கோமுடிவின் முதலேயென் கோவினிய முதமேயென் கோவெனது முதல்வாவென் கோதனிய, வித் தேயென் கோபரம விமலாவென் கோவிவித விண்ணேயென் கோமுனிவில் வேந்தாவென் கோவெனது, வத்தேயென் கோவடிவில் வானேயென் கோவடியர் வரமேயென் கோசிறி யின் வள்ளாலென் கோபெரிய, வித்தாவென் கோவடிய ரர ணேயென் கோவரிய வமலாவென் கோகனிய ககனுவென் கோநமவே. (க௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# குயில்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கந்த மலர்ப்பொழி றோறுங் கனியுண்டு வாழுங் குயிலே
வெந்தமை யாண்ட விறைவ னெங்கள் குலத்தெழு மீசன்
பந்த மறுத்த பரமன் பரங்கரு ணைக்கட லானைச்
சிந்தனைக் கெட்டா தவனைச் சிதம்பர நாதனைக் கூவாய். (௧)

கொந்தலர் சோலைக் குயிலே குருபர னெங்கள் பெருமா
னெந்தர மாள விசைந்த வெம்முயிர்க் கின்னமிர் தத்தைத்
தொந்தங் கடந்த சுடரைத் துரிசறுத் தாண்டநற் றேவைச்
சந்த மறைக்கெட்டா தானைச் சாந்தனை நீவரக் கூவாய். (௨)

தேவரு மூவருங் காணாத் தில்லைக் கரசைநற் றேவைப்
பாவலர் போற்றும் பொருளைப் பத்தர்க் கருணல் விறையை
யேவமில் சுத்த பரனை யெல்லாஞ் சிவமய மென்னுங்
கோவை நினைந்து குயிலே கூத்தனை நீவரக் கூவாய். (௩)

நித்திய நிர்க்குண மான நிலையை யருள வெழுந்து
சத்திய சிற்சுக மாகுந் தன்னை யளித்தெனை யாண்ட
வத்த னமல னகண்ட னருவ னுருவ னருளன்
சுத்தன் வரக்குயிற் பிள்ளாய் சோதியை நீவரக் கூவாய். (௪)

அண்ட புவனத்துங் கடந்த வகண்ட வடிவின னன்பாய்த்
தொண்ட ருளத்தி னிறைந்த சோதியைத் தூமொழி யானை
யெண்டிசை முற்று முழன்ற வேழைய ருக்கருள் வானைக்
கண்டு கனிந்தநற் சொல்லாற் கருணா லயன்வரக் கூவாய். ( )

ஆதிசிதம்பரத் தைய னருமறை தேடியுங் காணுச்
சோதி சுகமாய் நிறைந்த துரிய வடிவுடை யண்ண
னீதி நிறைந்தொளிர் கின்ற நெடுங்கழ நிப்பதி யானைக்
கோதிக் கனியுண் குயிலே குருபர னைவரக் கூவாய். (௬)

அவத்தை யனைத்துங் கடந்த வரும்பெருஞ் சோதியை நங்கள்
பவத்தை யறுத்த பரமன் பரம்பொரு ளான பழையோன்
றவத்தை யளித்த சதுரன் சங்க மறுத்த வசங்கன்
சுகத்தை யளித்தெனை யாண்ட சுந்தர னைவரக் கூவாய். (௭)

மின்னினு நொய்தா முடம்பை மேவல் பிழையென வோதித்
தன்னை யருளுஞ் சுமத்தன் றுளிணை யென்றலை சாத்திப்
பன்னும் பரம பதத்தைப் பகர்ந்தருள் செய்த பிரானைப்
பொன்னைப் புரையுநின் வாயாற் போதனை நீவரக் கூவாய். (௮)

ஏகமே யான பொருளை யெங்கணு முள்ள வருளைப்
பாக மிலாத தெருளைப் பந்தம் பறித்தெனைக் கூவிச்
சோகமி லாத சுகத்தைச் சுகிக்க வளித்த துரையைப்
பாகன வாயாற் குயிலே பரம்பர னைவரக் கூவாய். (௯)

ஆதி சகத்குரு வாகி யானந்த மாக வமர்ந்து
நீதி நெறிக டவரா நித்திய மான நிமலன்
சோதி யுளத்தில் விளங்கிச் சோதியாய் நின்ற சொரூபன்
சாதி குணங்குறி யில்லாத் தத்துவ னைவரக் கூவாய். (௰)

என்றும் பிறப்பிலா வெந்தை யென்றனை யாள வெழுந்து
கன்று மனமுடை யேனைக் கடைக்கண் ணளித்தரு ளாலே
பொன்று முடம்பென்ற போதன் பூசுரர் மாதவ ரென்று
நன்று மலிந்த கழநி நாதனை நீவரக் கூவாய். (௰௧)

செனித்தன் மரித்த லிலாத சின்மயச் சேவடி யானைப்
பனித்த மனதுடை நாயேன் பக்கத் திருந்தரு ளாயைக்
கனித்த கனியின் ரசத்தைக் கற்கண்டைக் கன்னலைத் தேனை
யினித்த குரலாற் குயிலே யெம்பிறை யைவரக் கூவாய். ()

நீல நிறக்குயிற் பிள்ளாய் நித்தனை நீடொளி யானைக்
காலங்கண் மூன்றுங் கடந்த கற்பகத் தின்கனி தன்னைக்
கோலங் குருவுரு வான கொண்டலை யென்று மிருந்த
சீலனைச் சிற்சபை தன்னிற் றிருநட னத்தனைக் கூவாய். (கரு)

மன்னன் சிதம்பர தேவன் மாசி லருட்கடை யுன்னி
நன்னலங் கொண்டவன் றன்னை நாளு மிணையடி போற்றிப்
பின்ன மிலாத பிரமப் பேறுபெற் றேம்பெற்றே மென்று
பொன்னன வாயாற் குயிலே பூரணனை வரக் கூவாய். (கசு)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பாங்கிக்குரைத்தல்.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பல்லோரு நம்மைப் பழித்திடப் பெற்றோம்
பரமன் றிருப்பணிக் காளெனப் பெற்றோங்
கல்லா மனத்தைக் கரைத்திடப் பெற்றோங்
கருணைக் கடல்செய்த காரணம் பெண்ணே. (க)

கந்தைத் துணியைக் கலையெனப் பெற்றோங்
கரத்திற் பலியைக் கனமெனப் பெற்றோஞ்
சிந்தை யிறத்தல் சிவமெனப் பெற்றோஞ்
சிதம்பர நாதன் றிருவருள் பெண்ணே. (௨)

பெருமை சிறுமை யிலையெனப் பெற்றோம்
பேதமபேத மழிந்திடப் பெற்றோ
மருமைக் குணங்க ளடையவும் பெற்றோ
மழக னருளுக் களவிலை பெண்ணே. (௩)

அல்ல லுடற்பற் றறவிடப் பெற்றோ
மாசை யனைத்து மொழிந்திடப் பெற்றோஞ்
சொல்லும் பொருளு மிலையெனப் பெற்றோந்
தோமில் சிதம்பர தேவருள் பெண்ணே, (௪)

எல்லா வழக்கு மிறந்திடப் பெற்றோ
மிம்மை மறுமை யிலையெனப் பெற்றோம்
பொல்லா மணியைப் பொருந்திடப் பெற்றோம்
போதன் கொடுத்த பொருளேயாம் பெண்ணே. (௫)

அஞ்ஞான மெல்லா மகன்றிடப் பெற்றோ
மைய னருளை யனுதினம் பெற்றோம்
பொய்ஞ்ஞாலந் தன்னையும் போக்கிடப் பெற்றோம்
புண்ணிய னார்தந்த வாழ்விது பெண்ணே. (௬)

வஞ்ச மனமதை மாற்றிடப் பெற்றோம்
வான்முதற் பூத மொழிந்திடப் பெற்றோ
மஞ்சு புலனு மழிந்திடப் பெற்றோ
மந்தோ விதென்ன தவஞ்சொலாய் பெண்ணே. (௭)

புறந்திண்ணை தன்னிற் றுயின்றிடப் பெற்றோம்
புண்ணிய னுள்ளி லிருந்திடப் பெற்றோம்
பறந்த கரணப் பறைப்பறப் பெற்றோம்
பாக்கிய னூர்தந்த வாழ்விது பெண்ணே. (அ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## சுதந்திரன்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

கரண மியாவுங் கடந்த சுதந்திரன்
காரண வேவர வல்ல சுதந்திர
னரண முற்று மறியாச் சுதந்திர
னச்ச நீங்க வருளுஞ் சுதந்திரன். (க)

சித்த மாறித் திகழுஞ் சுதந்திரன்
சின்ம யானந்த மான சுதந்திரன்
பத்த ருய்யப் பகருஞ் சுதந்திரன்
பார்வை தானறப் பார்த்த சுதந்திரன். (உ)

அடிய ருள்ளத் தடங்குஞ் சுதந்திர
னண்ட மெல்லா மடங்காச் சுதந்திரன்
படிவ மின்னதென் றில்லாச் சுதந்திரன்
பார்முழு தாகிப் பரந்த சுதந்திரன். (ந)

அறிவ தாகி யமருஞ் சுதந்தர
னசல னாகி யகன்ற சுதந்தரன்
பிறிவி லாது பிறங்குஞ் சுதந்தரன்
பிரம மாகும் பெரிய சுதந்தரன். (௪)

கழுநி தன்னிற் களிக்குஞ் சுதந்தரன்
கனக மன்றி னடிக்குஞ் சுதந்தரன்
சினம தின்றித் திகழ்ந்த சுதந்தரன்
சிவசி தம்பர மான சுதந்தரன். (௫)

அல்ல லில்லா தமருஞ் சுதந்தர
னகண்ட மாக வறியுஞ் சுதந்தரன்
சொல்ல வொண்ணுச் சொரூப சுதந்தரன்
சோதி ரூபத் துரையாஞ் சுதந்தரன். (௬).

சத்துஞ் சித்துந்தா னான சுதந்தரன்
ரூனே தானாய்த் தனித்த சுதந்தரன்
கத்து வாதிகட் கெட்டாச் சுதந்தரன்
கருது வோர்கட் கெளிய சுதந்தரன். (௭)

கழுநி தன்னி லினிய முனிகணங்
கழல்ப ணிந்து கருதுஞ் சுதந்தர
னளவின் மேன்மை யடைந்த துறவிகட்
கனுச னாகி யிலங்குஞ் சுதந்தரன். (௮)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# தெய்வம்.

## இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தொந்தனைக ளொன்றுமிலாத் துரியவடி வதனைச்
சோதியுரு வானபெருஞ் சுத்தவறி வுருவைச்
சிந்தையுளே நிறுத்தியவத் தெய்வங்கிடீர் தெய்வஞ்
சிஞ்சிலிப்புப் போற்றுதெய்வந் தெய்வமன்று கிடிகொள். ( )

அல்லலுறு முடம்பதனை யன்புடனே காத்திங்
காசையினா லோடிமிக வலைந்துதிரிந் துழன்று
பல்லையெலாங் காட்டிமிகப் பரதவித்து விழித்துப்
படுதுயர மொழித்தருளுந் தெய்வமதே தெய்வம். (உ)

பந்தவுரு வனைத்தையுமே பரம்பொருள்போன் மதித்துப்
பரபரத்துத் தேடிமிகப் பாங்கெனவே காத்துச்
சிந்தையுளே களித்ததனிற் சிக்கிமிகத் தாழுந்
திடுக்கங்கெடப் பண்ணியிடுந் தெய்வங்கிடீர் தெய்வம். (ங)

சரித்துழலு முடலதனைத் தானெனவே நினைந்து
தனக்குநிக ரொருவரிலை யெனமதித்துச் சலித்து
மரித்தல்வருங் காலமதின் மனமயக்க மடையு
மரணபய மகற்றுமொரு வள்ளலன்றோ தெய்வம். (ச)

சிஞ்சிலிப்புத் தெய்வமதைத் தெய்வமென வெண்ணித்
தினந்தினமும் பணிந்தேத்துந் திகைப்புடைய மனத்தைத்

சஞ்சலமி லாதருளத் தனையுணரச் செய்து
காட்சிமய மாக்குவிக்குஞ் சற்குருவாந் தெய்வம். (ரு)

புழுமலமா முடம்பதனைப் போற்றிமிக வலைந்து
புந்திகெட்டுத் திரிந்தவெனைப் போதமய மாக்கிப்
பழுதில்பொரு ளளித்தருளும் பரம்பொருளே தெய்வம்
பார்முழுதும் பரந்துளவொண் பரகுருவே தெய்வம். (சு)

சிந்தைதனைக் கெடுத்தெனையுந் திருவருளா னோக்கிச்
சித்துருவ மாக்கியரு டெய்வங்கிமீர் தெய்வம்
பந்தமறப் பார்த்தருளும் பரங்கருணைக் கடலாய்ப்
பரந்தவொரு பண்புடைய பரகுருவே தெய்வம். (எ)

சித்துருவாய்ச் சத்துருவாய்ச் சிவமயமாய் விளங்குந்
தெய்வமதைத் தெய்வமெனத் தெளிந்தறிவர் பெரியோர்
சத்துருவாம் தெய்வமதைக் கடையவரே மதிப்பார்
சரணநிலை யறிந்தவர்கள் கண்டுமதிப் பாரோ. (அ)

ஒருத்தர்நிக ரலவெனவே யுளத்தினினைந் தூளறி
யூர்கடொரு நட்டமிட்டு முணர்வறியா வுயிரைக்
கருக்கெடவே வந்தாண்டு கலக்கமறுத் தருளுங்
கடவுள்சிதம் பரவடிவென் கண்ணான தெய்வம். (கூ)

முத்திதனை விரும்பிமிக முயன்றுநித மலைந்து
முடிவறியா துழல்பவரை முத்தியிலே சேர்க்க
வெத்திசையு நீக்கமற விரும்பொருளாய் நின்ற
வெங்கள்குரு பரனருளுந் தெய்வமதே தெய்வம். (க0)

பத்திசெயும் பத்தருளே பரம்பொருளா யிருந்து
பார்ப்பறவே பார்த்தருளிப் பாதமலர் சூட்டி
யெத்தியெனை யாண்டருளு மெங்கள்குரு தெய்வ
மெம்முளிருந் தெனையருளு மெழிலுடைய தெய்வம். (௧௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்.

கலிந்தாழிசை.

அண்ட மனைத்து மறிவா யிலங்குமென்
றெங்கள் பெருமானு ருந்தீபற
வியம்பி யருளின ருந்தீபற. (௧)

அஞ்ஞான மெல்லா மகலு மிடத்தினின்
மெய்ஞ்ஞானந் தோன்றிற்றென் றுந்தீபற
வெறுஞ்சிவ மானதென் றுந்தீபற. (௨)

நித்திய மான நிலைநா னறிந்திட
வெத்தியே யாண்டானென் றுந்தீபற
வென்னு ளிருந்தவ னுந்தீபற. (௩)

சாதி கழிந்திடச் சங்கை தவிர்ந்திட
வோதியே யாண்டானென் றுந்தீபற
வொடுங்கிற்று வையமென் றுந்தீபற. (௪)

மெய்யன்பி னாலே விளங்க வுரைத்தது
மெய்ய னருளேயென் றுந்தீபற
வகண்ட வறிவேயென் றுந்தீபற. (ரு)

எல்லாம் பிரமம தென்றே யருளினன்
கல்லாக் கயவனுக் குந்தீபற
கருத்த னருளதென் றுந்தீபற. (சா)

ஆகாசத் தின்னோ ரபிதானங் கொண்டானென்
மோக மகற்றினு னுந்தீபற.
முத்திச் சொரூபனென் றுந்தீபற. (எ)

கழுநி யமர்ந்த கருணு கரன்சிவன்
கண்ணணெண் கண்ணணென் றுந்தீபற
காரணு தீதனென் றுந்தீபற. (அ)

வேதங்க ளாலே விளம்ப வறியாத
பாத முடையானென் றுந்தீபற
பணிய வருள்வானென் றுந்தீபற. (கூ)

பந்தப் பெருங்கடல் பாழ்படப் பார்த்தவன்
பந்தப் படானென்றே யுந்தீபற
பரம குருவாமென் றுந்தீபற. (க0)

சுட்டு மறிவாற் றொடாப் படாதவன்
சுட்டுக் கடங்கானென் றுந்தீபற
கருத்த னவனேயென் றுந்தீபற. (கக)

மனத்தா லுணரும் வடிவ மிலாதவன்
வாக்குக் கதீதனென் றுந்தீபற
வடிவில் வடிவனென் றுந்தீபற. (௧௨)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# கழல்.

கலித்தாழிசை.

முத்தி யடைந்த முனிவ ருளத்திலே
முத்தி யுருவாய் முடிந்த கழல்
மூவ ரறியா முதல்வன் கழல். (௧)

கோயிலூ ரென்னுங் குருபதி தன்னிலே
யாறி யமைந்த வருமைக் கழல்
ஆனந்த மாக வமர்ந்த கழல். (௨)

சித்தி யுருவாஞ் சிதம்பர தேவனென்
சித்தங் களிக்கச் சிறந்த கழல்
சிந்தை கெடுத்த திருப்பொற் கழல். (௩)

மாணு வவித்தை மயக்கை யொழியென்று
மாசி லறிவருள் வள்ளல் கழல்
மதிக்க வொணாத வடிவன் கழல். (௪)

அகங்கர மற்ற வறிவை யருளிமே
லறிவுரு வாச்செய் யமலன் கழல்
அய்ய மறநின்ற வம்பொற் கழல். (௫)

வேண்டாமை யென்னும் விழுச்செல்வந் தந்தெனை
யாண்டே யருளிய வையன் கழல்
ஆண்டவ ஒரு மருமைக் கழல். (௬)

எங்குஞ் சிவமா யிருக்க வருள்செய்து
சங்கை யறுத்த தலைவன் கழல்
சங்கோச மற்ற தனிப்பொற் கழல். (௭)

சித்தங் களிக்கச் சிவத்தை யருள்செய்த
சிற்றம் பலமென்னுந் தேவன் கழல்
சிந்தை கெடுத்த திருப்பொற் கழல். (௮)

மோக மறுத்து முனிவை யகற்றிநன்
மோனம தாக்கிய முத்தன் கழல்
முடிவை யருளு முனிவன் கழல். (௯)

கழநி யமர்ந்தடி யார்கள் களிக்கவே
காண வெழுந்த கருணைக் கழல்
கடைக்க ணளித்த கருத்தன் கழல். (௧௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அறிவு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பாச மறுக்கப் பறந்திட லாவதும்
பந்தங் கெடுக்கப் பதைத்திட லாவது
மாசைப் பெருக்கை யகற்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (க)

பந்தப் பெருங்கடல் பாழ்பட லாவதும்
பாதக மெல்லாம் பறித்திட லாவது
மந்தக் கரண மகற்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ (உ)

பொல்லாப் பிறவியைப் போக்கிட லாவதும்
போகாத பாவம் புறத்திட லாவது
மல்ல லுடலை யகற்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ (ங)

ஆங்காரந் தன்னை யகற்றிட லாவது
மானந்த கோச மறுத்திட லாவது
நீங்காத மாயையை நீக்கிட லாவது
நித்த மறிவா யிருந்திட னல்லவோ (ச)

தன்னிலே யெல்லா மிருந்திட லாவதுந்
தானெல்லாத் துள்ளு மிருந்திட லாவது
மன்னிய மில்லா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (ரு)

தொந்த வினைக டொலைத்திட லாவதுந்
தொல்லை புலகை யழித்திட லாவது
மந்தக் கரண மழித்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (சு)

கரண மனைத்துங் கழித்திட லாவதுங்
காரிய காரண மற்றிட லாவது
மரண முழுது மறிந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (எ)

எல்லா வவத்தை யிறந்திட லாவது
மேகாந்த மாக விருந்திட லாவது
மல்லன் முழுது மகற்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (அ)

வாக்கு மனது மறித்திட லாவது
மாறுபி மான மழிந்திட லாவதும்
போக்கு வரவற் றிருந்திட லாவதும்
புரண வறிவாய்ப் பொருந்திடி னல்லவோ. (கூ)

ஐய னருளை யடைந்திட லாவது
மானந்த மாயே யிருந்திட லாவது
மெய்ய ருளத்தை விரும்பிட லாவதும்
விமல வறிவாய் விளங்கிடி னல்லவோ. (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பொருள் வணக்கம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதிநடு வந்தமிலா தமர்ந்துநின்ற பொருளை
யத்துவித மாம்பொருளை யகிலநிறை பொருளைச்
சோதியதாய் விளங்கியொளிர் சுருதிமுடிப் பொருளைச்
சுத்தமதா நற்பொருளைச் சுகசொருபப் பொருளை
நேதியுடைப் பூன்றமதாய் நிர்க்குணமாம் பொருளை
நின்மலமா மகப்பொருளை நெடியவருட் பொருளைப்
பாதிமதி சூடியதோர் பரங்கருணைப் பொருளைப்
பரமசிதா காசமெனும் பரம்பொருளைப் பணிவாம். (க)

சித்துருவாய்ச் சத்துருவாய்ச் சிவமயமாம் பொருளைச்
செகமுழுது மாகிநின்று சிறந்தொளிரும் பொருளை
வத்துவுமா மல்லவுமாம் வடிவுடைநற் பொருளை
வானவருக் கறியவொணு வடிவருளும் பொருளை
யத்துவித மாகியொளி யருவமெனும் பொருளை
யகண்டமதாய்ப் பரவிநிறை யானந்தப் பொருளைச்
சித்தமுத லாறறியாச் சின்மயமாம் பொருளைச்
சிதம்பரமா மம்பரத்தைத் தினந்தினமும் பணிவாம். (உ)

ஐயாவென் னப்பாவென் றடிபணிந்து வணங்கு
மடியவரைப் பரமாக வமைத்தருளும் பொருளைத்
துய்யாவென் துரையேநற் றுரியவொளிச் சுடரே
தூயவடி வென்றலையிற் சூட்டுபரம் பொருளைப்

பொய்ம்மயமா மாயையிருட் போயொழிய வருளிப்
புண்ணியமே வோருருவாய்ப் பொலிந்தபரம் பொருளைச்
செய்யபெருந் தவத்தினர்க டினம்பணிந்து வணங்குஞ்
சிதம்பரமாம் பரம்பொருளைத் தினந்தினமும் பணிவாம். ()

வானவருந் தானவரும் வசிட்டமுனி வோரு
மண்ணிலுளோ ரியாவர்களும் வணங்குபெரும்பொருளைக்
கோனவர்க்கு மோனியர்க்குங் குருமணியாய் நின்ற
குமரனொடு வைங்கரனும் வணங்குபெரும் பொருளை
நானொழிந்து நானவனா ஞானகனப் பொருளை
நற்சிவமே யாகிநின்ற நடுநிலையாம் பொருளைத்
தீனருளத் திருந்துமவர் தெளிந்தறியாப் பொருளைச்
சின்மயமாஞ் சிதம்பரத்தைத் தினந்தினமும் பணிவாம்.()

குருமணியைப் பெருமணியைக் குருவருளா நின்ற
கோமணியை மேன்மணியைக் குணமணியை யென்னுட்
பருமணியைப் பரைமணியைப் பான்மைபெறு மணியைப்
பாழ்மலமா முளத்தணுகாப் பானமெனு மணியைக்
கருமணியைக் கண்மணியைக் கதிரவனாய் நின்ற
கனமணியை யினமணியைக் ககனமெனு மணியை
யுருமணியை யுளமணியை யோங்குசிவ னாகு
மொருமணியை யுணருருவா முயர்மணியைப் பணிவாம்.

அரிமணியை யரன்மணியை யம்பரமா மணியை
யாதிமறை நாலறியா வமரர்சிகா மணியைப்
பொருண்மணியைப் பொன்மணியைப் புண்ணியமா நின்ற
போதமய நிமலபுரி புரணமெனு மணியைத்

தெருண்மணியை யருண்மணியைச் சிவமயமா மணியைச்
செகமணியை யகமணியைச் செறிந்தறிவா மணியை
மருமணியை நிறைமணியை மனமணியை யாரும்
வணங்குசிதம் பரமயமா மணியதனைப் பணிவாம். (சு)

கண்ணொளியை விண்ணொளியைக் கதிரவன்ற னொளியைக்
கதிரவன்ற னொளிக்குமொளி கொடுத்தருளு மொளியைப்
பெண்ணொளியை யாணொளியைப் பெருவெளியா மொளியை
பேரொளியாய் நிறைபூரணப் பெரும்பிரம வொளியை [ப்
பெண்ணொளியை யெழுத்தொளியை யெங்குநிறை யொளி
யென்னுளமிர் றூறிநின்ற வெண்மயமா மொளியைப் [யை
பண்ணொளியைப் பரவொளியைப் பரவெளியாய் நின்ற
பரமசிதா காசமெனும் பரசிவனைப் பணிவாம். (எ)

விடையவின்மைக் கரணவின்மை விடயமிலா வின்மை
வேதவின்மை நாதவின்மை வெறுமொளியா மின்மைக்
கடையனுள மதனிலொளிர் கரணமிலா வின்மைக்
கரவுடைய வவித்தையினிற் கலந்துநின்ற வின்மை
யடையவொளி ரகமதனி லமர்ந்தவொரு வின்மை
யானந்த மானபர மானந்த வின்மைந்
தொடையல்புனை குருவுருவாய்ச் சோதிவடி வான
சுகசொரூப சிதம்பரத்தைத் தொழுதுதினம் பணிவாம்.

அருங்கனியைப் பெருங்கனியை யடைவுடைய கனியை
யண்டமெனும் பெருந்தருவி னமர்ந்துளவொண் கனியை
பெரும்பிரம மாகியொளிர் பேதமிலாக் கனியைப் [ப்
பேதமெனும் பெருந்தருவிற் பிறங்கலிலாக் கனியை

யொருகனியை யுளகனியை யோதரிய கனியை
யுவமையிலாப் பெருங்கனியை யோங்குசிவக் கனியை
மருவுபெரும் பரங்களுக்கும் பரமாகி நின்ற
மாபெரிய சிதம்பரமாம் வான்கனியைப் பணிவாம். (௯)

என்றுமுள கனியையெனு மொன்றுமிருப் பதுவா
மிமையவரு மேமாக்க விருப்பதொரு கனியை
மன்றதனி னடனமிடு மாபெரிய கனியை
மாதேவக் கனியதனைக் காணவெளி தோதா
னன்றுமிலைத் தீதுமிலை நடுவதுவாய் நின்று
நாடாத கண்களுக்கு நாடமிக வெளிதோ
சென்றுசென்று மனமிறந்து சிவதுரிய மாகுஞ்
சிதம்பரத்தை யெந்நாளுஞ் சென்றுதொழு வோமே. ( )

கழுநியெனு நகரதனுட் கனியுமொரு கனியைக்
காமமுத லியாவையுமே களைந்துளவொண் கனியை
யிளமையிலே துறந்தபெருங் கனிதனக்கு மினிய
வின்புடைய சிதம்பரமா மன்புடைய கனியை
வளமையுள வடியருக்கு வாய்த்ததொரு கனியை
வாக்குமன மெட்டாத மாநிலத்தே விளங்கு
மொருமையுட னுண்பவர்க்கே யுருசிதருங் கனியை
யோங்குசிதம் பரக்கனியை யுளத்தினினை திற்பாம். (௧௧)

ஆசைதனைக் காலயமா மகங்கரத்தின் வீடா
மடங்காத டம்பனுக்கு மரண்மனையா மிந்தப்
பாசமெனு மாபாவி பயிலிடமா மூரிய
பத்தியிலா மனமிருந்து பாதவிக்குங் குடிலாங்

கோசமெனுங் குகையதனி லினியிருப்ப தரிதாங்
குலைந்துவிடும் படியெனக்குக் குருவடிவாய் வந்திங்
காசுதவிர்த் தெனையாண்ட வருட்கடலே யடிமை
யஞ்ஞானந் தனையகற்றி யறிவருளப் பணிவாம். (௬௨)

பேரருளைப் பேருருவைப் பெரும்புகழை யுடைய
பெருமைநிறை தரும்பொருளைப் பெருங்கருணைக் கடலை
யாரருளை யுடையவர்த மகமதனி னிறைந்த
வம்பரத்தை யெம்பரத்தை யகத்தினுக்கோர் விளக்கை
மாரனுடைய வலியழித்த வல்லபமாம் பொருளை
மாமறைகண் முழுதறியா வான்சுவையாம் பொருளைக்
கோரமன மகற்றியென்றன் குடிமுழுது மாண்ட
குருபரனும் பரம்பொருளைக் குறித்துவணங் குதுமே. ()

என்றுரையை யென்னுயிரை யென்மனத்து ணிறைந்து
வெழிலுருவா மறிவுதனை யெனக்கருளும் பொருளைப்
பொன்பணிபோ னிறைந்துநின்று புவிமுழுது மான
புனிதமுறும் பெரும்பொருளைப் போதமுடைப் பொருளை
வன்பருள மருவாத வானகமாம் பொருளை
வான்பொருளைத் தேன்பொருளை வையமெனும் பொருளை
தன்பெருமை தானறியாத் தன்மயமாம் பொருளைத் [த்
தனையுணரும் வழியெனக்குத் தந்தருளப் பணிவாம். ()

எப்பொழுது மிலங்கியிடு மிருங்கருணைப் பொருளை
யெல்லாமாம் வடிவருளு மிறைவனெனும் பொருளைச்
செப்பரிய தேசுடைய திவ்யமெனும் பொருளைத்
தேசிகனா யெழுந்தருளுந் திருவுடைநற் பொருளை

முப்பொருளு மாகியொளிர் முதலுடைநற் பொருளை
மூன்றவத்தைக் கப்பாலா முடிவருளும் பொருளை
யப்பாலைக் கப்பாலா யமர்ந்தருளும் பொருளை
யம்பரத்துக் கம்பரமே யாகியதைப் பணிவாம். (கரு)

சிந்தைதனக் கெட்டாத செல்வமெனும் பொருளைச்
சித்துருவா யிலகியொளிர் சிதம்பரமாம் பொருளைப்
பந்தமெனும் பவமகற்றும் பரிசுடைநற் பொருளைப்
பாசவிரு டவிர்த்தருளும் பரஞ்சோதிப் பொருளைத்
தொந்தமுறு பந்தவினை தொலைத்தருளும் பொருளைச்
சோதியினுட் சோதியதாய்த் தோன்றிநின்ற பொருளை
யெந்தைகுரு வடிவாகி யிலங்கிடுநற் பொருளை
யெம்முளிருந் தமுதூற வெம்முளத்தே பணிவாம். (க௬)

அவத்தையெனும் பவத்தையறுத் தறிவருளும் பொருளை
யங்கமெனும் பங்கமதை யறுத்தருளும் பொருளைத்
தவத்தையருள் புரியுமடி தனையருளும் பொருளைத்
தத்துவமாம் பதமதனைத் தந்தருளும் பொருளைப்
பவத்தையொரு நொடிதனிலே பறந்திடச்செய் பொருளைப்
பத்தியெனும் பெரும்பதத்தைப் பணித்தருளும் பொரு [ளைச்
சுபத்தையருள் புரிந்திடுநற் றூய்யமல ரடியைச்
சுத்தசிதம் பரமெனவே துதித்துநின்று பணிவாம். (கஎ)

கோசமெனுங் குகையதனிற் குவிந்துநின்ற பொருளைக்
குற்றமெனு மவத்தைகளைக் குலைத்தருளும் பொருளைப்
பாசமெனு மாசகற்றும் பரங்கருணைப் பொருளைப்
பத்தருளச் சினகரத்திற் பரிந்தமரும் பொருளை

யேசரிய குணமருள வெம்முளுறை பொருளை
யெங்குநிறை சிதம்பரமா மெமதுகுருப் பொருளை
யீசனுள மேவியரு ணின்மலமாம் பொருளை
நிரஞ்சனமாஞ் சின்மயத்தை நினைந்துபணிந் திடுவோம். ()

தற்பதமாய் விளங்கிடுமோர் தனிமுதலாம் பொருளைச்
சத்துமய மாகிநின்ற தற்பரமாம் பொருளைக்
கற்பமென்றுங் கணமென்றுங் காலவள வாகிக்
கலங்காது நின்றருளுங் கடவுளெனும் பொருளைச்
சொற்பலவாய்ப் பொருள்பலவாய்த் தோன்றிநின்ற பொரு
சொற்பொருளுக் கதீதமதாந் துரியவருட் பொருளை[ளைச்
நிற்பனவாய் நடப்பனவாய் நிகழுமருட் பொருளை
நெடியசிதம் பரவடிவை நினைந்துதினம் பணிவாம். (கக)

ஆக்கையெனு மிடிகரையை யகன்றுநின்ற பொருளை
யாசையெனும் வேசையைமுன் னகற்றிநின்ற பொருளை
மோக்கமெனும் பதமடைய முடிவருளும் பொருளை
முத்தியெனுந் திருவார்த்தை மொழிந்தருளும் பொருளைப்
போக்கினொடு வரவிலாப் புகழுடைநற் பொருளைப்
புந்திமுத லறியவொணுப் பொற்புடைநற் பொருளை
நோக்கரிய பரம்பொருளை நுவன்றருளும் பொருளை
நுண்மைசிதம் பரவடிவை நோக்கியடி பணிவாம். (உ0)

வாக்குமுதற் புலன்களெலா மன்னிநின்ற பொருளை
வாசகவாச் சியமிலதாய் மன்னிநின்ற பொருளை
நீக்கமிலாப் பரவடிவாய் நிகழ்ந்துநின்ற பொருளை
நிகழ்மனமாஞ் சகத்துருவ நீங்கிநின்ற பொருளைச்

சாக்கிரமா மவத்தைமுதற் றள்ளிநின்ற பொருளைச்
சாக்கியெனுந் தன்மயத்தைத் தந்தருளும் பொருளை
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலமாய்
மருவுசிதம் பரவடிவை வணங்கியடி பணிவாம். (உக)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# கிளிப்பயிற்று.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

விண்ணுருவு மண்ணுருவு மானா னென்னீர்
மெய்யுருவும் பொய்யுருவு மானா னென்னீர்
பெண்ணுருவு மாணுருவு மானா னென்னீர்
பேதமதாம் பொருளனைத்து மானா னென்னீர்
கண்ணுருவுங் கருத்துருவு மானா னென்னீர்
கருதுகின்ற பொருளவையு மானா னென்னீ
ரெண்ணுருவு மெழுத்துருவு மானா னென்னீ
ரெமதுசிதம் பரமயமே யானா னென்னீர். (க)

தொந்தவினை யொன்றுமிலாத் துரிய மென்னீர்
தோற்றமெலா மாகிநின்ற சோதி யென்னீர்
பந்தவித மொன்றுமிலாப் பான மென்னீர்
பாவிப்பார் பாவனைக ளானா னென்னீ

ரந்தமிலா னடியருள மகலா னென்னீ
ரடியருக்கே வானந்த மளித்தா னென்னீ
ரெந்தமுயி ராகிநின்ற விறைவா வென்னீ
ரெங்குநிறை சிதம்பர மென்னீ ரென்னீர். (உ)

ஒருருவே மூவுருவ மானு னென்னீ
ருண்மையிலோ ருருவுமிலா வுணர்வே யென்னீர்
பார்முதலாம் பலவுருவாய் நிறைந்தா னென்னீர்
பந்தமுத்தி தாமிலதாம் பதியே யென்னீர்
பேரிலதா மூரிலதாம் பெரியோ னென்னீர்
பின்னிலதா முன்னிலதாம் பிரம மென்னீர்
சீரிலதாஞ் சிறப்பிலதாஞ் சித்தே யென்னீர்
சிற்கனமாஞ் சிதம்பரமே யென்னீ ரென்னீர். (ஙு)

கழுநியெனும் பதியமர்ந்த கண்டே யென்னீர்
கற்பனைக ளொன்றுமிலாக் கனியே யென்னீ
ரெனையெனிலே தந்தருளு மெந்தா யென்னீ
ரென்னுயிரா யெம்முறவா யிசைந்தா னென்னீர்
மனமுதலாங் கரணங்கட் கதிதா வென்னீர்
வான்சுவையாய் நின்றவொரு மணியே யென்னீர்
கரணமெலா மாகிநின்ற கண்ணே யென்னீர்
கனகமன்றிற் சிதம்பரமாய்க் கரந்தா னென்னீர். (ச)

அண்டமெலாங் கடந்துநின்ற வறிவே யென்னீர்
வந்தநடு முதலுமிலா வருளே யென்னீர்
கண்டபொரு ளனைத்துமிலாக் கதியே யென்னீர்
ககனமய மாகியவெங் கண்ணே யென்னீர்

பண்டையுள வினையனைத்தும் பறித்தா னென்னீர்
பாழான வென்மனத்தைப் பணித்தா னென்னீர்
தொண்டருளங் குடிகொண்ட தோன்ற லென்னீர்
சுககனமாஞ் சிதம்பரமாய்ச் சொலித்தா னென்னீர். (ரு)

கண்டவர்தம் மனமுருக்குங் கதிரே யென்னீர்
கண்மணிக்குங் கண்மணியாய்க் கலந்தா னென்னீ
ரண்டமெலாம் பரவுகின்ற வமுதே யென்னீ
ராரமுதாம் பேரமுதே யனந்தா வென்னீர்
மண்டலமும் விண்டலமு மாகா னென்னீர்
மண்விண்ணு மாகியொளிர் மானே யென்னீர்
கொண்டெனையு மாண்டருளுங் கோவே யென்னீர்
குருமணியிற் பெருமணியாங் குரவா வென்னீர். (சா)

திரிபுடிக்கு மப்பாலாந் திருக்கே யென்னீர்
திரிபுரத்துக் கதிதமதாய்த் திகழ்ந்தா னென்னீர்
பரிபுரண வுருவாகிப் பரந்தா னென்னீர்
பரிவுடைய பத்தர்தமைப் பரித்தா னென்னீர்
கரியதுவா நின்றபெருங் கருத்தே யென்னீர்
கரியவனுங் கமலனுமே காணா னென்னீ
ரரியதவப் பொருளாகி யமர்ந்தா னென்னீ
ரம்பலத்திற் சிதம்பரமா யமைந்தா னென்னீர். (எ)

அன்னையினுந் தயவுபுரி யத்தா வென்னீ
ரம்பரத்துக் கம்பரமா மரசே யென்னீ
ரென்னையொரு பொருளாக வாண்டு கொண்ட
வெங்குருவே யெம்முறவே யிறையே யென்னீர்

முன்னமறை முடிவறியா முத்தா வென்னீர்
முப்பொருளுங் கடந்ததொரு மூல மென்னீர்
பன்னுதவர் கருத்தகலாப் பயனே யென்னீர்
பரமசிதா காசனெனும் பரனே யென்னீர். (அ)

பொல்லாத மனமுடைய வென்னை யாண்ட
புண்ணியனே கண்ணியனே புனிதா வென்னீர்
நல்லோர்க ளெல்லோர்க்கு நடுவே யென்னீர்
நாயினுமே யிழிந்தவெனை யாண்டா னென்னீர்
பல்லோரும் பாங்குறவே பணிவாய்ப் போற்றும்
பரமனையே போற்றிடநற் பூசை யென்னீர்
சொல்லாறு மனத்தாலுந் தொடர வொண்ணாச்
சொல்லுமன மாகிநின்ற சுடரே யென்னீர். (கூ)

அந்தமிலா வானந்த மளித்தா னென்னீ
ரமிர்தத்தின் வான்சுவையே பயனே யென்னீர்
தொந்தமெலாங் கடந்துநின்ற சொரூபா வென்னீர்
சுந்தரனே தந்திரனே சோதி யென்னீர்
சிந்தைதனிற் றித்திக்குந் தேனே யென்னீர்
சிவமயமாய் நின்றொளிருந் தெளிவே யென்னீர்
முந்துசக சிவபர மானு னென்னீர்
முத்திசிதம் பரவடிவா மென்னீ ரென்னீர். (கம)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பல்லாண்டு.

(அடியிரண்டாய்த் தம்மி லொத்துவந்த குறள்வெண்செந்துறை.)

சங்கை யறுத்த தனிப்பெருங் காளைக்குச்
  சந்ததம் பல்லாண்டென் றோத வாரீர்
சங்கரன் றானே தடுத்தாள வந்தோர்
  தத்துவர்க்குப் பல்லாண் டோத வாரீர்
எங்குஞ் சிதம்பர மாகி யிசைந்துள
  வெந்தைக்கும் பல்லாண்டென் றோத வாரீர்
கங்குல் கடந்த கருணைக்குப் பல்லாண்டு
  காலங்கண் மூன்றுமின் றோத வாரீர். (க)

சச்சிதா னந்தத் தனிமுத லொன்றெனச்
  சாற்றினர்க்குப் பல்லாண் டோத வாரீர்
மெச்சு மடியார் விரும்புங் குருவிற்கு
  மென்மேலும் பல்லாண்டென் றோத வாரீர்
எச்ச மறுத்தாண் டடியாரிற் கூட்டிய
  வாண்டவர்க்குப் பல்லாண் டோத வாரீர்
அச்சுத ஞான வமலசொ ரூபர்க்கே
  யன்புடன் பல்லாண்டென் றோத வாரீர். (உ)

மெய்ப்பொரு ளொன்றையே மேவ வளித்தநம்
  மெய்ம்மைக்குப் பல்லாண்டென் றோத வாரீர்
மேன்மை குலங்கல்வி மேவா தொழித்தநன்
  மேனியர்க்குப் பல்லாண்டென் றோத வாரீர்

பொய்ப்பத நீக்கிப் புனிதன் கழலிணை
போற்றினற்குப் பல்லாண் டோத வாரீர்
போத மளித்த பொறுமைக்குப் பல்லாண்டு
போதாது போதாதென் றோத வாரீர். (௯)

பந்தமும் வீடும் படைத்தே யழித்த
பரமற்குப் பல்லாண் டோத வாரீர்
பந்தங் கெடுத்துப் பரவுரு வாக்கிய
பண்டிதற்குப் பல்லாண் டோத வாரீர்
சிந்தை கெடுத்துச் சிவமாகச் செய்தருள்
சின்மயற்குப் பல்லாண் டோத வாரீர்
சித்த மிறந்த விடத்திற் றிகழ்ந்திடுஞ்
சித்தர்க்குப் பல்லாண் டோத வாரீர். (௰)

எந்த முயிரா யிருக்கு மிறைவனுக்
கெப்பொழுதும் பல்லாண் டோத வாரீ
ரெல்லாமா யல்லா விறைவற்குப் பல்லாண்
டெவ்விடத்தும் போற்றி யோத வாரீர்
செந்தமி ழென்சொலைத் தன்செவிக் கேற்றிடுஞ்
செல்வற்குப் பல்லாண் டோத வாரீர்
செங்கமலப் பாத மென்றலை மீதினிற்
சேர்த்தவற்குப் பல்லாண் டோத வாரீர். (௫)

பிரமகூ டத்தர் பிரிவற நின்ற
பெருமைக்குப் பல்லாண்டென் றோத வாரீர்
பேத மனைத்தும் பிரமமே யாமென்று
பேசினற்குப் பல்லாண் டோத வாரீ

அருமை தெரிந்த வடிய ரகத்தி
னடைந்தாற்குப் பல்லாண் டோத வாரீ
ரம்பர மாக வருளுங் கழலுக்
கனந்த முறைப்பல்லாண் டோத வாரீர். (௬)

நித்தியா னந்த நிமலசொ ரூபற்கு
நித்தமு பல்லாண்டென் றோத வாரீர்
நிருமல மான பரமற்குப் பல்லாண்டு
நேசமாய் வாழ்த்திநின் றோத வாரீர்
பத்தர்கள் சூழும் பரமகல் யாணற்குப்
பாதம் பணிந்துநின் றோத வாரீர்
பார்முழு தாளும் பகவற்குப் பல்லாண்டு
பல்லா யிரத்தாண்டென் றோத வாரீர். (௭)

சோம ரருக்க ருருத்திர ராகிய
சுந்தரற்குப் பல்லாண் டோத வாரீர்
சுத்த வழிவாழு சொரூபற்குப் பல்லாண்டு
சூழாமற் சூழ்ந்துநின் றோத வாரீர்
காம மனைத்துங் கடக்கக் கருதிய
கண்ணற்குப் பல்லாண் டோத வாரீர்
கற்பனை முற்று மிறக்கும் படிசெய்த
காரணற்குப் பல்லாண் டோத வாரீர். (௮)

காண்பானுங் காட்சியு ஞானமு மில்லாக்
கர்த்தற்குப் பல்லாண் டோத வாரீர்
கண்ணுக் கினிதா யெழுந்தசொ ரூபற்குக்
கற்பங்க டோறுநின் றோத வாரீர்

மாண்பான மோன மருளு மிறைவற்கு
  மங்களம் பாடிநின் றோத வாரீர்
மண்ணும் விண்ணு நிறைந் தெங்கும் விளங்கிடு
  மகிமைக்குப் பல்லாண்டென் றோத வாரீர். (௯)

கோலங் குருவுரு வாகி யெழுந்திடுங்
  கொற்றவற்குப் பல்லாண் டோத வாரீர்
கோதிலா ஞான மருளு மிறைவற்குக்
  கூவியே பல்லாண் டோத வாரீர்
காலங்கண் மூன்றுங் கடக்கக் கருணைசெய்
  கற்பகற்குப் பல்லாண் டோத வாரீர்
கற்பனை நீதக் கருணை யுருவனைக்
  கண்டு களித்துநின் றோத வாரீர். (௧௦)

வேறு.

# திருப்பல்லாண்டு.

(ஈற்றடிமிக்கு நான்கடியால் வந்த கலித்தாழிசை.)

எல்லாமா யிலங்குகின்ற வெழிலுருவா மீசனுக்குப்
பொல்லாத மனத்தினனைப் போற்றுதலு மேத்துதலு
மில்லாத வெனக்கருள வெழுந்தருளின் றிருக்கோலம்
பல்லா யிரத்தாண்டு பல்லாண்டு கூறுதுமே
பார்ப்பரிய நாதனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௧)

அண்டமெலாங் கடந்துநின்ற வருமறையி னரும்பொருளைக்
கண்டவர்தம் மனமுருக்குங் கண்ணனை கற்பகத்தைத்
தொண்டருளந் தனில்விளங்குஞ் சோதியதாம் வான்பொருளு

ளைப், பண்டையுள நாதனுக்கே பல்லாண்டு கூறுதுமே
பார்முதலாய்ப் பரந்தவற்கே பல்லாண்டு கூறுதுமே. (௨)

பிரமாதி தேவர்களும் பிரித்தறியாப் பரம்பொருட்குத்
தரமாகத் தனையருளுஞ் சங்கரனுந் தத்துவற்குப்
பரமாக நானடைந்து பணிசெயவே பார்த்தவற்குப்
பரமாக வாண்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பங்கயத்தா ளளித்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே. (௩)

மாறுபடு மென்மனத்தின் மயக்கறுத்த மறைப்பொருட்குக்
கூறுபடா தெனக்கருளிக் கொடுவினையி னுழாமே
தேறுதல்செய் தாண்டாற்குச் செகமுழுது மறியும்வணம்
பாறுயரீ றணிவரொடும் பல்லாண்டு கூறுதுமே
பகர்வரிய நாதனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௪)

பரமபதம் படிந்திடவே பரமானந் தங்கொடுக்கக்
குருபரனு யுருக்கொண்டு கோயிலூர் தனிலெழுந்து
மருவலிலா வஞ்ஞான மாளவெனைக் காத்தளித்துப்
பருகமிர்தா யானவர்க்குப் பல்லாண்டு கூறுதுமே
பதுமமலர்ப் பாதனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௫)

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# சரணம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அகமெனு மமலாவுன் சரணஞ் சரண
மகமில வுருவாநின் சரணஞ் சரணங்,
குகைதனி லுறைவோய்நின் சரணஞ் சரணங்
குகையினுக் கதிதாநின் சரணஞ் சரண,
மகமித மிலவாநின் சரணஞ் சரண
மகமதில் வருவாய்நின் சரணஞ் சரணங்,
கமலமென் சரணாநின் சரணஞ் சரணங்
ககனநன் மணியேநின் சரணஞ் சரணம். (க)

கனியினுங் கனியேயுன் சரணஞ் சரணங்
கனியினுள் ரசமேயுன் சரணஞ் சரணஞ்,
செகமுயிர் பரமேநின் சரணஞ் சரணஞ்
சிவமெனு முருவேயுன் சரணஞ் சரண,
மனமெனு மணியேயுன் சரணஞ் சரண
மனதினி லறிவேநின் சரணஞ் சரணஞ்,
செகமதி னிறைவாய்நின் சரணஞ் சரணம்
ஜெயஜெய குருவாநின் சரணஞ் சரணம். (உ)

தத்துவ வடிவாநின் சரணஞ் சரணந்
தற்பர வுருவாநின் சரணஞ் சரணங்,
கற்பனை யுளவாநின் சரணஞ் சரணங்
கற்பனை யிலவாநின் சரணஞ் சரணஞ்,

சித்துரு வடிவாநின் சரணஞ் சரணஞ்
சிற்சுக வமலாநின் சரணஞ் சரணஞ்,
சிற்சுக மருள்வாய்நின் சரணஞ் சரணஞ்
சிற்கன ககனாநின் சரணஞ் சரணம். (௩)

தேனினுந் தேனேநின் சரணஞ் சரணந்
தேவினுந் தேவேநின் சரணஞ் சரணம்,
பாவினில் ரசமேநின் சரணஞ் சரணம்
பானம தருவாநின் சரணஞ் சரணங்,
கோவினுங் கோவேநின் சரணஞ் சரணங்
கோயிலூர் வாழ்வேநின் சரணஞ் சரண்,
மானினு மானேநின் சரணஞ் சரண
மாசிதம் பரமேநின் சரணஞ் சரணம். (௪)

அகிலம தருவாநின் சரணஞ் சரண
மகிலமு மறிவாய்நின் சரணஞ் சரண,
நிகிலம தருவாநின் சரணஞ் சரண
நிகிலமு மறிவாநின் சரணஞ் சரண,
மௌனமெனி லருள்வாயுன் சரணஞ் சரண
மௌனமுத லுயிராய் சரணஞ் சரணந்,
தனையருள் குருவேநின் சரணஞ் சரணம்
ஜயஜய குரவாநின் சரணஞ் சரணம். (௫)

பந்தம தில்லாய்நின் சரணஞ் சரணம்
பந்தம தறுவாய்நின் சரணஞ் சரணந்,
தொந்தம தானாயுன் சரணஞ் சரணந்,
தொந்த மறுப்பாயுன் சரணஞ் சரண

மெந்தனை யாண்டாயுன் சரணஞ் சரண
மெம்முயி ராகுயுன் சரணஞ் சரணஞ்,
சிந்தனை தீர்ப்பாயுன் சரணஞ் சரணஞ்
ஜெயஜெய சகஞநின் சரணஞ் சரணம். (சா)

வானம தாருவாநின் சரணஞ் சரணம்
வானவ ருணராய்நின் சரணஞ் சரண,
மீனமி லின்பேநின் சரணஞ் சரண
மீனரு ளனுகாய்நின் சரணஞ் சரண,
மோனம தாருவேநின் சரணஞ் சரண
மோகமி லமலாநின் சரணஞ் சரணந்,
தீனத யாளாநின் சரணஞ் சரணஞ்
சிதம்பர வரசேநின் சரணஞ் சரணம். (எ)

காலம தில்லாய்நின் சரணஞ் சரணங்
காலம தாருவாய்நின் சரணஞ் சரணஞ்,
சீலம துடையாய்நின் சரணஞ் சரணஞ்
சிருறு தெளிவேயுன் சரணஞ் சரணம்,
பாலமு தனையாய்நின் சரணஞ் சரணம்
பார்வையி லருள்வாய்நின் சரணஞ் சரணஞ்,
சீலம் தருள்வாய்நின் சரணஞ் சரணஞ்
சிதம்பர சொருபாநின் சரணஞ் சரணம். (அ)

முனிவையு முனிவாய்நின் சரணஞ் சரண
முடிவினுண் முடிவேயுன் சரணஞ் சரணங்,
கனிவினை யருள்வாயுன் சரணஞ் சரணங்
ககனநல் லுருவேயுன் சரணஞ் சரணந்,

தனிமுதல் லுருவாநின் சரணஞ் சரணந்
தனியினுந் தனியேநின் சரணஞ் சரணம்,
ஜனிதமில் பரமாவுன் சரணஞ் சரணம்
ஜயஜய குரவாநின் சரணஞ் சரணம். (கூ)
திரிதலி லுருவாநின் சரணஞ் சரணந்
திரிகுண மறியாநின் சரணஞ் சரணங்,
கரியதென் னுருவாநின் சரணஞ் சரணங்
கடகரி யுரியாய்நின் சரணஞ் சரண,
மரியய னரனேநின் சரணஞ் சரண
மருவுரு விலவாநின் சரணஞ் சரண,
முரியவம் பலவாநின் சரணஞ் சரண
முயர்சிவ குருவேநின் சரணஞ் சரணம். (கo)

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# கா ளம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அறிவே சிவனுமென் றாதேடா காளம்
ஆனந்த மாமேனுமென் றாதேடா காளம்
பிறிவில் பொருளேயென் றாதேடா காளம்
பேதம் பிரமமென் றாதேடா காளம். (க)
போதம் பிறந்ததென் றாதேடா காளம்
போதம் பிறவாதென் றாதேடா காளம்

வாதந் தவிர்ந்ததென் றாடேடா காளம்
வானமாய் நின்றதென் றாடேடா காளம் (௨)
சாதி தவிர்ந்ததென் றாடேடா காளம்
சங்கை யொழிந்ததென் றாடேடா காளம்
நீதி தவிரோமென் றாடேடா காளம்
நின்மலம் போதமென் றாடேடா காளம். (௩)

அண்டங் கடந்தோமென் றாடேடா காளம்
ஆசை யொழிந்ததென் றாடேடா காளம்
பிண்ட நிறைந்ததென் றாடேடா காளம்
பேரறி வானோமென் றாடேடா காளம். (௪)

அவித்தை கெடுத்தோமென் றாடேடா காளம்
அவத்தை யழித்தோமென் றாடேடா காளம்
பவத்தை யறுத்தோமென் றாடேடா காளம்
பான மயமேயென் றாடேடா காளம். (௫)

மனமே யொழிந்ததென் றாடேடா காளம்
மானங் கழிந்ததென் றாடேடா காளம்
உனவினி யில்லையென் றாடேடா காளம்
உணர்வே பிரமமென் றாடேடா காளம். (௬)

செகமே யொழிந்ததென் றாடேடா காளம்
சிதம்பர மானோமென் றாடேடா காளம்
அகமே தவிர்ந்தோமென் றாடேடா காளம்
ஆனந்த போதமென் றாடேடா காளம். (௭)

எல்லை கடந்தோமென் றாடேடா காளம்
எங்குஞ் சிவமேயென் றாடேடா காளம்

நல்லோ ரறிந்தாரென் றூதேடா காளம்
நாமே நாமானோமென் றூதேடா காளம். (௮)

தில்லை யமர்ந்தாமென் றூதேடா காளம்
தேனி னினித்தானென் றூதேடா காளம்
அல்ல லொழித்தோமென் றூதேடா காளம்
அம்பல மானோமென் றூதேடா காளம். (௯)

சித்தே பிரமமென் றூதேடா காளம்
சேதன நாமேயென் றூதேடா காளம்
வத்து வறிவாமென் றூதேடா காளம்
வான்பொரு ளானாமென் றூதேடா காளம். (௧௦)

சித்த மிறந்ததென் றூதேடா காளம்
சிவமய மானோமென் றூதேடா காளம்
அத்த னறிவேயென் றூதேடா காளம்
ஆங்காரங் கெட்டதென் றூதேடா காளம். (௧௧)

சிதம்பர நாதனென் றூதேடா காளம்
செல்வப் பொருளேயென் றூதேடா காளம்
பதந்தர வந்தானென் றூதேடா காளம்
பரம சிவமேயென் றூதேடா காளம். (௧௨)

ஆசை தவிர்ந்தாமென் றூதேடா காளம்
அச்சங் கெடுத்தாமென் றூதேடா காளம்
நேச மறிவேயென் றூதேடா காளம்
நிமல மானோமென் றூதேடா காளம். (௧௩)

பந்தங் கெடுத்தானென் றாடேடா காளம்
பான மளித்தானென் றாடேடா காளம்
சொந்தப் பொருளேயென் றாடேடா காளம்
சோதியுட் சோதியென் றாடேடா காளம். (க௪)

எந்த முயிராமென் றாடேடா காளம்
ஏகாந்த மானமென் றாடேடா காளம்
சிந்தை யழித்தானென் றாடேடா காளம்
சிதம்பர தேவனென் றாடேடா காளம். (க௫)

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# பல்லி.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அரியமரர் தேடரிய வையன்வரு மாகி
லாதிமறை காணவொண்ணு வமலன் வருமாகில்
பிரியமுள பத்தரெலாம் பேணவரு மாகில்
பிரியமுட னின்னொருகால் பேசுசிறு பல்லி. (க)

கழுநிதனி லமர்ந்தருளொண் கன்னல்வரு மாகில்
காலமெலாங் கடந்துநின்ற கருணைவரு மாகி
லிளமையிலே துறந்துவந்த வினியன்வரு மாகி
லின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. (உ)

பத்தர்க டினம்பணியும் பாதன்வரு மாகில்
பார்ப்பறவே பார்த்தருளும் பானுவருமாகி
லெத்தியெனை யாண்டருளு மிறைவன்வரு மாகி
லெத்திசையு மின்னொருகால் சொல்லுகிறு பல்லி. (௩)

பத்தருளங் கோயில்கொண்ட பரமன்வரு மாகில்
பானமதை யெப்பொழுதும் பகரவரு மாகின்
முத்தனுமுத் தியுமிலதா மோனன்வரு மாகின்
முன்னமொரு கால்வரவு சொல்லுகிறு பல்லி. (௪)

சிதம்பரமா மெமதுகுரு செப்பவரு மாகில்
சித்துருவை யெனக்கருளுஞ் செல்வன்வரு மாகில்
பதம்பெறவே வைத்தெனையும் பார்க்கவரு மாகில்
பத்தியொடு பரன்வரவைச் சொல்லுகிறு பல்லி. (௫)

ஆதியடி வைத்தெனையு மாளவரு மாகி
லாதிசக குருவடியை யமைக்கவரு மாகில்
சோதிவடி வாக்கவல்ல தோழன்வரு மாகில்
சொச்சொருபன் வரவுதனைச் சொல்லுகிறு பல்லி. (௬)

சித்துமய மாக்கவல சித்தன்வரு மாகில்
செகத்தெனுமா மயக்ககற்றுந் தீரன்வரு மாகில்
வத்துவு மவத்துமிலா வடிவன்வரு மாகில்
வரவுதனை யின்னொருகாற் சொல்லுகிறு பல்லி. (௭)

பத்தர்க டமக்குரிய பழையன்வரு மாகில்
பாரதனி லெழுந்தொரு பரமன்வரு மாகின்
முத்தர்க டமக்குரிய முத்தன்வரு மாகின்
மோனம்விடுத் தெமக்குறிய மொழிதிகிறு பல்லி. (௮)

ஆனந்த வுருவருளு மையன்வரு மாகி
லக்கரமென் றறிவருளு மமலன் வருமாகி
றீனவுரு வகற்றுமொரு தீரன்வரு மாகி
றினந்தினமு நல்லதிசை சொல்லுகிறு பல்லி. (௯)

நாடுமிட மெங்குமுள நாதன்வரு மாகி
ஞானவைபு மாகியமர் நலமருளு மாகில்
கோடுமன மடங்கவிடங் கொடுத்தருளு மாகில்
குணதிசையி னல்லகுறி சொல்லுகிறு பல்லி. (௧௦)

கழுநியெனும் பதியதனிற் கரந்துறையுங் கன்னல்
காதறனை நீக்கியருட் கண்ணுடைய கடவு
ளிளமையிலே யெனக்கருள வெழுந்தருளுங் குரவ
னின்னமொரு கால்வரநீ சொல்லுகிறு பல்லி. (௧௧)

முத்துராம முதல்வனடி முடியருளு மாகின்
முனிவனெனுந் துறவுடைய முதல்வன்வரு மாகின்
மத்தனையாட் கொண்டருள வல்லன்வரு மாகில்
வாழவொரு கால்வரவு சொல்லுகிறு பல்லி. (௧௨)

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# நிலம்.

குறள் வெண்செந்துறை.

அல்லும் பகலு மிலாத நிலம்
ஆனந்த மாக வமர்ந்த நிலம்
சொல்லும் பொருளு மிறந்த நில
துரிய வடிவாச் சிறந்த நிலம். (க)

காமக் குரோதங் கழிந்த நிலம்
கல்விக் கடலைக் கடந்த நிலம்
சேமப் பொருளாய்ச் செறிந்த நிலம்
சிந்தை யடக்கச் சிறந்த நிலம். (உ)

எல்லா வழக்குங் கடந்த நிலம்
ஏகாந்த மாகி யிருக்கு நிலம்
கல்லா மனத்தைக் கரைக்கு நிலம்
கருணை வடிவா யிருக்கு நிலம். (ங)

பெருமை மிகுத்துப் பிறங்கு நிலம்
பேத மொழிக்கும் பெரிய நிலம்
அருமைப் பொருளை யருளு நிலம்
அங்ஙனே யாகி யமர்ந்த நிலம். (ச)

சித்தஞ் சிவமாய்த் திகழ்ந்த நிலம்
சிதம்பர மாகிச் செறிந்த நிலம்
முத்தனு முத்தியு மில்லா நிலம்
மோனப் பெருவெளி யான நிலம். (ரு)

எங்கு மொழிவற நின்ற நிலம்
மேகமே யாகி யிலங்கு நிலம்
பங்க மிலாத பரம நிலம்
பாவனு தீதப் பழைய நிலம். (ரு)

சச்சிதா னந்தத் தனிமை நிலம்
சங்கை தவிர்க்கச் சமைந்த நிலம்
மெச்சு மடியார் விரும்பு நிலம்
வேதாந்த மெல்லாம் விளம்பு நிலம். (எ)

நிருமித்த லின்றி நிகழ்ந்த நிலம்
நின்மல மாகி யொளிர்ந்த நிலம்
கருவி கரணங்க ளோய்ந்த நிலம்
ககனப் பெயரோன் களிக்கு நிலம். (௮)

தில்லையி லாடிச் சிறக்கு நிலம்
சிற்கன மாகித் திகழ்ந்த நிலம்
எல்லையி லாத வகண்ட நிலம்
ஏக வறிவா யிருக்கு நிலம். (௯)

அருவா யுருவா யமைந்த நிலம்
அறிவறி யாமை யழிந்த நிலம்
பொறியும் புலனு மிலாத நிலம்
போதம தாகிப் பொருந்து நிலம். (க0)

சங்கை தவிர்க்கத் தனித்த நிலம்
சாக்கிய தாக வமைந்த நிலம்
எங்குரு வாக விசைந்த நிலம்
என்னையுந் தாமா யிசைத்த நிலம். (கக)

நானே யவனாய் நயந்த நிலம்
நாணாவ தில்லா தருளு நிலம்
கோளே குருவாய்க் குவிந்த நிலம்
கோயிலூர் தன்னி லெழுந்த நிலம். (௧௨)

மூலப் பொருளா யமர்ந்த நிலம்
மூத்துரா மேச முதன்மை நிலம்
காலங்கண் மூன்றுங் கடந்த நிலம்
காலனைக் காய்ந்த கடவு ணிலம் (௧௩)

விளங்க வரிதாம் விமல நிலம்
வேதாந்த மெல்லாம் விரிக்கு நிலம்
களங்க மிலாதோர் கருது நிலம்
கண்மணிக் குண்மணி யான நிலம். (௧௪)

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# பெருமாள்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பேரருளே பேருருவாய்ப் பிறிந்துநின்ற பெருமாள்
பின்னமிலாச் சின்மயமாய்ப் பிறங்கியிடும் பெருமா
ணேரொளியாய் நிறையறிவாய் நிகழ்ந்திடுமெம் பெருமா
ணெல்லிக்கனி போல்விளக்க நேரிலெழும் பெருமாள். (௧)

பாரதன் மனுடனெனப் பரிந்தெழுமெம் பெருமான்
பத்தருளங் கோயிலெனப் படிந்தவரெம் பெருமா
னோரில்பொரு ளாயொளிரு நின்மலமாம் பெருமா
னடியவருட் கடலெனவே நிறைந்தவரெம் பெருமான். ()
கோதில்பெருங் குணக்கடலாய்க் குருவடிவா யெழுந்து
கோயிலூர் தனிலமர்ந்த கொற்றவரெம் பெருமா
னாவியுடல் பொருளதனை யமைநொடியி லளித்த
வடியவர்தம் முயிர்க்குயிரா யமர்ந்தவரெம் பெருமான். (ங)
மாதனம்போன் மருவுடலின் மறைந்துநின்ற பெருமான்
மாலயனுக் கெட்டாத மாயவரெம் பெருமா
னீதியுடை வேதநெறி நிறைந்துளநன் மனத்தே
நிரந்தரமாய் நீங்காது நின்றவரெம் பெருமான். (௪)
பத்தருளங் கோயிறனிற் பரிந்தமரும் பெருமான்
பரம்பொருளைப் பகர்ந்தருளப் பாரிலெழும் பெருமான்
முத்தரெனப் பெத்தரையு முகம்பார்க்கும் பெருமான்
மொழிந்தபொரு ளொன்றெனவே முடிவருளும் பெருமான்
சத்தெனவு மசத்தெனவுஞ் சங்கையிலாப் பெருமான்
சந்ததமு மறிவுருவாய்ச் சான்றருளும் பெருமா
னித்தமுமெ னிதயமதி னீங்காத பெருமா
னிறைந்தசிதம் பரமாகி நிகழ்ந்தவரெம் பெருமான். (ரு)
பார்முதலாம் பூதமுமாய்ப் பகலவனு மதியும்
பகர்ந்தவழி யுருவனுமாம் பண்புடைய பெருமா
னோரிலொரு பூதமிலா நின்மலமாம் பெருமா
னித்தசுத்த மானபர நிச்சயமாம் பெருமான். (௬)

பார்முதலாய்ச் சிவமெனவே பகர்ந்தவர்நம் பெருமாள்
பகர்ந்தபெரும் பொருளருளப் பரிவுடைநற் பெருமா
ளோரிறிரி படியுமிலா வொப்பிலருட் பெருமா
ளொருமொழியா லென்வடிவை யுணர்த்தியருள்பெருமாள்.

கழுமியெனும் பெரும்பதியிற் களிப்புடனே யமர்ந்து
கழல்பணிவோர் திருக்கறுக்கக் கனிந்தருணும் பெருமாள்
பழவடியா ரிருதிசையும் பணிந்தடிநின் றேத்தப்
பண்புடைய ஞானமதைப் பரிவினருள் பெருமாள். (கூ)

குழகனடி யாரவரைக் கோதில்பரவுருவிற்
குவிந்திருக்க வருள்புரிந்த கொண்டலெனும் பெருமாள்
கழலடியார் தமக்கருளிக் களிப்படையச் செய்யுங்
கருணையொரு வடிவுடைய ககனமெனும் பெருமாள். (க0)

கரணமெனும் பகைகெடுத்த கண்ணுடைய பெருமாள்
கரணமதாய் விளங்கியிடுங் காரணமாம் பெருமா
ளாரணமெனுங் கோசமெலா மகற்றிநின்ற பெருமா
ளமரர்தமக் கறிவருளு மற்புதமாம் பெருமாள். (கக)

தரணிதனி லெழுந்தெனையுந் தன்மயமே யாக்கித்
தானேதா னாயிருக்கத் தந்தருளும் பெருமாள்
புரணவொளி தனிலெனையும் புகவிடுத்த பெருமாள்
பொறிபுலன்க ளன்றிநின்ற பூரணமாம் பெருமாள். (கஉ)

எங்கெங்கும் பாவடிவா யிருந்தருளும் பெருமா
ளெங்கெங்குஞ் சிவமயமா யிலங்கியிடும் பெருமாள்
பங்குபட லறிந்திடவும் பகர்ந்திடவு முடியாப்
பங்கமிலாப் பரப்பிரம மாகிநின்ற பெருமாள். (கங)

மங்குவினை மலமகற்று மாட்சிசெறி பெருமாண்
மறைமுதலாங் கலைகளுமே மதித்தறியாப் பெருமான்
பொங்கியெழு மாசையினைப் போக்கியருள் பெருமான்
பொய்ம்மையெலா மொழித்தாங்கின்றபொற்புடைநற்பெருமாள்.

அஞ்ஞானந் தனையகற்று மன்புடைநம் பெருமா
ளருமறையின் பொருடெரித்த வாற்றலுடைப் பெருமான்
பொய்ஞ்ஞான மொழித்தெனையும் புனிதனுரு வாக்கிப்
போதமயத் தெனையமிழ்த்தும் புகழுடைய பெருமான். (கரு)

மெய்ஞ்ஞான மளித்தருளி வீடுபெறச் செய்த
வித்தகனு மருட்குருவாய் விளங்கியிடும் பெருமான்
பஞ்ஞாக மாலையெனப் பார்முதலாம் பெருமான்
பகுத்தறியு நிலையிதெனப் பகர்ந்தவரெம் பெருமான். (கசு)

ஆதிமறை முதலனைத்து மாய்ந்தவ ரெம்பெருமா
ளத்துவித வுருவாகி யமர்ந்தவரெம் பெருமான்
சோதியுரு வாகிநின்ற சுருதிமுடிப் பெருமான்
சுத்தசிதா காசமதாய்ச் சொலித்திடுமெம் பெருமான். (கஎ)

நீதியுடைக் குருவாகி நெடுங்கழிப் பதியி
னேர்ந்தெனையு மாண்டருளு நின்மலமாம் பெருமா
ளாதிசகக் குருவாகி யடிமைகொளும் பெருமா
ளந்தமிலா தருள்சிவமே யாகிநின்ற பெருமான். (கஅ)

நித்தநிரு மலமாக நிகழ்ந்தவரெம் பெருமா
ணேசமுள பத்தருக்கு நிலையருளும் பெருமான்
பத்தருடைப் பாசமெலாம் பாறியிடும் பெருமான்
பாழான வென்மனத்தைப் பறித்தருளும் பெருமான். (க௯)

நித்தநித்த மெனக்கருளு நேசமுடைப் பெருமா
னின்மலத்தி னிறைந்தருளாய் நிகழ்ந்தவரெம் பெருமாள்
கத்துமதவாதமதிற் காதலிலாப் பெருமாள்
கடைக்கணளித் தெனையாளுங் காதலுடைப் பெருமாள். ()

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# அம்மானை.

(இரட்டைக்குறள் வெண்செந்துறை.)

அஞ்ஞானந் தன்னை யறுப்பர்கா ணம்மானை
யஞ்ஞான மாகி யிருப்பர்கா ணம்மானை
மெய்ஞ்ஞான மெல்லாம் விளக்குங்கா ணம்மானை
மெய்ஞ்ஞான ரூப விமலன்கா ணம்மானை. (க)

ஆங்காரந் தன்னை யகற்றுங்கா ணம்மானை
யாங்காரம் போலவே யாவர்கா ணம்மானை
யாங்காரத் தாலுலகை மாவர்கா ணம்மானை
யாங்காரம் போறு லழிவுகா ணம்மானை. (உ)

புத்தி மயமாய்ப் பொலிவர்கா ணம்மானை
புத்திக்கு வேறுய்ப் பொருந்துவர்கா ணம்மானை
பத்தி வலையிற் படுவோன்கா ணம்மானை
பத்த ருளம் விட்டகலாப் பரமன்கா ணம்மானை. (ஈ)

அ

அறிவுக் கறிவா யிருப்பன்கா ணம்மானை
யறிவி னுளத்தை யறுப்பன்கா ணம்மானை
யறிவி னுலகை யமைப்பன்கா ணம்மானை
யறிவாக வென்னை யருள்வன்கா ணம்மானை. (௪)

எங்குஞ் சிவமா யிருப்பன்கா ணம்மானை
யெங்கும் பரமா யிலங்குவன்கா ணம்மானை
யங்க முழுது மறிவுகா ணம்மானை
யறியாத போதுலக மாவன்கா ணம்மானை. (௫)

ஆய்ந்த விடத்தா ரறிவுகா ணம்மானை
யாயா விடத்திவ் வகிலங்கா ணம்மானை
யேய்ந்த பரமா யிலங்குவன்கா ணம்மானை
யெல்லா வுலகு மியக்குவன்கா ணம்மானை. (௬)

பந்தமுத்தி யில்லாப் பரமன்கா ணம்மானை
பந்தமுத்தி தானும் பரமன்கா ணம்மானை
யெந்த முயிரா யிசைவன்கா ணம்மானை
யெங்குஞ் சிதம்பரமா யிலகுவன்கா ணம்மானை. (௭)

அல்லும் பகலு மறிந்தோங்கா ணம்மானை
யல்லும் பகலு மறிவேகா ணம்மானை
சொல்லும் பொருளுந் துரியங்கா ணம்மானை
சொருப சுகத்திற் சுகித்தோங்கா ணம்மானை. (௮)

எல்லா வழக்குங் கடந்தோங்கா ணம்மானை
யெல்லாஞ் சிவமென் றிருந்தோங்கா ணம்மானை
பொல்லாக் கரணம் பொருந்தோங்கா ணம்மானை
போத மயமாய்ப் பொலிந்தோங்கா ணம்மானை. (௯)

ஆறு மறிவா யறிந்தோங்கா ணம்மானை
யீாறு மனத்துக் கதிதன்கா ணம்மானை
வேறும் வெறுப்பு மில்லைகா ணம்மானை
வேறு யிருப்பன் விமலன்கா ணம்மானை. (க0)

பஞ்சகோ சங்களைப் பற்றுன்கா ணம்மானை
பஞ்சகோ சங்களாய்ப் பயில்வன்கா ணம்மானை
யஞ்சு விடயக் கதிதன்கா ணம்மானை
யஞ்சு விடயத்தை யறிவன்கா ணம்மானை. (கக)

எல்லாஞ் சிதம்பரத்தி லிருக்குங்கா ணம்மானை
யெல்லாஞ் சிதம்பரமே யாகுங்கா ணம்மானை
கல்லாக் கயவர்கள் காணார்கா ணம்மானை
கற்றோர்கள் கண்டு களிப்பர்கா ணம்மானை. (கஉ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# போற்றி ஸங்கீர்த்தனம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

எல்லாமா யிரின்றி யெங்கு நின்ற வெம்முறவே யெங்குருவே யிறைவா போற்றி, பல்லா யிரமறைக்கு மப்பா னின்ற பரகுருவே பரசிவமே பரமா போற்றி, நல்லோர்க ளுள்ளத்தி னடுவாய் நின்ற நாதாந்தப் பரவெளியே நலமே போற்றி,

கல்லாத வென்மனத்திற் கலந்துநின்ற கனக மன்று ணடம்
புரியுங் கடவுள் போற்றி. (௧)

திரிசியத்துக் கதிதமதாஞ் சிவமே போற்றி திரிபுடிக்கு
மப்பாலாந் திருக்கே போற்றி, பரிபூரண வுருவாகும் பண்பா
போற்றி பரமசிதா காசமெனும் பரமா போற்றி, முடிவதிலா
ஞானமருண் முகிலே போற்றி முத்தியுமுந் தனுமிலதா முத
ல்வா போற்றி, படியருளத் தினிதிருந்து வகண்டஞான மரு
ளியதோர் சிதாகாச வமலா போற்றி. (௨)

எல்லாமா யல்லவுமாய் நின்றாய் போற்றி யெங்குநிறை
பெரும்பொருளா மிறைவா போற்றி, நல்லோரெல் லாம்பணி
யு நடனா போற்றி நமனைவெல வுபாயமரு ளுதா போற்றி,
கல்லாத கயவனையுங் கற்பித் தாண்ட கருணைவடி வாயொளி
ருங் கடலே போற்றி, செல்லாத மீளாத செல்வா போற்றி
சிதம்பரமாம் வடிவுடைய தேவே போற்றி. (௩)

சிற்கனமாம் பொற்பொருளே சிவமே போற்றி சிதம்
பரத்தி னடம்புரியுந் தேசே போற்றி, மற்சரமா மனமுடைய
மடவனேனை மாளாமே காத்தருளு மன்னே போற்றி,
சொச்சொரூபந் தனையருளுந் துரையே போற்றி சோதிவடி
வாக்குவித்த துணையே போற்றி, பச்சமற வெனையாண்ட வை
யா போற்றி யம்பலத்தி னடித்தருளு மரசே போற்றி. (௪)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சிற் கமைய வுரைத்தல்.

நேரிசை - வெண்பா.

எல்லாப் பொருளு மிருஞ்சிவமே யென்றருளிக்
கல்லாக் கயவருக்குங் கண்ணளித்தான் - பொல்லாத
வென்றனையு மாண்டருளு மெந்தைகரு ணாநிதிதன்
பொன்னடியை நெஞ்சேநீ போற்று. (௧)

கருணா நிதியின் கனகக் கழலே
யிருணீக்கி யாளுமென வெண்ணி - மருணீக்குந்
தில்லைச் சிதம்பர தேவா வெனச்செப்பி
யில்லைப் பவமென்றே னிங்கு. (௨)

வேதப் பொருளை விரும்பா தலைந்தவெனக்
காதி குருவா யமைந்தருளி - நீதியுடை
யப்பொருளைக் காட்டி யகண்ட வறிவருளு
மொப்பில்கரு ணாநிதியென் றோர். (௩)

ஆதி சிதம்பரத்தி லைய னமர்ந்தருளி
நீதிக் கழனிதனை நேர்ந்திட்டான் - சோதியுரு
வாக வமைந்தே யடியார் பிறப்பென்றும்
போக வருளும் பொருள். (௪)

நல்லா ரிருக்குமிட நாடி யடைந்தவர்பா
லெல்லா யிருந்தொளிரு மிங்கிதனார் - பொல்லா
மனத்திருளை நீக்கவல வானமணி யென்றே
தினத்தையொழிக் காமலே தேடு. (௫)

கல்லாக் கயவன் கடைய னிழிகுலத்தன்
பொல்லா மனதுடைய பொய்யனை - னெல்லாரு
நிந்தித் தகற்றுமொரு நீச னருளில்லே
னெந்தைக் குரித்தாவ னே. (௬)

எல்லா விதத்தானு மெண்ணிறு லென்மனது
பொல்லாக் கயவர் புகும்வழியி - னல்லா
யமிழ்ந்தி நடப்பதனை யாம்பரிசி னுய்க்க
விகழ்ந்திடா தெந்தை யிரங்கு. (௭)

கருணா நிதியின் கமலவடி சாரின்
கருணை வடிவாகக் காட்டு - மிருண்மை
மஞ்ஞான மென்னு மசுர னுயிர்மாள
மெய்ஞ்ஞான வாளருளு மேல். (௮)

இல்லாப் பொருளி னிலக்கணத்தை யோராது
பொல்லா தவனுகிப் புந்தியழி - கல்லாக்
கயவனை யாண்டருளிக் கருணைக் கடலாய்
பயமகற்றி நின்றான் பரன். (௯)

பூரணமாய் நின்றவடி பூரணத்தர் போற்றுமடி
யாரணத்தின் மேலா யமர்ந்தவடி - காரணந்தான்
காணு தெழுந்தவடி கண்ணாகி நின்றவடி
மாணார் தொழுஞ்சே வடி. (௧௦)

எப்பொருளு மானவடி யேகாந்த மாகுமடி
முப்பொருளுங் காணு முதல்வனடி - யொப்புவமை
யில்லா விறைவனடி யெங்குஞ் சிதம்பரமாய்
நல்லாருள் ளாநல் லடி. (௧௧)

அரியதுற விக்கு மருமைக்க ணிட்ட
னாரிய சிதம்பரமென் னைய - னுரிமையுடன்
மெய்யையளித் தேயெனக்கு மேன்மைகொடுத் தானருளை
யய்யமற நெஞ்சே யடை. (கஉ)

ஐயா நினதி னருமைத் திருவடியை
மெய்யாய் மதித்து விரகுடனே - யையமற
நாடித் தினந்தோறு நன்மனத்தி லேயிருத்திப்
பாடித் திரியப் பணி. (கங)

பொய்மை யொழிக்குமடி போதம் பயக்குமடி
மையன் முழுது மறுக்குமடி—மெய்யா
மருளைப் பொழியுமடி யன்பர்க் கருளுங்
கருணைக் கடலி னடி. (கச)

வாசனையே சத்துருவாம் வாசனையே மித்துருவாம்
வாசனையே பந்த மலமாகும்—வாசனைதா
னற்றான் மலபந்த மற்றுவிடு மென்றனன்மெய்
பற்றாரைப் பற்றாப் பரன். (கரு)

பாச மறுக்குமென்றாற் பற்றறவி சாரியென்றும்
வாசனையைச் சுட்டா வருமென்றா—னேசமொடு
சொற்றான் பரமகுரு தொல்வினையே னுயாது
கற்றார்போ னின்றேன் கதித்து. (க௬)

கண்டாற் றிரும்பலுண்டோ காடுசெடி நாடெல்லாந்
திண்டாட்டங் கொண்டு திரியாமன்—மன்றுதனி

லாடுஞ் சிதம்பரத்தை யாதரவோ டேத்திநின்று
நாடுமட நெஞ்சே நலம். (௧௭)

தொன்றுதொட்டு வந்த துவந்துவமாம் வாசனைதா
னென்று கெடுவ தெனக்கெந்தாய்—துன்றுவினைக்
காடு சிதைத்தருளுங் கட்கமே யுன்றனைநா
னாடுமருள் செய்யினுய்வே னான். (௧௮)

எல்லாந் திருவருளே யெல்லாங் குருவருளே
யெல்லாங் குருமயமே யென்றுசொலி—நல்லோர்க
ளேத்துஞ் சிதம்பரத்தை யெவ்விதமுங் கண்டுதெளிந்
தேத்திடுமின் போற்றிடுமின் னே. (௧௯)

சிவோகஞ் சிவோகமெனச் சிந்தித் திருந்தா
லவாமுதலா மஞ்ஞான நீங்கி—யுவாமதிபோற்
சித்த பரிபாகஞ் சேர்ந்து சிதம்பரத்தை
யுற்றவனே யென்றுரைக்க லாம் (௨௦)

எங்குஞ் சிதம்பரமே யெங்குஞ் சிவமயமே
யெங்குஞ் சிவன்செயலே யென்றிருந்தா—லெங்கெங்கும்
பார்த்த விடத்தோங்கும் பரம்பொருளே தோன்றுமெனத்
தீர்த்த னுரைத்தான் றெளிந்து. (௨௧)

எங்குஞ் சிதம்பரமா யேகபரி பூரணமா
யெங்குஞ் சிவசொரூப வின்பமா—யெங்குங்
கருணை வடிவாய்க் கனிந்தகுரு நாத
னருளை நினைந்தே யுருகு. (௨௨)

சித்தத் திருக்குஞ் சிதம்பரத்தைத் தேர்ந்தறியா
ரெத்தனை நூல் கற்றாலு மென்னாகு - மெத்தவுமே
பாடிக் கனிந்து பரகுருவைப் போற்றுநெஞ்சே
யாடித் திரிந்தென் னறி. (உ௩)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# விண்ணப்பம்.

கட்டளைக்கலித்துறை.

என்றும் பிறவிப் பெருங்கடல் வீழ்ந்திளைத் தேன்றனக்கு
நன்று பயக்கு நடுவான ஞானக்கு ணக்கடலே
பொன்றும் பொருளைப் பொருளாகப் பற்றிப் புனிதநடை
யென்று மிழந்த வெனைக்காத் தருளுக வெம்பரனே. (க)

எம்பர னேயெழி லார்ந்த நடையுடை யேந்திழையார்
பம்பரம் போன்று பரந்து திமிர்ந்துள பாழ்முலையைத்
தம்பர மென்று தணியா விரகுடைத் தாயலைந்த
வம்ப னிவனெனக் கைவிடத் தானுனை வாழ்த்துவரே. (உ)

என்றும் பிறவித் துயரால் வருந்திய வென்மனத்தைப்
பொன்றும் படிசெயப் பொன்னம் பலத்தி னடம்புரிந்தாய்
கன்றும் புலியு மொருதுறை நீரைக் கலந்தருந்து
நன்று மலிந்த திருக்கோயி லூரை நயந்தனையே. (௩)

என்றும் பிறவிக் கடுவாய்க்குட் பட்டிடர் பட்டவெனைப்
பொன்றும் படியெனிற் பொல்லா நரகிற் புகுந்துழல்வே
னன்று மலிந்த திருத்தில்லை தன்னி னடம்புரிந்து
மன்றுங் கழகி தனிலமர்ந் தோயென்னை வாழ்வித்திடே (௪)

ஆயாம லாய்ந்தவர்க் கன்புசெய்யாம லரனடியைத் [ணீர்
தோயாமற் றோய்ந்தவர் தொண்டுசெய் யாமற் றொழுதுகண்
பாயாமற் பாய்ந்தவர் பக்கல்செல் லாமற் பரம்பொருளை
யாயா மனிதர் தனையகற் றாய்தில்லை யாண்டவனே. (௫)

இனியேனு நல்ல குணத்தோ டிருந்திட் டிரந்தவர்கட்
கினிதான வார்த்தையோ டேதேனு மாங்கவ ரின்புறத்
தனியே யுதவியுந் தாழ்ந்துங் கொடுத்துந் தயவுசெய்ய
யுனையே விரும்பின னெம்பெரு மானெனக் குற்றவனே. (௬)

உற்றவ னேயுன்றன் பற்றதல் லாதெனக் கொண்டுணையா
ருற்றவ னேயுண்மை பெற்றவ னேயும்ப ராகியுளோர்
நற்றவ னேயென்று நாடி யடியவர் நன்மையுறப்
பற்றவ னேபர னேபர மானந்தப் பான்மையனே. (௭)

என்றுங் களிப்புக் கவர்ச்சியுடையவ னென்மனத்தே
நின்று விளங்கினு நீவிளங் காயுண்மை யாகிலத்தே
நன்று பயக்குமோர் நான்மறை யுச்சி நவின்றபொருள்
கண்டு தெளிந்தவர் காயத்து னின்றிடுங் கற்பகமே. (௮)

என்றும் பிறப்பிலை யின்பொடு துன்பிலை யேதமிலை
பொன்றும் வகையிலை பொய்யிலை மெய்யிலை போக்குமிலை
கன்று மனமிலை கையொடு காலிலை காண்பதிலை
நன்று மலனு மிலைநம தாண்டவ னுட்டத்திலே. (௯)

கழறிக் கிறைதனைக் காலங்கண் மூன்றுங் கடந்துநின்ற
புழறிக் கிறைவனைப் பால்போ லுளத்தனைப் பானமதைத்
தொழுநின் றடியார்தந் தொல்வினை நீக்கித் துயரறுத்த
வழகன் றிருவுரு வம்பரந் தானென் றறிந்தனனே. (கo)

எங்கு நிறைந்த விறைவனை யெம்முரு வாகிநின்ற
கங்குல் கடந்த கடவுளை யான்றினங் காயத்துளே
மங்கும் பிறவி மயக்கறுத் தாள வடிவெடுத்த
துங்க மெய்ஞ்ஞானச் சுடர்தனைப் போற்றித் தொழுதன [னே.
() முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

# பிரமசபைச் சிறப்பு.

கலிவிருத்தம்.

பிரம மான பெரியோர் விளங்கிய
பிரம மென்னும் பெருஞ்சபை தன்னிலே
கரிய தாருங் கனசொ ரூபனைக்
கரிய தாகக் கருதி வணங்குவாய். (க)

அரிய வாரு மமரர்க ணங்களும்
பிரிவி லாது பிறங்கு பெரியரு
முரிய வாகிய யோக விருடிகள்
பிரிய மாகப் பிறங்குஞ் சபையதே. (உ)

அண்டம் போல வளவில் பொருள்களைக்
கொண்டு நின்ற குருசபை தன்னிலே
பண்டு மின்றும் பகையதி லாமலே
தொண்டு செய்து துதிப்ப ரறிவுளோர். (௩)

பேத மற்ற பிரமசொ ரூபத்தை
யேத மில்லா திறைவ னளித்திடும்
போத ரூபப் பொருளை விளக்கலாற்
பேத மில்லாப் பிரம சபையதே. (௪)

ஐய மற்ற வறிவின்சொ ரூபத்தைக்
கையின் மெய்ம்மணி போலக் கழறுநன்
மெய்ம்மை யுள்ள விமலர் விளங்கலாற்
றெய்வ மென்னச் சிறக்குஞ் சபையதே. (௫)

நாலு வேதமு நாலிரண் டங்கமும்
போத மெய்யைப் புகலும் புராணமும்
வாத மற்று வயங்கிதி காசமும்
பேத மற்றுப் பிறங்குஞ் சபையதே. (௬)

ஐயமுற்ற சமை யங்கட் கண்ணுறாக்
கையின் மெய்ம்மணி போலக் கவின்றொளிர்
சைவ மென்னுஞ் சமையப் பொருளினை
மெய்ம்மை யாக விளக்குஞ் சபையதே. (௭)

பெரிய தான பிரமச பைப்பொரு
ளரிய தாகிய வந்தணர் காண்குவ
ருரிய மாமறை யொண்பொரு ளாகியாச்
சரிதை யாதிச் சமத்தருங் காண்பரோ. (௮)

பிரம மான பிரமப் பொருளினைப்
பரம மான பனவர் பகருவ
ரரிய மாமறை கற்றுள வந்தண
ருரிய தாக வொருங்கு புகல்வரோ. (௯)

ஆர ணத்தி னரும்பொரு டன்னையே
பூர ணத்தர் புகலும் வகையினாற்
கார ணத்தின் கருத்தறி வித்த லாற்
பேற னைத்தும் பெறுஞ்சபை யாகுமே. (க௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

# ஏவலிலாக்கரணத்திகழ்ச்சி.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சச்சிதா னந்தந் தானே னாகிலேனோ
சுத்த மசத்துந் தானே னாகிலேனோ
மெத்த மடியா ருளமானே னாகிலேனோ
மேலாஞ் சிதம்பரத்தை மேவினே னாகிலேனோ (க)

அறிவறி யாமைக் கதிதனே யாகிலேனோ
வறிவறி யாமைதா னேனோ லாகிலேனோ

சிறிய வறிவாய்த் திகழ்ந்தேனு ஞகிலலோ
சிதம்பர மாகித் திகழ்ந்தானே ஞகிலலோ (உ)

திரிபுண் டரமாகித் திகழ்ந்தேனு ஞகிலலோ
திருச்செவிப் பூணுய்ச் செறிந்தேனு ஞகிலலோ
கருது மடியார் கருத்தானே ஞகிலலோ
ககன வுருவாகுங் கண்ணானே ஞகிலலோ. (௩)

மெய்யடி யார்மெய் விருப்பானே ஞகிலலோ
மெய்யும் பொய்யுமற் றிருப்பேனு ஞகிலலோ
பொய்யைப் பொருளாய்ப் பொருந்திலே ஞகிலலோ
போதப் பொருளாய்ப் பொருந்தினே ஞகிலலோ (௪)

உருகு மனத்தி னுருவானே ஞகிலலோ
வுருவத் திலகு மொளியானே ஞகிலலோ
பருகுங் கருணைக்குப் பாங்கானே ஞகிலலோ
பருவத் தருளும் பரமன்று ஞகிலலோ. (௫)

கருணை வடிவன் கழலானே ஞகிலலோ
கருணைக் கிசைந்தசெய் காலானே ஞகிலலோ
தூரிய வுருவன் றொடையானே ஞகிலலோ
தொடையிற் பொருந்துமோர் தேனுனே ஞகிலலோ. (௬)

பரமன் பணிக்குநன் பாங்கானே ஞகிலலோ
பரமன் றிருவடிக்கீழ்ப் படியானே ஞகிலலோ
பரமன் றிருக்கடைக்கண் பார்த்தானே ஞகிலலோ
பரமன் கழல்படிந்த தூகளானே ஞகிலலோ (௭)

தில்லைச் சிதம்பரமாந் தேவன்று ளாகிலலோ
தில்லை தனிலெழுந்த தேசிகன்று ளாகிலலோ
கல்லைக் கரைத்தருளுங் கடவுடா னாகிலலோ
கருணைக் கிருப்பிடமாங் கனகநட னாகிலலோ. (அ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# செட்டியார்.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உலக முழுது முதிப்பரிச் செட்டியா
ருணர்வுரு வாக மதிப்பரிச் செட்டியார்
கலக மிலாது களிப்பரிச் செட்டியார்
கண்மணி முதலாக் கரைவரிச் செட்டியார் (க)

ஆகாச மெல்லா மரசாளுஞ் செட்டியா
ரன்ப ரகமா யமர்ந்துள செட்டியார்
பாகாங் கரணம் பணிகொளுஞ் செட்டியார்
பானமா யெங்கும் பரந்தமர் செட்டியார். (உ)

எங்கள் குருவா யெழுந்துள செட்டியா
ரேகாந்த மாக விருந்துள செட்டியார்

சங்கை தவிர்க்கச் சமைந்துள செட்டியார்
சாட்சிதா னாகவே தந்திடுஞ் செட்டியார். (௯)

ஞான மயமாய் நவிலுநற் செட்டியார்
ஞான வுருவாய் நயந்தநற் செட்டியார்
மோன மருளு மொழியுடைச் செட்டியார்
முத்தியே யாக முடித்திடுஞ் செட்டியார். (௰)

சாதி சமையந் தவிர்ந்துள செட்டியார்
சச்சிதா னந்தத் தனிமுதற் செட்டியார்
சோதி சுகமாய்த் துலங்கிடுஞ் செட்டியார்
சுத்த வழிவாஞ் சிதம்பரச் செட்டியார். (௧௧)

முற்றிற்று.
திருச்சிற்றம்பலம்.

---

# குணாவலி.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அகங்கா மென்னு மலைதை நீங்கிட
வழிந்தோ மென்றிடு குணாலே
யாசை யாகிய பாசம் வேரற
வரிந்தோ மென்றிடு குணாலே
சாந்த னைச்சிவ மாக நாடியே
தெளிந்தோ மென்றிடு குணாலே

செகமெனு மாயை யிலதி லதெனத்
தேர்ந்து நின்றிடு குணாலை.
முடிவி லாப்பொருண் முடிவ ளித்திட
முளைத்த தென்றிடு குணாலை.
முத்தி தந்தெனை யெத்தி யாட்கொள
முயன்றா னென்றிடு குணாலை
படிமிசை யெங்கள் பரமன் வந்ததைப்
பாடி நின்றிடு குணாலை
பாடிப் பாடியே யாடிக் கொண்டுநீ
பணிந்து நின்றிடு குணாலை. (க)

(உ)

துரிய மாகிய சோதி யிற்சகந்
தோன்றா தென்றிடு குணாலை
தோன்று மென்னிலோ சோதி யிற்பரந்
தோன்றா தென்றிடு குணாலை
சுருதிக ளெல்லா மிந்த வண்ணமே
தொனிக்கு மென்றிடு குணாலை
சுழுத்தி யிற்றின மனுப விக்கிடுந்
துணிவ தென்றிடு குணாலை. (௩)

கரிய தாகிய பொருளைக் கண்ணினாற்
கண்டோ மென்றிடு குணாலை
கால மூன்றுமே கடந்து நின்றதோர்
காட்சி யென்றிடு குணாலை
தெரிவ ருப்பொரு ளனது சிந்தையிற்
றிகழ்ந்த தென்றிடு குணாலை

சித்த னெந்தையை மத்தர் தம்முளந்
தேரு தென்றிடு குணாலே.
சிதம்பரமெனுஞ் சிவம திங்ஙனந்
தெளித்த தென்றிடு குணாலே
தேசி கன்றிரு வருளி ருந்தமை
தெளியோ மென்றிடு குணாலே
பதம்பெற நம்மைப் பாடி யில்லெனப்
பணித்தா னென்றிடு குணாலே
பகர்வ ரியதோர் துரிய னெங்குரு
பரனே யென்றிடு குணாலே. (௬)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## அச்சோ.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள் வெண்செந்துறை.

சாதிகுலந் தருமமெலாந் தன்னிடத்தி
லிலையெனவே தயங்கக் காட்டி
யாதிசகக் குருவான வய்யனெனக்
கருளியவா றச்சோ வச்சோ (க)
மெய்யுருவும் பொய்யுருவும் விமலன்வடி
வெனத்திடமாய் விளங்கக் காட்டி

மையமறுத் தெனையாள வமைந்தனனோர்
பேரருளே யச்சோ வச்சோ. (௨)

எங்குநிறை பரம்பொருளா மீசனெனை
யாளவென விதயத் தெண்ணி
யங்கமிலா திருக்கவுமெய் யங்கமடைந்
தனனருளா லச்சோ வச்சோ. (௩)

உருவமொன்று மில்லாத வந்தமனோர்
வடிவெடுத்த வுண்மை சொல்லிற்
பருவமிலா வெனையாளப் பாரின்மிசைப்
பரிந்தெழுந்தா னச்சோ வச்சோ. (௪)

பந்தமுள வெனைப்போலப் பாவியிலை
யென்றாலும் பாரின் மீதே
தொந்தவினை விட்டகலத் துன்பமிலா
நிலையளித்தா னச்சோ வச்சோ. (௫)

தந்தைதாய் வீடுமனை தாரமக
வெனுமயலாற் றயங்கு மென்னைச்
சிந்தைகெடுத் தாட்கொண்ட திருவருளின்
றிறமென்னே யச்சோ வச்சோ. (௬)

அவித்தைவசந் தழுந்தலினா லாக்கைமுத
லியானெனவே யழிந்த வென்னைத்
தவித்தறவிர்த் தாண்டருளுந் தந்தையரு
ளிருந்ததென்னே யச்சோ வச்சோ. (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# வாரணம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மோக்க மென்னு முழுமடு தன்னிலே
மூழ்கி நிற்கு முதன்மைநல் வாரண
மாக்கை நானென் றகங்கரிப் போர்களை
யழிய மாநர கத்தெறி வாரணம். (௧)

குணம தென்னுங் குலமலை தன்னிலே
குலவி நின்று குதித்தெழும் வாரணங்
கணமு நில்லாக் கரணமென் பாகரைக்
கறுத்துச் சீறிக் கடியுநல் வாரணம். (௨)

பத்தித் திரம் படியுநல் வாரணம்
பாசத் தாம்பைப் பறித்திடும் வாரண
முத்தி மேவ முடிகூடும் வாரண
மோன மாமத மேபொழி வாரணம். (௩)

வாத வினைத்தன் வாலா லடித்திடும்
வலிய கன்ம மரங்கண் முறித்திடும்
போத மில்லா வகங்காரக் காட்டினைப்
போக்கு மெங்குரு வாரணம் வாரணம். (௪)

மூல பந்த மவிழ்த்திடும் வாரண
மூவ ருக்கு முதன்மைநல் வாரணங்
கால நீங்கிக் களிக்குநல் வாரணங்
ககன மான கடவுளெம் வாரணம். (௫)

அண்ட கோடிக ளாக்குநல் வாரண
மறநல் வீதியி லேவரும் வாரணந்
தொண்டர் சொல்லு ளடங்கிடும் வாரணஞ்
சுத்த மெய்யறி வானநல் வாரணம். (௬)

விரகதம்ப முறித்திடும் வாரணம்
விரத கொம்பு தறித்திடும் வாரணந்
துரக நெஞ்சைத் தொலைத்திடும் வாரணந்
துரிய மான சுகந்தரு வாரணம். (௭)

கரிய தாக்கக் களித்திடும் வாரணங்
ககன ரூபக் கருத்துடை வாரண
மரிய வான வமரர் வணங்குநல்
லாதி மூலமென் றோதிடும் வாரணம். (௮)

ஆசை யாகிய பாசக் கயிற்றினை
யற்று வீழ வடித்திடும் வாரணங்
கோச மான குகைவிட் டலாவிடுங்
கோதின் ஞானக் குறியுடை வாரணம். (௯)

ஈச னாகி யிணையில் சிதம்பர
மென்னு நாமத் துடனெழும் வாரணம்
பாச நீக்கப் பரிந்து சமிவனைப்
பத்த ருக்கருள் வாரணம் வாரணம். (௧௰)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அடைக்கலம்.

### கலி விருத்தம்.

பெண்டு பிள்ளை யெனும்பெரும் வாழ்வையே
கண்டென் னுள்ளங் களித்து விழாவகை
யண்டலில் லறி வாகிய சாட்சியுன்
றொண்டு செய்யச் சுகமுண் டடைக்கலம் (௧)

அய்ய நின்ற னடியடைந் தார்க்கெலாம்
வையத் தாசை மறந்திடச் செய்குவாய்
செய்ய தாளைத் தினம்பணிந் தேத்திட
மெய்ய தாக விளம்புன் னடைக்கலம். (௨)

பந்த மான பகைப்பெரு வாசனை
சிந்தை தன்னிற் றிகழா வகையரு
ளெந்தை யுன்ற னிணையடி போற்றவென்
றந்தை போலும்வந் தாளுன் னடைக்கலம். (௩)

நாரி யர்க ணகைக்கு மயங்கிய
சீரி லாதவென் சிந்தை தெளிந்திடப்
பாரில் வந்த பரிசை நினைந்திலே
னேரி லாத நிமல வடைக்கலம். (௪)

மக்கண் மாடு மனைமய லியாவையுஞ்
சிக்க றுத்த சிதம்பர தேவனைத்
தக்க நன்மதி யோடு தரணியிற்
சிக்கெ னப்பிடித் தேனுன் னடைக்கலம். (௫)

எங்கு நின்ற விரும்பொரு டன்னையே
பங்க மின்றிப் பரந்த வுணர்வினாற்
றங்க மெய்ப்பதந் தந்தெனைக் காத்தரு
ளெங்க டம்மைய னேயுன் னடைக்கலம். (௬)

சித்த சாந்தி தடமாய்ப் பொருந்திடப்
பத்தி செய்து பரவு மடியரை
நித்த மான நிலையி லிருக்கவென்
புத்தி மேவும் பொருளே யடைக்கலம். (௭)

சமத மத்திரள் சார்ந்த வுளத்தினான்
முமல மின்றி முதற்பொரு டன்னையே
கமல மென்னுங் கருத்தி லிருத்திட
வமல னேயடி யேனுன் னடைக்கலம். (௮)

ஈச னான விறைவ னடியிணை
மாச தின்றி மனத்தில் வயங்கிடப்
பாச நீக்கிப் பரகதி யெய்திட
வீச னேயிறை வாவுன் னடைக்கலம். (௯)

மன்றி னுள்ளே மலர்ந்த மலர்ப்பத
மென்ற னுள்ள மிசைந்த திறத்தினால்
கன்ற லின்றிக் களிக்கச் சுகந்தர
னன்று நன்றுவென் னாத வடைக்கலம். (௧௦)

சித்த தான சிதம்பர தேவனை
நித்த மேத்தி நிறைமலர் பெய்திடப்
பத்தி யோடு பரவ வடியனைச்
சித்த னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௧௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# மனோரதம்.

(அடியிரண்டாய்த் தம்மிலோத்துவந்த குறள்வெண்செந்துறை.)

முனிவருந் தேவரு மூவர் தேடு
மூல வருளொரு மூர்த்தி யாகிக்
கனிவொடு கைதொழ வீற்றி ருக்குங்
கனகநற் கோயிலாப் பெற்றி லேனே (க)

அண்ட மனைத்து மணுவ தாக
வணுவண்ட மாகச் சிறிய தாகக்
கொண்டார்கள் கொண்ட வடிவன் வந்து
கோயிலாக் கொள்ளநான் பெற்றி லேனே. (உ)

முத்தி தரவே யெழுந்து வந்து
மூல மொருகுரு மூர்த்தி யாகிப்
பத்தி யடியார்க் கருள வல்ல
பாதது ளாகநான் பெற்றி லேனே. (ங)

பதம்பெற வந்தடி யார்கள் பாடும்
பரமன் சிதம்பர தேவ னென்றைந்
யிதம்பெற நாடிச் செலுமி டத்தி
லேதேனு மொன்றாகப் பெற்றி லேனே. (ச)

அய்ய னெழுந்தெழுமை யான வெண்ணரி
யானந்த மாக வமருஞ் செம்பொன்
செய்யநற் பீடத்தி லொன்ற தேனுஞ்
சிறப்பா யமையநான் பெற்றி லேனே. (ரு)

பாதம் பணியப் பணித்தருளும்
பரமன் றிருப்பணிக் காளா யென்று
மேதங் கெடுத்தெனை யாண்டு கொண்ட
வெந்தைக் கிடமாகப் பெற்றிலேனே. (௬)

பூங்கோயிற் செய்கைக்குப் பூவ தாகப்
பூவுட னேறிய நார தாகப்
பாங்காகச் சாத்தும் பணிய தாகப்
பரமனுக் கொன்றாகப் பெற்றிலேனே (௭)

பண்டிதர் பாமரர் வந்து கூடிப்
பங்கயத் தாளை வணங்கி நிற்கு
மொண்டிரு நீற்றனைப் பாடும் வண்ண
மூடலெங்கும் வாயாகப் பெற்றிலேனே. (௮)

புண்ணிய மூர்த்தி புகழைப் பாடிப்
புவியோர் பரவிப் புகழ்ந்து போற்றுந்
திண்ணிய சீரினைக் கேட்ப தற்குச்
செவியா யிரங்கோடி பெற்றிலேனே. (௯)

பங்கயன் மாலும் பரிந்து போற்றப்
பரம னழகைப் பாரின் மீதே
செங்கணா னோக்கத் தினங்க டோறுந்
தேகமெல் லாங்கணாய்ப் பெற்றிலேனே. (௧௦)

அருமை செறிந்த வறிவு தன்னி
லாறி யமைந்து நான்றா னிருக்கப்
பெருமை செறிந்த பிரமந் தன்னைப்
பேசாமற் பேசநான் பெற்றிலேனே. (௧௧)

எல்லாமா யல்லது மாமி றைவ
னெங்கள் குருவா யிசைந்து நிற்கப்
பல்லா யிரங்கோடி நாவு தந்து
பாடித் துதிக்கநான் பெற்றி லேனே. (கஉ)

ஆராகக் கண்களி னீர்சொ ரிந்தே
யாரா வமுதனைக் கண்டு வந்து
பேரா யிரங்களுஞ் சொல்லிச் சொல்லிப்
பேச வனுதினம் பெற்றி லேனே. (கங)

சித்தங் கரைத்துச் சிவம தாகச்
செய்யுஞ் சிதம்பர தேவன் றன்னை
யத்த னமல னரனே யென்று
வானந்த மாய்ப்பாடப் பெற்றி லேனே. (கச)

முற்றிற்று.
திருச்சிற்றம்பலம்.

---

# முத்திரை.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தத் துருவைப் பறிக்குநன் முத்திரை
பாவம தெல்லா மொழிக்குநன் முத்திரை
சிந்தைப் பறப்பைத் திருத்துநன் முத்திரை
சின்மய மாகத் திகழ்த்துமொண் முத்திரை (க)

அண்டங் கடந்த வருமைநன் முத்திரை
யானந்த மாக வருளுநன் முத்திரை
பிண்டந் தனிலே பிறங்குமென் முத்திரை
பேசற் கரிய பிரமமா முத்திரை. (உ)

கோசங்க ளைந்துங் குலைக்குநன் முத்திரை
கோலா கலத்தைக் குமைக்குநன் முத்திரை
பாசம் பறிக்கப் படிக்குநன் முத்திரை
பரம னுருவாய்ப் பழுகுநன் முத்திரை. (ங)

பித்தனை தன்னிற் பிறங்காநன் முத்திரை
பேதமெ தாகச் செறியாநன் முத்திரை
யத்த னருளு மறிவாகு முத்திரை
யாணந்த மாக வமருநன் முத்திரை. (ச)

நூலினிற் நோக்க முடியாநன் முத்திரை
நூதன மாகச் செறியாநன் முத்திரை
யாலி னமர்ந்தர னன்றுசொன் முத்திரை
யாசை யறுக்க வருளுநன் முத்திரை. (ரு)

வெங்கலத் தாலே விளையாநன் முத்திரை
வேதப் பொருளாய் விளைகின்ற முத்திரை
சங்கை யறுக்கத் தலைப்பட்ட முத்திரை
தானே சான்றாகித் தழைக்குநன் முத்திரை. (சு)

ஆறி யறிந்தா ரடங்குநன் முத்திரை
யாரா வமுதா யமைந்தநன் முத்திரை
தேறித் தெளிந்தார்க்குச் செப்புநன் முத்திரை
சிதம்பர மாகத் திகழ்ந்தநன் முத்திரை. (எ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# சிவசிவஸங்கீர்த்தனம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சிவநி றைந்தது சிவசிவ சிவசிவ சிவசி தம்பரஞ் சிவ
சிவ சிவசிவ, பவமி றந்தன சிவசிவ சிவசிவ பரமனென்செ
ய்த படிசிவ சிவசிவ, தவநி றைந்தது சிவசிவ சிவசிவ சுகசு
வின்பருள் சிவசிவ சிவசிவ, வுவமை யின்றியே யொளிர்சிவ
சிவசிவ வொருமை தந்தருள் சிவசிவ சிவசிவ. (க)

எலையி றந்தது சிவசிவ சிவசிவ விறைவனன்கழல் சிவ
சிவ சிவசிவ, மலைவி றந்தது சிவசிவ சிவசிவ மகிமை யென்
புகல் வதுசிவ சிவசிவ, தலைவ தந்தருள் சிவசிவ சிவசிவ
தலைமை நற்குண மதுசிவ சிவசிவ, வெலைய றம்படி யெனை
யெனி லருளிட வெனது ணின்றிடு மிறையவ சிவசிவ. (உ)

மடிய நின்றிடு மெனையுமோர் மொழியினின் மௌன
னென் செய்த வகைசிவ சிவசிவ, வடிய டைந்திட வறிவருள்
சிவசிவ வடிமை யென்புகல்வதுசிவ சிவசிவ, கொடிய துன்
பம தகலநீ யருளிடு குருப ராபர நினதடி பரவின, னெடிய
வின்பருள் சிவசிவ சிவசிவ நிகரி றந்துள நினதடி சிவசிவ.

கருணை யங்கடல் சிவசிவ சிவசிவ கருதவந்திடு சிவ
சிவ சிவசிவ, விருள தின்றிய சிவசிவ சிவசிவ வெளியனுக்
கருள் சிவசிவ சிவசிவ, மருள கற்றிடுஞ் சிவசிவ சிவசிவ
மலம கற்றிடுஞ் சிவசிவ சிவசிவ, வருள ளித்திடுஞ் சிவசிவ
சிவசிவ வமல வச்சுத சிவசிவ சிவசிவ. (ச)

உலகிறந்தது சிவசிவ சிவசிவ வுயிரிறந்தது சிவசிவ சிவசிவ, கலகிறந்தது சிவசிவ சிவசிவ கவலை விண்டது சிவசிவ சிவசிவ, மலமிறந்தது சிவசிவ சிவசிவ மதியிறந்தது சிவசிவ சிவசிவ, சொலவிறந்தது சிவசிவ சிவசிவ சொருபனென்னிது சிவசிவ சிவசிவ. (ரு)

இதமகங்களிறந்தன சிவசிவ வினைசெய்வன்பவமெனை விடவிலகின, பதமணிந்துள பரமர்களுனதுநன் பதமடைந்தனர் பரசிவ சிவசிவ, மதமொழிந்தனர் மலரடி பரவினர் மகிமையென்சொல சிவசிவ சிவசிவ, நிதம்விரும்பினர் நிலைசிவ சிவசிவ நிகரிறந்தது நினதருள் சிவசிவ. (சு)

வகையிறந்தது சிவசிவ சிவசிவ வடிவிறந்தது சிவசிவ சிவசிவ, தொகையிறந்தது சிவசிவ சிவசிவ துடியிறந்தது சிவசிவ சிவசிவ, பகையிறந்தது சிவசிவ சிவசிவ பகலிறந்தது சிவசிவ சிவசிவ, திகையிறந்தது சிவசிவ சிவசிவ சிவநிகழ்ந்தது சிவசிவ சிவசிவ. (எ)

ஒருமையிங்குறவெனையுமோர் பொருளென வுரிமைகொண்டனை சிவசிவ சிவசிவ, வருமையென்புகல் வதுசிவ சிவசிவ வருவமாயுரு வாகிய சிவசிவ, பெருமைதங்கிய பேரருளுருவே பிரமநீயெனப் பேசிய சிவசிவ, கருவகன்றது கனமயல் விண்டது கருணையென்செய்த படிசிவ சிவசிவ. (அ)

நிமலநின்செயனிகழ்ந்தது சிவசிவ நிருபநின்செயலிருந்தநென் சிவசிவ, வமலவுன்வடி வறிந்தனன் சிவசிவ வறிவுருபமா யலதுவே றிலையென, கமலமெல்லடி கரு

திலன் சிவசிவ கருணை செய்வதுன் கடனது சிவசிவ, திருவு ளஞ் செய்தென் றிருகுடை மனமதைச் சிவநின் னுருவதா ய்ச் செய்தருள் சிவசிவ. (கூ)

உலக மோடுயி ருனதுரு சிவசிவ வுனையலாதுவே றுரு விலை சிவசிவ, கலக மின்றிய கருணையுன் னுருவினைக் கருது கின்றன னருள்புரி சிவசிவ, வுலக மெண்டிசை யொருபொரு ளெனநிக ழுனது வம்புய பதமருள் சிவசிவ, மலமொழிந் திட மனம தழிந்திட மகிமை தந்தருள் சிவசிவ சிவசிவ. ()

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## ஊர்.

(இரட்டைக்குறள் வெண்செந்துறை.)

கரண மெல்லாங் கடந்தவூ ரெங்களூர்
கதிவி ரும்பினர் காணுமூ ரெங்களூர்
புரண மானோர் புகுவிட மெங்களூர்
புரண போதமே யானவூ ரெங்களூர். (க)

திருக ளுத்த சிவமதே யெங்களூர்
சிறுக ளுக்குந் திருவரு ளெங்களூர்
மருள ழித்த மறைப்பொரு ளெங்களூர்
மாசு ளத்தின் மறைந்தவூ ரெங்களூர். (உ)

சத்து வத்திற் றயங்குமூ ரெங்களூர்
சச்சி தானந்த மானவூ ரெங்களூர்

கத்தும் வாதியர் கைப்படா வெங்களூர்
கால மூன்றுங் கடந்தவூ ரெங்களூர். (ந)

எவ்வ ழக்கு மிலாதவூ ரெங்களூ
ரேக மாகி யிருக்குமூ ரெங்களூர்
கவ்வு மாமல மற்றவூ ரெங்களூர்
காரண மாகி யிருக்குமூ ரெங்களூர். (ச)

நில்லா வவித்தை நிகழாவூ ரெங்களூர்
நேயம தாகி நிகழ்ந்தவூ ரெங்களூர்
பொல்லாங் கெவற்றையும் போக்குமூ ரெங்களூர்
போத வடிவினர் போற்றுமூ ரெங்களூர். (ரு)

நிற்குண மாகி நிறைந்தவூ ரெங்களூர்
நின்மல மாகி நிகழ்ந்தவூ ரெங்களூர்
தற்பொரு ளானோர் சரிக்குமூ ரெங்களூர்
தானே தானாகச் சமைந்தவூ ரெங்களூர் (சா)

கற்பனை யெல்லாங் கடந்தவூ ரெங்களூர்
காரிய காரண மில்லாவூ ரெங்களூர்
விற்பனத் தாலே விளங்காவூ ரெங்களூர்
விச்சை வடிவாய் விளங்குமூ ரெங்களூர். (எ)

அற்ப மகத்து மிலாதவூ ரெங்களூ
ரானந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
நிற்ப நடப்ப விலாதவூ ரெங்களூர்
நித்திய மாக நிலைத்தவூ ரெங்களூர் (அ)

சிற்பர மாகித் திகழுமூ ரெங்களூர்
சிதம்பர மாகச் செறிந்தவூ ரெங்களூர்

கற்பனை யெல்லாங் கடந்தவூ ரெங்களூர்
காண் பானுங் காட்சியு மில்லாவூ ரெங்களூர். (கூ)
சித்தத்துள் ளொன் றுஞ் செறிந்தவூ ரெங்களூர்
சித்தமுஞ் செல்லாத சேய்த்ததா மெங்களூர்
பத்தி யடியர் பரவுமூ ரெங்களூர்
பரம சிவனைப் பரவுமூ ரெங்களூர். (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# ஐயகோ.

குறள் வெண் செந்துறை.

அட்ட வுருவன்கா ணையகோ
வருமறை முடிவன்கா ணையகோ
வெட்டரி தானவ னையகோ
வெங்குஞ் சிதம்பர னையகோ. (க)

சித்தஞ் சிவமேகா ணையகோ
செகமுஞ் சிவமேகா ணையகோ
வத்த னறிவன்கா ணையகோ
வானந்த மானன்கா ணையகோ. (உ)

அடிக்கினு மகல்கில னையகோ
வதட்டினு மசைகில னையகோ
பிடிக்கினும் பிடிபடா னையகோ
பீடுசெய் தெனைமாய்த்தா னையகோ. (ங)

கற்பனை யெல்லாங் கடந்தவூ ரெங்களூர்
காண் பானுங் காட்சியு மில்லாவூ ரெங்களூர். (கூ)
சித்தத்துள் ளென்றுஞ் செறிந்தவூ ரெங்களூர்
சித்தமுஞ் செல்லாத சேய்த்ததா மெங்களூர்
பத்தி யடியர் பரவுமூ ரெங்களூர்
பரம சிவனுப் பரவுமூ ரெங்களூர். (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## ஐயகோ.

குறள் வெண் செந்துறை.

அட்ட வுருவன்கா ணையகோ
வருமறை முடிவன்கா ணையகோ
வெட்டரி தானவ னையகோ
வெங்குஞ் சிதம்பர னையகோ. (க)

சித்தஞ் சிவமேகா ணையகோ
செகமுஞ் சிவமேகா ணையகோ
வத்த னறிவன்கா ணையகோ
வானந்த மானன்கா ணையகோ. (உ)

அடிக்கினு மகல்கில னையகோ
வதட்டினு மசைகில னையகோ
பிடிக்கினும் பிடிபடா னையகோ
பீடுசெய் தெனைமாய்த்தா னையகோ. (ங.)

கமல முகத்திற்கு நல்லே னையன்
கடைக்கண் ணளித்த கருணைக்கு நல்லேன்
விமல வருளுக்கு நல்லே னையன்
வெண்பொடி பூத்தொளிர் மேனிக்கு நல்லேன். (உ)

கழறி யமருமா காயற்கு நல்லேன்
கருக்கெடச் செய்த கருணைக்கு நல்லேன்
பழவினை நீக்கியாள் பார்வைக்கு நல்லேன்
பரமன் றிருப்பணி செய்தற்கு நல்லேன். (௩)

சத்திய வாய்மைக்கு நல்லே னையன்
சாந்த வருளுக்கு நல்லே னல்லேன்
சித்து வடிவற்கு நல்லே னையன்
செறிந்த மாலைசேர் மார்புக்கு நல்லேன். (௪)

அய்ய னழகுக்கு நல்லே னென்னை
யருளுந் தரத்திற்கு நல்லே னல்லேன்
செய்ய மேனிக்கு நல்லே னையன்
றித்தித்த வார்த்தைக்கு நல்லே னல்லேன். (௫)

மெய்யன் கழலுக்கு நல்லே னென்னை
வேதகஞ் செய்த விரகிற்கு நல்லேன்
பொய்மை யொழித்தார்க்கு நல்லே னையன்
போத மருளும் புலமைக்கு நல்லேன். (௬)

முத்தி கொடுத்தற்கு நல்லே னையன்
முதன்மை யருளுக்கு நல்லே நல்லே
னத்தியே யாண்டாற்கு நல்லே நல்லே
னெங்கள் சிதம்பர நாதற்கு நல்லேன். (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# தபோவனம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

வேத நற்கிளி கொஞ்சுந் தபோவனம்
வித்த கக்குயில் கூவுந் தபோவனம்
மாத வத்தர்கள் வாழுந் தபோவனம்
மாசில் சிற்கன மாய தபோவனம். (௧)

சமத மத்தவர் தங்குந் தபோவனம்
சமையு ளத்தர் சரிக்குந் தபோவனம்
மூமல மற்றவர் மூழ்குந் தபோவனம்
முடிவில் சிற்கன மாய தபோவனம் (௨)

பரம தத்துவ மான தபோவனம்
பரம சித்தர்கள் பாடுந் தபோவனம்
உரம துற்றோ ருரையுந் தபோவனம்
மோங்கு பேரரு ளாய தபோவனம். (௩)

சித்த சாந்தி திகழுந் தபோவனம்
சீவன் முத்தர் செறியுந் தபோவனம்
பத்த ரென்றும் பரவுந் தபோவனம்
பார்வை தானறப் பார்க்குந் தபோவனம். (௪)

சுகம தாகிச் சுகிக்குந் தபோவனம்
சுமுகர் நாளுந் துதிக்குந் தபோவனம்
அகம தென்று மழிக்குந் தபோவனம்
அகம்பிர மாஸ்மியே யாகுந் தபோவனம். (௫)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அன்னைப்பத்து.

கலிவிருத்தம்.

மேன்மை குலங்கல்வி வேண்டா தொழித்திட
மேன்மை யருளின னன்னே யென்று
மேன்மை யருளிய மெய்ப்பொருந் தன்னைநான்
வேண்டி யடைந்தன னன்னே யென்னும். (க)

இந்திரன் சந்திர னெண்ம ருத்திர
ரெந்த முயிராவ னன்னே யென்று
மெந்த முயிரா யிசைந்த வுலகெலா
மெந்தமை யாண்டவ னன்னே யென்னும். (உ)

கண்ட தனைத்தையுங் கண்ணாகக் கண்டிட
வண்ட னருளின னன்னே யென்று
மண்ட னருளிய வானந்த வார்த்தையைக்
கொண்டு கொண்டாடின னன்னே யென்னும். (ந)

நாரண னுன்முக னுன்மறைக் கெட்டாம
னூறு யிருந்ததென் னன்னே யென்று
நாறு விளங்கு நலத்தை நவின்றிட
நான்மறை கூசுமென் னன்னே யென்னும். (ச)

சொரூப வழியைத் துலக்க வெழுந்தனன்
சோதியா மாண்டவ னன்னே யென்னுஞ்
சோதியா யாண்ட சுகத்தை விளம்பிடச்
சுட்டவொண் ணாதுகா ணன்னே யென்னும். (ரு)

கழுநீ யமர்ந்த கருணைக் கடலினைக்
கண்டுகொண் டாடின னன்னே யென்னுங்
கண்டுகொண் டாடிக் கருத்தை யிழந்தனங்
கண்ணே கண்ணானதென் றன்னே யென்னும். (௬)

வானமும் வையமும் வந்து வணங்கிட
வாழ்வுற வாழ்ந்தன னன்னே யென்னும்
வாழ்வுற வாழ்விக்க வல்லன் வலியினை
வாழ்த்திநின் றேத்தினே னன்னே யென்னும். (௭)

எங்குஞ் சிதம்பர மாகி யிருந்தவ
னெங்குரு வானவ னன்னே யென்னு
மெங்குரு வாகி யிசைந்த பெருங்களி
யெம்மு ளிருந்ததென் னன்னே யென்னும். (௮)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அருமையுரைத்தல்.

(அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த குறள்வெண் செந்துறை.)

சிவனே பிறிதில்லை யென்று சொல்லித்
தேசங்க ளெங்கும்போய்ச் செப்பி னானு
மவனே யிவனாகை யரிதா கானு
மல்ல லொழிக்கை யரிதா கானும். (௧)

எங்குஞ் சிதம்பர மென்று சொல்லி
யேதுக்க ளெல்லா மியம்பி னாலுஞ்
சங்கை தவிர்க்கை யரிது காணுந்
தானா யிருக்கை யரிது காணும். (உ)

எல்லாமா யல்லா விறைவன் றன்னை
யெங்கு மவனெனச் செப்பி னாலு
மல்ல லறுக்கை யரிது காணு
மறிவா யிருக்கை யரிது காணும். (ங)

சின்மய மான சிவனே யெல்லாஞ்
சிவனவன் றானெனச் செப்பி னாலுந்
தன்மய மாகை யரிது காணுந்
தானவ னாகை யரிது காணும். (ச)

ஆங்கார மில்லா வறிவு தன்னை
யம்பர மாக வறைந்திட் டாலு
மோங்கார மான வுணர்வ தாக
வோய்ந்தே யிருப்ப தரிது காணும். (ரு)

வேதங்க ளெல்லாம் விரிய வோதி
வேதாந்த மெல்லாம் விளம்பி னாலும்
போதமாய் நிற்கை யரிது காணும்
புந்தி யிறக்கை யரிது காணும். (சு)

எல்லாஞ் சிதம்பர மென்றி சைத்தே
யிதிகாச மெல்லா மியம்பி னாலு
மல்ல லறுக்கை யரிது காணு
மமலமாய் நிற்கை யரிது காணும். (எ)

கழல்.

அகில மனைத்துஞ் சிவம தான
வானந்த மாமென்று செப்பி னானு
நிலைமா நிற்கை யரிது காணு
நினைப்பற நிற்கை யரிது காணும். (௮)

ஆரு வமுதா மறிவு தன்னை
யன்புரு வாக வறைந்திட் டானு
மாறி யிருக்கை யரிது காணு
மவிரோத மாகை யரிது காணும். (௯)

பேதம தில்லாப் பிரமந் தன்னைப்
பிரிவில் பரமாகப் பேசி னானும்
வாதந் தவிர்க்கை யரிது காணு
மனதொரு மிக்கை யரிது காணும். (௧௦)

வேறு திகழா விமலன் றன்னை
வித்தார மாக விளம்பி னானு
மாறி யிருக்கை யரிது காணு
மறிவாக நிற்ற லரிது காணும். (௧௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## கழல்.

கலிந்தாழிசை.

சத்துரு மித்துரு மில்லாவகை யென்னைத்
தத்துவ மாக்கிய சம்புகழல்
சத்துவ மான தனிப்பொற்கழல். (௧)

முத்தனு முத்தியு மில்லாவகை யென்றன்
சித்தத்து ளேநின்ற தெய்வக்கழல்
சித்தே சுகமாய்த் திகழுங்கழல். (உ.)

அய்ய னருளா லறிவா யமைத்தெனைச்
செய்ய சிவமாய்த் திகழ்த்துங்கழல்
சிதம்பர நாதன் றிகழ்ந்தகழல் (ங.)

மாற்கும் பிரமற்கு மற்றுள்ள தேவர்க்கு
மாயைய தின்றி மலர்த்துங்கழல்
மாயை யுருவாய் வயங்குங்கழல். (ச)

பொன்னம் பலத்திற் பொலிந்தறி வாக்கவே
யென்னம் பரமா யிலங்குங்கழல்
ஏகாந்த மாக விசைந்தகழல். (ரு)

நாரா யணனய னூடரி தாஞ்சிவம்
வாராது வந்த வடிவன்கழல்
வயங்கறி வாக வழங்குங்கழல். (சா)

எப்பொரு ளாகி யிலங்கும் வடிவெலாஞ்
செப்பு மறிவாய்த் திகழுங்கழல்
தேசிக னாகச் சிறந்தகழல். (எ)

அய்யத்தை நீக்கி யறிவை யருளியே
செய்ய சிவமாய்த் திகழ்ந்தகழல்
தேசுரு வாக்கச் சிறந்தகழல். (அ)

மோக மறுக்க முடிவை யுருளிடப்
பாகங் கொடுத்த பரமன்கழல்
பண்டித னுக்கப் பரிந்தகழல். (கூ)

பந்த மனைத்தும் பரமாய் நிகழ்ந்திட
வெந்த முளத்தி லிலங்குங்கழல்
ஏமையறி வாக்க விசைந்தகழல். (ய)

நானு விதங்கெட ஞான மருளியே
தானாக நின்ற சதுரன்கழல்
தத்துவ மான சமர்த்தன்கழல். (கக)

என்னை யெனக்கே யெளிதி லருளிய
தன்னொப் பிலாத சமர்த்தன்கழல்
சங்கர னுக்குச் சமைந்தகழல். (கஉ)

சிதம்பர நாதன் றிருவரு ளேற்றிடச்
சேதன மாக்குஞ் செறிந்தகழல்
சிவமய மாக்குஞ் சிறந்தகழல். (கங)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# இறைவல்லபம்.

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆங்கார மான வலைகை யகன்றிட வானந்தத் தன்னை க்கவு, மாசை யறுத்து வறிவருள் செய்திட வம்புயத் தான் வைக்கவு, மோங்காரத் துள்ளொளி யாக்க வெனைநினைந் தொப்பி லருள்வைக்கவு, மோங்குஞ் சிதம்பர தேவனுக் கன்றி யொருவராற் செய்யலாமோ. (க)

நான்மறை தேடியு நண்ணு வறிவுரு நானுகச் செய்தி டவு, நன்மையுந் தீமையு மில்லா வறிவுரு நானேதா னுக்கி டவு, மூன்வடி வான வுடம்பை யகற்றியே யுண்மை யுணர் வாக்கவு, மோங்குஞ் சிதம்பர நாதனுற் கல்ல தொருவராற் செய்யலாமோ. (உ)

எங்குஞ் சிதம்பர மாகி யிலங்க வெனக்கருள் செய் திடவு, மேழைக் கிரங்கி யிரும்பொரு ளெய்திட வென்று மருள்வைக்கவுங், கங்குல் கடந்த கருணை வடிவினைக் காண க் கழல்வைக்கவுங், கண்ணுகி நின்ற கருத்தனுக் கல்லது கடவுளாற் செய்யலாமோ. (௩)

ஆறி யிருக்க வருள்செய்ய வல்ல வருள்மேனி கொண் டிடவு, மண்டரும் வேதமுங் காணுநிலைதந் தடியேனை யாண் டிடவு, மாறிப் பிறக்கும் வகையதில் லாமலே மாட்சிமை தந்திடவு, மகிமை யுடைய சிதம்பரற் கல்லது மாலினுற் செய்யலாமோ. (சு)

இந்தச் செகத்தை யிருக்கும் பொழுதே யிலையெனச் செய்திடவு, மேக வறிவா யிருக்க வவித்தை யிலங்கொளி யாக்கிடவும், பந்தத் துருவம் பறக்கப் பரமனைப் பாராமல் பார்த்திடவும், பரமாஞ் சிதம்பர நாதனுக் கல்லது பதுமனுற் செய்யலாமோ. (ரு)

மாயை வசத்தே மயங்கா வறிவினை மாறு தருள்செய் யவு, மையன் முழுது மகற்றிச் சொரூபத்தை வாய்க்கும் படிசெய்யவுந், தீய கரண மகற்றிச் சிவமாக்கிச் செய்யா மைம் செய்திடவுஞ், சிதம்பர நாதனுற் கல்லது வேறொரு தேவனுற் செய்யலாமோ. (சா)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# வாழ்க்கைப்பாடு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

போக்கு வரவற் றிருப்ப னாகில்
புண்ணிய பாவ மறுப்ப னாகில்
நீக்கின்றி யெங்கு மிருப்ப னாகில்
நிறைய முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (க)

எல்லாமா யல்லா விறைவ னாகில்
ஏகாந்த மாகி யிருப்ப னாகில்
பொல்லாங்கெல் லாம்விட்டுப் போகு மாகில்
போத முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (உ)

பூதங்க ளென்னுட் பொருந்து மாகில்
பூதத்து ளேனும் புருவ னாகில்
பேதங்க ளில்லா திருக்கு மாகில்
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ங)

பந்தங் கடந்த சொருப னாகில்
பரம சிவத்தி னுருவ னாகில்
தொந்தங் கடந்து சுகிப்ப னாகில்
சுகமாய் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ச)

சித்தஞ் சிவமாய்ச் சிறக்கு மாகில்
சிதம்பர மாகத் திகழ்ந்த னாகில்
அத்த னமல னருள்வ னாகில்
அன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (ரு)

எல்லாப் பொருளு மிறைவ னாகில்
எங்குந்தா னாகி யிருப்ப னாகில்
சொல்லான் மனத்தாற் றொடரே னாகில்
சுகமாய் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (சா)

பந்தமாய் வீடாய்ப் பரந்தே னாகில்
பாவனை முற்று மிறந்தே னாகில்
சிந்தனை யில்லாச் சிவமே யாகில்
சிறக்க முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (எ)

அவத்தை கடந்த வறிவ னாகில்
ஆனந்த மான வுருவ னாகில்
பவத்தை யொழித்த பரம னாகில்
பதமா முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (அ)

அல்லும் பகலு மறப்ப னாகில்
அறிவுரு வாகிச் சிறப்ப னாகில்
சொல்லும் பொருளுந் துறப்ப னாகில்
சுகமாய் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (கூ)

சித்தஞ் சிவமா யிருப்ப னாகில்
சிதம்பர மாகிச் செறிவ னாகில்
அத்த னருள வமைவ னாகில்
அன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே (கo)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# குரவை.

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மூவருக் கரியதோர் முழுமுத லுவந்தாயர் முத்திதந்
தமைபாடிக் குரவையிடு, முத்திதந் தெனையாண்ட முதல்வ
னைத் துதிசெய்து மூவுல கேத்தவே குரவையிடு, மேவுதற்
கரியதோர் மேன்மைதந் தெனையாளு மெய்யனைப் பாடியே
குரவையிடு, மெய்க்குரு வருளினை மென்மேலும் விரும்பியே
வேதகம் பாடியே குரவையிடு. (௧)

வேதங்கண் முழுமையு மோதுமா றுமெய் வேண்
டிடு வளம்பாடிக் குரவையிடு, வேண்டிய முனிவர்க ளிருடி
கள் விருப்புறும் விருப்பினைப் பாடியே குரவையிடு, பாதகங்
கெடுத்தெனைப் பரமாக வருளிய பங்கயத் தாள்பாடிக் குர
வையிடு, பரமுத லொருவனே பாதல முழுமையும் பரந்தவ
னெனப்பாடிக் குரவையிடு. (௨)

சச்சிதா னந்தமாந் தனையெனக் கருளிய சங்கரன் கழ
ல்பாடிக் குரவையிடு, சந்தத நினைப்பவர் சப்புவி லுற்றினை
னச் சந்ததம் பாடியே குரவையிடு, மெச்சுமென் னுருவினை
மேவிட யருள்செய்த மேன்மையைப் பாடியே குரவையிடு,
மென்மேலு மோங்கவே மெய்க்குரு வடியினை யிறைவுடன்
பாடியே குரவையிடு. (௩)

அருமறைப் பொருளினை யகத்தினு ணினைக்கவே யருளிய வளம்பாடிக் குரவையிடு, அடியனுக் கனந்தமா மம்புயத் தாளிணை யகத்தில்வைத் தமைபாடிக் குரவையிடு, கருவினை யகற்றிய கண்ணுருமொழிதனைக் கருதவைத் தமைபாடிக் குரவையிடு, ககனனன் மனிதனைக் கடைபோகக் காக்கவே கனசிதம் பரம்பாடிக் குரவையிடு. (௪)

கோயிலூ ரெழுந்திடுங் குருபர னருளினைக் கொண்டு கொண் டாடியே குரவையிடு, குணங்குறி கடந்திடுங் குருவடி வாகிய கூத்தனைப் பாடிநீ குரவையிடு, மாயைதன் ரூபத்தை மறந்திடச் செய்திடு மலரடி பாடிநீ குரவையிடு, மகிமையை முழுவது மறிந்திடு மடியர்தம் மனமது கனியவே குரவையிடு. (௫)

ஒப்பிலா வொருவனை யுளத்தினி னினைந்துநீ யோதிய வாபாடிக் குரவையிடு, உண்மையு மின்மையு மில்லாத வொருவனை புணர்ந்துகொண் டாடிநீ குரவையிடு, தப்பின் மனமுடைய சற்சன ருக்கருளுஞ் சங்கரன் றாள்பாடிக் குரவையிடு, தம்மைப் பணிந்தவர்க டம்மு ளிருந்தருளுஞ் சற்குரு தமைப்பாடிக் குரவைய்யிடு. (௬)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பகடி.

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தத்திற் பலநாளும் படிந்துய ரகற்றியே பரஞானரு ளளி
த்தானென் றிடுபகடி, பணிந்தவென் னுடலுயிர்ப் பொருண்
முழு தையுங்கொண்டு பரிந்தெனை யாண்டானென் றிடுப
கடி, தொந்தத்தே செலுமெனைத் துயராறத் தடியரிற் றேருன்
றவைத் தளித்தானென் றிடுபகடி, அரியதாய் நிறைந்திடுஞ்
சொரூபத்தை யருளிய சுதந்தர குருவனென் றிடுபகடி. (க)

அவித்தையின் னுருவான வகிலத்தை யழித்தெனக்
கானந்த மளித்தானென் றிடுபகடி, யம்பர வுருவினை யெம்
பர மாகவே யகத்தினி லளித்தானென் றிடுபகடி, தவத்தி
னர்க் கருளவே சங்கரன் கழநியிற் சதாரு வெழுந்தானென்
றிடுபகடி, சதுர்மறைக் கரியதா டந்தெனை யாட்கொளச்
சமத்தரு வெழுந்தானென் றிடுபகடி. (உ)

அரும்பர னருளிய வடமலைவாக் கியமெனக் கானந்தம்
கொடுத்ததென் றிடுபகடி, யய்ய னெழுந்தரு ளாலய மெ
ங்குமே யகண்ட வடிவேயென் றிடுபகடி, பெரும்பொரு
ளாகிய பிரமமே நீயெனப் பேசிய பகவனென் றிடுபகடி,
பித்தாகு முலகினிற் பிணக்கறுத் தாண்டதோர் பேரின்ப
நாதனென் றிடுபகடி. (௩)

## சங்கு.

அடியிரண்டாய்த் தம்மிலொத்து வந்த குறள்
வெண் செந்துறை.

அருவ வுருவனென் றாதூது சங்கே
யமல சொரூபனென் றாதூது சங்கே
திருவை யுடையானென் றாதூது சங்கே
நிற்கண ரூபனென் றாதூது சங்கே. (௧)

சித்தந் தெளித்தானென் றாதூது சங்கே
சிவமா யமைத்தானென் றாதூது சங்கே
பெத்தங் கெடுத்தானென் றாதூது சங்கே
பேத மொழித்தானென் றாதூது சங்கே. (௨)

அத்த னறிவனென் றாதூது சங்கே
யகண்ட வடிவனென் றாதூது சங்கே
சுத்தன் சுகமயனென் றாதூது சங்கே
சோதி வடிவனென் றாதூது சங்கே. (௩)

அய்ய னசலனென் றாதூது சங்கே
யம்பலத் தாடியென் றாதூது சங்கே
பொய்யை யொழித்தானென் றாதூது சங்கே
போதங் கொடுத்தானென் றாதூது சங்கே. (௪)

எங்கு நிறைந்தானென் றாதூது சங்கே
யேகமே யானுமென் றாதூது சங்கே
சங்கை தவிர்த்தானென் றாதூது சங்கே
சாட்சி யவனுமென் றாதூது சங்கே. (௫)

அண்டங் கடந்தானென் றாதூது சங்கே
யாரா வமுதனென் றாதூது சங்கே
பிண்டங் கெடுத்தானென் றாதூது சங்கே
பேதந் தவிர்த்தானென் றாதூது சங்கே. (சு)

எங்குரு வானானென் றாதூது சங்கே
யெம்முள் ளமர்ந்தானென் றாதூது சங்கே
பங்கு தவிர்த்தானென் றாதூது சங்கே
பரமே நாமானோமென் றாதூது சங்கே. (எ)

கரணங் கடந்தானென் றாதூது சங்கே
கங்குல் கழித்தானென் றாதூது சங்கே
மரணத் தவிர்த்தானென் றாதூது சங்கே
மும்மல மொழித்தானென் றாதூது சங்கே. (அ)

அவத்தை கெடுத்தானென் றாதூது சங்கே
யகந்தை யொழித்தானென் றாதூது சங்கே
பவத்தை யறுத்தானென் றாதூது சங்கே
பானமே யானோமென் றாதூது சங்கே. (கூ)

முத்தி கொடுத்தானென் றாதூது சங்கே
மோனமே யானோமென் றாதூது சங்கே
யெத்தியே யாண்டானென் றாதூது சங்கே
யெங்கள் குரவனென் றாதூது சங்கே. (க0)

தத்வ மசிப்பொருளென் றாதூது சங்கே
சத்திய நித்தியமென் றாதூது சங்கே
வத்து வடிவேயென் றாதூது சங்கே
ஐய மொழிந்ததென் றாதூது சங்கே. (கக)

அகமே சிவமாமென் றாதூது சங்கே
யானந்த மறிவாமென் றாதூது சங்கே
தகமை யதுவாமென் றாதூது சங்கே
தத்துவ மானதென் றாதூது சங்கே. (கஉ)

ஞானம் பிரமமென் றாதூது சங்கே
நானே யவனுமென் றாதூது சங்கே
மோனஞ் சுகமேயென் றாதூது சங்கே
முத்தி யதுவாமென் றாதூது சங்கே. (கங)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# வளவியுடன்படுத்தல்.

---

*அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த*

**குறள்வெண் செந்துறை.**

அனித்தியந் தேக மசுத்தந் துக்கமறி
லண்ணிய துன்ப மனந்தங் கோடி.
தனித்த சொரூபத்தைத் தானே பார்த்திடத்
தந்த குரவனை யேத்த வாரீர். (க)

சுத்தஞ் சுகமிலாத் தேகந் தன்னைச்
சுகமாய்க் கருதிநாந் துன்ப டைந்தே
மத்த னறிவ னமலன் றன்னை
யானந்த மாகநாம் பாட வாரீர். (உ)

தேக மயமாய்த் தியங்கி நின்று
தீதுறு வேமைத் தெளியும் வண்ண
மாகம வேத மமையச் சொன்ன
வய்ய னருளினைப் போற்ற வாரீர். (௩)

முடையுடைத் தேக முதலென் றெண்ணி
முழுநர கெய்த முயலு நம்மைத்
தடையிலா ஞானத்தைத் தந்து காத்த
சங்கர னைப்பாடிப் போற்ற வாரீர். (௪)

மலவுட றன்னையே நாமென் றெண்ணி
மாநர கெய்து மதியி லேமைப்
பலவுட னீக்கிப் பரமா யாண்ட
பரமனைப் பாடிப் பணிய வாரீர். (௫)

மங்கும் பிறவி மயக்கை நாடி
மதிகெட்டு நின்று மயங்கு வேமை
நங்கண் குருவா யெழுந்து காத்த
நாதனைப் பாடிப் பணிய வாரீர். (௬)

நெஞ்சே யுனக்கொன்று சொல்லக் கேணி
நேச வடியர் நிறைந்து நிற்கத்
தஞ்ச மடைந்த நமக்கருளுந்
தாளிணை போற்றிநின் றாட வாரீர். (௭)

எங்கள் சிதம்பர தேவன் றன்னை
யெல்லோருங் கூடிநின் றேத்தி வாழ்த்தி
மங்களம் பாடி மறையைக் கொண்டு
வணங்கித் துதித்திட வாரீர் வாரீர். (௮)

நாத னருளை நயந்து போற்றி
நான்மறை தன்னி னடுவாய் நின்ற
போத வுருவைப் பொருந்தி நிற்கப்
போற்ற வாரீர் பெண்காள் போற்றவாரீர். (௯)

எல்லோரு நம்மை யிகழ்ந்து பேச
யாமு மவரை யிகழ்ந்து பேச
நல்லார் மலரடி சூடி நின்று
நாதனை நாடோறும் போற்ற வாரீர். (௧௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# தண்டு.

குறள்வெண் செந்துறை.

மூங்கிலின் றண்டல வெங்க டண்டு
மூலப் பொருளதா மெங்க டண்டு
தாங்கிச் சலித்திடா வெங்க டண்டு
சச்சிதா னந்தமா மெங்க டண்டே, (௧)

மரத்தினாற் செய்ததன் றெங்க டண்டு
மனத்திற் ககோசர மெங்க டண்டு
கரத்தி லகப்படா தெங்க டண்டு
கருத்தைக் கெடுத்தவர் காணுந் தண்டே. (௨)

## தண்டு.

மடத்திற் புகுந்திடா தெங்க டண்டு
மடத்திற் கதிதமா மெங்க டண்டு
சடத்தினைச் சாடிடு மெங்க டண்டு
தானேதா னாகிய வெங்க டண்டே. (௩)

அண்டத்தைத் தாங்கிடு மெங்க டண்டு
வழிவா யிலங்கிடு மெங்க டண்டு
பிண்டத் தணுகிடா தெங்க டண்டு
பிரமமாய் நின்றதோ ரெங்க டண்டே. (௪)

திரிவித தண்டல வெங்க டண்டு
தீரதை வள்ளவர் காணுந் தண்டு
வரிவரும் பேரரு ளாய தண்டு
வய்ய னுருவா யமைந்த தண்டே. (௫)

சமயத்தைச் சார்ந்திடா தெங்க டண்டு
சமையுற்றோர் தாங்கிடு மெங்க டண்டு
சமையற் றிருந்திடு மெங்க டண்டு
சூரியத் தொளிர்ந்திடு மெங்க டண்டே. (௬)

செய்யத் தகாததே யெங்க டண்டு
செயலற்று நின்றதே யெங்க டண்டு
வெய்யப் பதந்தரு மெங்க டண்டு
வோங்காரத் துள்ளூறு மெங்க டண்டே. (௭)

சுருதி முடியதே யெங்க டண்டு
சுடரொளி யானதே யெங்க டண்டு
கருதவொண் ணாததே யெங்க டண்டு
கண்ணேகண் ணாகிய வெங்க டண்டே. (௮)

அரியயன் காணாத தெங்க டண்டு
வம்பர மானதே யெங்க டண்டு
கரியதாய் நின்றதே யெங்க டண்டு
ககன வெளியதா மெங்க டண்டே. (௯)

நான்மறை தேடிய வெங்க டண்டு
நான்முக னாடிய வெங்க டண்டு
வான்முதற் பூதமா மெங்க டண்டு
வள்ளல் சிதம்பர னெங்க டண்டே. (௧௦)

அருவ முருவமன் றெங்க டண்டு
வம்பர மானதே யெங்க டண்டு
மருவ வரியதா மெங்க டண்டு
மங்கள மாஞ்சிவ மெங்க டண்டே. (௧௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பூரணநூல்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

என்றும் பிறப்பைக் கெடுத்தரு ளெங்க ளூரல்
ஏகாந்த மாகி யிருக்குரு ளெங்க ளூரல்
குன்றும் பவத்தைக் கரைக்குரு ளெங்க ளூரல்
காரண மாகி யிருக்குரு ளெங்க ளூரல். (௧)

வெண்ணூலாற் செய்யப் படாதநூ லெங்கணூல்
வேதாக மத்தால் விளம்புநூ லெங்கணூல்
பெண்ணு ணலியாய்ப் பிறங்காநூ லெங்கணூல்
பேசவொ ணாத பிரமமா மெங்கணூல். (உ)

அன்னம யத்தி லணுகாநூ லெங்கணூல்
ஆங்கார வீணர் தரியாநூ லெங்கணூல்
பொன்னம் பலத்திற் பொருந்துநூ லெங்கணூல்
போத மயமாய்ப் புகலுநூ லெங்கணூல். (உ)

தரிக்கக் கழிக்கச் சமையாநூ லெங்கணூல்
தானேதா னாகத் தரிக்குநூ லெங்கணூல்
அரிக்கும் பிரமற் கமையாநூ லெங்கணூல்
அறிவாய் நிறைவா யமைந்தநூ லெங்கணூல். (ச)

செப்பருந்தி தன்னாற் செய்யாநூ லெங்கணூல்
சேதன மாகத் திரிக்குநூ லெங்கணூல்
அம்பர மான வழிவாகு மெங்கணூல்
ஆனந்த மாக விளங்குநூ லெங்கணூல். (ரு)

குரம்பை யழுக்குப் படாதநூ லெங்கணூல்
கோசங்க ளைந்துங் குலைத்தநூ லெங்கணூல்
பரம்பர மான பரமநூ லெங்கணூல்
பார்க்கத் திரிபு மாகாநூ லெங்கணூல். (சா)

எண்ணப் படாவுணர் வானநூ லெங்கணூல்
எண்ணுவா ரெண்ணங் கடந்தநூ லெங்கணூல்
பண்ணி யழிக்கப் படாதநூ லெங்கணூல்
பாரமற் பார்க்கும் பரசிவ மெங்கணூல். (எ)

காத்திரத் திட்டுக் கழியாநா லெங்கணால்
கண்மணி கண்ணாகக் கரைக்குநா லெங்கணால்
நேத்திர மான நிமலநா லெங்கணால்
நேரா யறியப் படாதநா லெங்கணால். (அ)

அய்யப் பட்டாரறி யாதநா லெங்கணால்
அய்ய மறுத்தோ ரறியுநா லெங்கணால்
செய்ய சிவமாய்த் திகழ்ந்தநா லெங்கணால்
தேவனே யாகச் செறிந்தநா லெங்கணால். (கூ)

சித்தத்து ணின்று திகழ்ந்துநா லெங்கணால்
தேவாதி தேவாய்ச் சிறக்குநா லெங்கணால்
அத்தனே யான வறிவுரு வெங்கணால்
ஆனந்த மாக வமருநா லெங்கணால். (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# அறிதியுரைத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த

குறள் வெண்செந்துறை.

வந்த சரீர மரண மடையுமுன் வான்பொரு டேருவிடீர்.
இருந்த வினைக்கு ளகப்பட்டு நின்று துவண்டே கெடுவீர்கிடீர்.

மாலும் பிரமனும் வந்து வணங்கிடும் வான்பொரு டே
ருவிடின், மேலுமே லும்பிறந் தெய்த்து விழும்படி வேதனை
சேர்வீர்கிடீர். (உ)

என்று மிருப்போமென் றுதே விரைந்தும்மை யெய்தி நிறையாவிடில், கன்று பவத்துய ராலடிப் பட்டுக் கலங்கி விடுவீர்கிடீர். (ரு)

இந்தப் பிறப்பிலே யெங்கள் பெருமானை யெய்தி யறி யாவிடில், பந்தப் பவத்துயர் பட்டே யுழன்றுமே பாழாய் முடிவீர்கிடீர். (சு)

மாயை வசத்தே மயங்கா திருந்துநீர் மன்னை யறியாவிடில்
பேயா யுழன்று பிறந்து சலித்துநீர் பேதையாய் நிற்பீர்கிடீர்

சிதம்பர நாதன் றிருவடி கண்டுநீர் சிந்த முருகாவிடி-
லதஞ்செயு மல்லல் வடிவுடைத் தாகி யலைந்தே யழிவீர்கிடீர்.

அமல வடிவ னருளை யடைந்துநீ ரகண்டமாய் நில்லா விடின், மும்மல முருவமு மொன்றாகக் கூடி முடக்கிக் குமைக் குங்கிடீர். (எ)

குரைகழல் கொண்டு குறையினைப் போக்குங் குருவினைச் சேராவிடி, னிறைபவ நீக்க நெடியோ னெழுந்தாலு நேராய் முடியாகிடீர். (அ)

உம்பர் புகழு முயர்சச்சி தானந்த முருவம தாகாவிடில்
பம்பரம் போலச் சுழலு மனது பதைத்து வதைக்குங்கிடீர்.

தீவிர மாகத் தெளிவை யடைந்துநீர் சிந்தை யடக்காவிடில்
பாவனை யாலே பரந்த வுலகாய்ப் பருத்தே யழிக்குங்கிடீர்.()

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# வரவுசாற்றல்:

அடிநான்காய்த் தம்மி லொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

வீதி யெங்கும் வெள்ளை யிட்டு வெண்மணலைத் தூவு மேடோ
வேத கீத மோத வெங்கும் விரைந்துகொண் டாடு மேடோ
வாதி மூவ ரான தேவ ரனைவருங்கொண் டாட நின்ற
வய்ய னென்னை யாள வெண்ணி யாரியனாய் வருகின்றான். ()

பாதை யெங்குங் கோல மிட்டு பந்தலினை யோட்டு மேடோ
பந்தி பந்தி யாக வாழை பரிவுடனே நாட்டு மேடோ
சீத மான நீரிறைத்துச் செந்தமிழ்க்கொண் டாடு மேடோ
சிதம்பரமா மெங்க ளய்யன் திருக்கழுநி வருகின்றான். (உ)

பூமி யெங்கும் புகழ்ந்து பாடிப் பூவிரியு மேடு மேடோ
பூதலமும் பாதலமும் பொருளெனக்கொண் டாடு மேடோ
நேமியுடை மாலயனு நேரிலெழுந் தாடு மேடோ
நித்த சுத்த மானவெங்க ணமலனார்தாம் வருகின்றார். (ங)

பாரிலுள பத்த ரெல்லாம் பணிந்துகொண் டாடு மேடோ
பங்க யத்தாண் முடிசூடப் பரபரத்துப் பாடு மேடோ
சீரடியார் கூட்டமொடு சேர்ந்துகளித் தாடு மேடோ
சிதம்பரமா மெங்கள்குரு தேவனெழுந் தருள்கின்றான். (ச)

மாலைகளைத் தூக்கு மேடோ மணிவிளக்கை யேற்று மேடோ
வானுருவு தெரியாமன் மறைத்துக்கொடி கட்டு மேடோ
சோலைவளஞ் செய்ததனிற் சுந்தரிப்பெண் பாடு மேடோ
சுத்தமுத்த னானபெருஞ் சுந்தரனார் வருகின்றார். (ரு)

வன்னிவனஞ் சாருமேடோ வாக்கியங்கொண் டாடுமேடோ
மலரடியுன் சென்னிமிசை வைத்துக்கீதம் பாடுமேடோ
பொன்னின்மல ரிட்டுநிதம் புனிதனடி தேடுமேடோ
போதமரு ளெங்கள்குரு புனிதனார்தாம் வருகின்றார். (௬)

வாத்தியங்க ளோடிசையை வளப்பமுடன் பாடுமேடோ, வானவர்கள் போற்றுமொரு வாக்கியங்கொண் டாடுமேடோ, வேத்துதல்செய் யன்பருக்குள் ளிருள்மலத்தைப் போக்குமேடோ, வெங்கள்குரு நாதனென்றெமக்கருள வருகின்றார். (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# சிவவுபாதியொழிதல்.

---

அறுசீர்க் கழிநெடிலடி யிரட்டை யாசிரிய விருத்தம்.

ஐய னருளை யருளு மெனவெணி யாடிட லாகாதே,
யானந்த மாக வமைப்ப னெனவெண மாவலி தாகாதே,
மெய்யனுருவை விளக்க வெளிதென மேவுவ தாகாதே, மே
ன்மைசெய் கல்வி யடைய விரும்பிய வேட்கைய தாகாதே,
மையன் முழுது மனத்தி லிலையென வைப்பதி தாகாதே,
மானுட னாக வெழுந்த சிவத்தை மதிப்பதி தாகாதே, செ
ய்ய திருவடி யென்றலை மீது திகழ்த்தும தாகாதே, சிதம்பர
தேவன் றிருக்கடைக் கண்ணருள் செய்குவ தாயிடினே. (௧)

பந்தப் பெருங்கடல் பாழ்படப் பார்த்தவப் பாவனை யாகாதே, பற்றுதன் முற்றும் பகைத்த பரம்பொருட் பார் வைய தாகாதே, சிந்தை கெடுத்துச் சிவமாகச் செய்துமென் றேவைய தாகாதே, சேதன மாகச் சிறந்தரு ளொங்குரு சே வைய தாகாதே, யெந்தப் பொருள்களு மெம்மிறை யாக யிலங்குவ தாகாதே, யேகமே யாக விலங்கும் பொருடனை யாமென லாகாதே, சந்தத மெந்தம் முளத்தமு துறிடச் சார்வதி தாகாதே, சாந்த முடைக்குரு வீட்சண மென்னி டந் தங்க மிகப்பெறினே. (உ)

நித்திய நிர்க்குண மான பரம்பொரு ணோர்தலு மாகா தே, நேசமோ டாசை கலக மனமுத னீங்குத லாகாதே, பத்தி யுளத்தி னினைத்து மறைப்பொருள் பற்றுவ தாகாதே, பாச மனைத்தும் பதைக்க விடுத்தமை பாடுது மாகாதே, யத் தன் கொடுத்த வருமைப் பொருடனி லன்புறு மாகாதே, பத்த யங்க முழுது நிறைந்த வரும்பொரு ளாகம தாகாதே, பார்முழு துள்நிறைந் தெங்கும் விளங்கிய பங்கயக் கண்ணுறினே. (ங)

அண்ட மனைத்து மறிவுரு வாகநீ யாவதி தாகாதே, பண் யாரிய னார்திரு மேனிகொண் டாடு மங்கம தாகாதே, பண் டுள நான்மறை யாறங்க மெல்லாம் படித்திட லாகாதே, பார்தக னேனை யுயக்கொள் பரன்கழல் பற்றுத லாகாதே, தொண்டர் தொடர்ந்து துதித்து வணங்கிடு தொல்லையு மா காதே, தூக்க மகத்தி லணுக விலாதெனைத் தேற்றுத லா காதே, கண்ட பொருளைக் கருதுங் கருத்தினைக் காண்பதி

தாகாதே, கண்ணுஞ் சிதம்பர தேவ னருட்கடைக் கண்
ணெதிர் பட்டிடினே. (௪)

பேதமை தீர்ந்து பிறப்பு மகன்றதோர் பெற்றிய தா
காதே, பேச்சு இறந்த பிரம மகப்படப் பேசுத லாகாதே,
வாத மொழிந்து மனமு மொடுங்கிடும் வாசனை யாகாதே,
வன்மை யுளத்தைக் கரைக்கப் பெரும்பொருள் வாய்ப்பது
மாகாதே, பேத மபேத மிலாத பரம்பொருள் பேணுத லா
காதே, பின்ன மபின்ன மிலாத பிரமத்தைப் பேணுதலாகா
தே, சோதுறு மாயை கரைந்து பரத்தனிற் கூடும தாகாதே,
குற்றமின் ஞானக் குறிப்பருட் கண்ணினிற் கூடுதல் பெற்
றிடினே. (௫)

உள்ளத்தி னின்று முருத்தெரி யாம லொழித்தமை யா
காதே, புன்மையு மின்மையு மற்ற பரம்பொரு ளொன்றுவ
தாகாதே, கள்ளப் புலன்கள் கரண மனைத்துமாய்க் காணுத
லாகாதே, காலங்க ளெல்லாங் கடந்த சிதம்பரங் காணுத
லாகாதே, தெள்ளத் தெளிந்து சிவமாக நின்ற சிறப்பிது
மாகாதே, தேசிக னாடி யென்றலை தன்னிற் றிகழ்த்தும
தாகாதே, யெள்ளத் தனையும் பிரிவிலை யென்மன மெண்ணுவ
தாகாதே, யெம்பொரு ளான சிதம்பர தேவ னென்றுந்தரு
ளப்பெறினே. (௬)

சுத்த விமல சொரூப வழியிற் சுகித்திட லாகாதே,
சூனியந் தன்னி லழுந்தி வருந்துமிச் சோகம தாகாதே,
பத்த ருளத்திற் பரிந்தமு தூறிடும் பான்மைய தாகாதே,
பானு முதலிய தேவர்கள் வந்து பணிந்திட லாகாதே, சித்தஞ்

சிவமாய்த் திகழ்ந்தவன் யானெனச் செப்புத லாகாதே, சிந்தை கெடுத்துத் திருவடி சார்ந்தநஞ் சீரது மாகாதே, சித்தாய்த் திகழ்ந்தது செம்பொரு ளென்று தெளிந்தமை யாகாதே, சித்தத் தமர்ந்த சிதம்பர தேவன் றிருக்கடைக் கண்ணுறினே. (௭)

வத்து விடத்தில் வடிவதின் மாயை வதிதலு மாகாதே, வான மனைத்து மெழுந்த வகையதின் மன்னுவ தாகாதே, கத்து சமயக் கருத்தை யிழந்துமெய் காணுத லாகாதே, கண்ணுங் கருத்துஞ் செலாத பரமுதல் கைப்படு மாகாதே, யத்துவி தத்தை நிறைத்த மறைப்பொரு ளற்பமு மாகாதே, யங்கமு மங்கியு மில்லவ னுள்ளவ னுமென லாகாதே, சித்த மொருக்கிச் சிவத்தை யருளுநற் செல்வம தாகாதே, சித்தத் தமர்ந்த சிதம்பர தேவன் றிருக்கடைக் கண்ணுறினே. (அ)

சங்கை தவிர்த்துத் தனையருள் செய்யச் சமைந்தது மாகாதே, சங்கர னென்னைத் தடுத்தாள வந்ததோர் தன்மைய தாகாதே, யங்கையி லாமல கக்கனி யொப்ப வளித்திட லாகாதே, யன்ப ருளத்தி லமர்ந்த பெருந்தகை யன்பது மாகாதே, யெங்கள் குலத்தி லெழுந்த பெருந்தவ னெய்துவ தாகாதே, யேழை தமக்கு மிரங்கு மருட்கட லிங்குற லாகாதே, சிங்க மெனத்திக ழெந்தை யுளத்தினிற் சேர்வது மாகாதே, சித்தத் தெழுந்த சிதம்பர தேவன் றிருக்கடைக் கண்ணுறினே. (௯)

பந்த வினங்களைப் பாறிடச் செய்திடும் பார்வைய தாகாதே, பாவக மேது மிலாத பரம்பொருள் பாடுது மாகாதே,

தொந்தம தற்றெளிர் துரியம தாக்கிடுந் தொல்பொரு ளா
காதே, சுந்தர மாகிய துரிய பதத்தினைச் சொல்லுவ தாகா
தே, யெந்தர மாக விசைந்த பரத்தினை யெய்தலு மாகாதே,
யெங்குரு வாகி யிலங்கியே யருளுவ னென்றலு மாகாதே,
வெந்துயர் தீர்த்த விரும்பொரு ளாக விருந்திட லாகாதே,
யெந்தை சிதம்பர தேவ னருட்கண் ணெழிற்சடை பட்
டிடினே. (கo)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருவெம்பாவை.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அந்த னமல னருவொ டுருவமில
னெத்தன்மை யோருக்கு மெய்தரிய வீசனவன்,
பித்தன் பெரியன் பிறப்போ டிறப்புமிலன்
சுத்தன் சுகுணன் சுமுக னருளானகன்,
சந்தன் ககனன் கரியா மறிவுருவன்
நித்தன் திருவன் சிவமாம் பெருந்தகையோ,
னித்த நிமல னடியோ னகண்டனென
முத்தனை யாம்பாடி யாடேலோ ரெம்பாவாய். (க)

பந்தங் கெடுத்த பரங்கருணைப் பேரருளோ
இயந்த முயிருக் குயிரா யிசைந்தவனைத்,
தொந்தங் கடந்த சுகத்தின் தருடுணையைச்
சிந்துங் கரணத் திகப்பை யறுத்தவனைச்,

சிந்தை கடந்த சிவமாந் திருவுருவை
யெந்தம் முளத்தே யிசைந்து நிறைந்தவனைத்,
தந்த மளவிற் சமைந்த சரணினனைப்
பந்தங் கெடப்பாடி யாடேலோ ரெம்பாவாய். (உ)

கற்போது நெஞ்சங் கரையக் கழலளிக்குங்
கற்பகமாய் நின்ற கருணைப் பெருங்கடலைச்,
சிற்பொருளாய் நின்ற சிவத்தை யெனக்களித்த
சிற்பரந்தா னாகிச் செழித்த செழுஞ்சுடரைத்,
தற்பரமே தற்சிவமே தற்குணமே தற்சுகமே
சான்றாகி நின்றபெருஞ் சற்பொருளே யென்மனத்திற்,
சிற்கனமே யென்று தெளிந்த சிவவடிவச்
சிற்பரத்தை யேபாடி யாடேலோ ரெம்பாவாய். (ந)

நானேநீ யென்று நயந்த வறிவருளி
நானாகி நின்றபெரு நாயகனை நான்மறைக,
டானே யனைத்துமாஞ் சங்கரனைத் தந்தருளந்
தானாகி நின்று தனித்த தயாநிதியை,
யூனே வடிவா யுதித்த மதிகெடுத்திங்
கூனை யொழித்த வுணர்வா மொருமுதலைத்,
தேனு மமிர்தமாங் கன்னல்நே ரின்சுவையாங்
கோனைப் பணிந்துகொண் டாடேலோ ரெம்பாவாய் ()

கன்னலைத் தேனைக் கனியைக் கனிச்சுவையை
யென்னலங் கொண்ட விறையை யெனக்கெளிய,
மன்னன் மறைகள் வழுத்து மறைமணியைத்
தன்னலந் தந்த சதுரன் சமையுடையோன்,

பொன்னன் குலிசன் புராரி மலரோனு
மின்னம் பரவ விணையடிக ளாராமே,
சின்னஞ் சிறிய வெனக்குச் சிவபதத்தைப்
பன்ன வளித்தானைப் பாடேலோ ரெம்பாவாய். (ரு)

ஆரா வமுதை யடியடைந்தார்க் கெப்பொழுதும்
பேராத வின்சுவையார் பென்னம் பெருங்கனியைப்,
பேரா யிரமுடைய பெருங்கருணைப் பேராற்றை
நாரா யணருக்கு நான்முகற்கு நண்ணவொணாச்,
சீரானை முன்னமறை தேடி யலமந்தே
யோரா யிரமுகத்தா லோதமுடி யாதவனை,
நேரா யெழுந்தபெரு நிர்க்குணனை யெத்தினமும்
பாராதே பார்த்துப் பாடேலோ ரெம்பாவாய். (சு)

சிந்தா மணியன் சிவத்தை யருளுமவ
னெந்த முயிருக் குயிரா மிறைவனவன்,
சந்த மிதுவென்னச் சாற்றற் கரியபவன்
பந்தங் கெடுத்தாள் பரம னிணையடியைக்,
கந்த மலர்க்குழலீர் காணா துறங்குமுமைத்
தொந்த வினைகொடுத்துத் துக்கத் தமிழ்த்திடுவன்,
சிந்தை கெடுத்துச் சிவமாகச் செய்தருள
வெந்த மிறையை யிறைஞ்சேலோ ரெம்பாவாய். (எ)

நந்தா மறைக்கு நாரணற்கு மெட்டாது
சிந்தா குலந்தீர்க்குஞ் செல்வச் சிவக்கனியின்,
செந்தா மரைப்பதத்தைச் சிந்தித் துணராதே
யந்தா தமளியினிற் சேர்ந்து துயிலுமது,

வந்தோ வழுகோ வனாதி தொடுத்துவரும்
பந்தங் கெடுத்தாளப் பாடிப் பணிசெயவீ,
சிந்தையி லெண்ணித் திடுக்கென் றெழுந்திருந்திங்
கெந்தந்தை தந்தையினைப் பாடேலோ ரெம்பாவாய். ()

பாதம் பணிந்தவர்க்கும் பத்தியிற்கொண் டாடினர்க்கு
நாதன்றன் நாம நவின்றவர்க்கு நப்பினர்க்கும்,
போதங் கொடுத்துவரல் போதலினைத் தானொழிக்குங்
வேத னறியா விமல னெழுந்தருள,
மாதே துயிலுதியோ வன்மனமோ நின்மனந்தா
னேத வுலவாத வொப்பில் பரனெழுந்தான்,
ஓதக் கனியாய்ச் சிறந்த சிதம்பரத்தின்
பாத நினைந்துநீர் பாடேலோ ரெம்பாவாய். (௧௯)

நேராத செல்வத்தை நித்தமெனுங் கருத்தாற்
பேரா துழன்றுநின்ற பித்த னெனைப்போல,
வோரா திருந்தவர்க ளுலகி லொருவருண்டோ
சீராள னெங்க டிகைப்பை யறியவல்லோன்,
பாராள வந்த பரன்கருணைப் பேருருவ
னாரா வமுத னகண்ட வடிவுடையோன்,
சீராக நாந்துதிக்கச் சிந்தை யுருகாதோ
வாராய் மடமாதே வாழ்த்தேலோ ரெம்பாவாய். (௨௰)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பள்ளியெழுச்சி.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

முத்தியை யடைந்திடு முத்தர்க ளொருபான்
முழுமுதல் விரும்பிய முனிவர்க ளொருபால்,
பத்தியை யடைந்துயர் பத்தர்க ளொருபால்
பாகதி விரும்பியே பழகின ரொருபா,
னித்தமுந் தொழுதுள நெகிழ்ந்தவ ரொருபா
னேதிசெய் தழிவினி னிலைத்தவ ரொருபால்,
புத்திதந் தென்னையு மாட்கொள வருளப்
பூரண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (க)

வேதத்தை யோதுநல் வேதிய ரொருபால்
வித்தகப் பொருளினை விரித்தன ரொருபால்,
கீதத்தை நிறைத்திடுங் கின்னர ரொருபால்
கிம்புரு நாரதர் கீதங்க ளொருபால்,
போதத்தை யடைந்துயர் புண்ணிய ரொருபால்
புத்தமு தூறிடப் போற்றின ரொருபால்,
பாதத்தைப் பணிந்திடு பத்தர்க ளுய்யப்
பரம்பர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (உ)

தண்டரு முனிவரு மருக்க னிந்திரனு
மகிலத்தி லமர்ந்தொளி ரசுரந் தணருங்,
கண்டடி பணிகுவன் கமலநான் முகனுங்
கடவுள ரெவருமே கருதியஞ் சலிப்பர்,

தொண்டர்க ளுளத்தமர் சோதிநின் வடிவைச்
 சுருதிக ளின்னமுந் தொடர்ந்தறி யாதே,
பண்டரு ளுதனே பரவின ரடியார்
 பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (ங)

கூவின கோழிகள் குருகுகண் மயில்கள்
 கொடிமுதற் புள்ளினங் குலவி நின் றனவே,
பாவினங் கொண்டுனைப் பரவின ரடியார்
 பயில்சங்கு முதலிய பல்லிய மொலித்த,
வோவியம் போனுள மொருக்கிய மறையோ
 ருனதடிப் போதினை யுளத்தினி லிருத்திப்,
பாவனை செய்திடப் பகர்ந்தருள் புரியப்
 பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (ச)

கழநியி லமர்ந்தருள் கற்பகக் கனியே
 கமலனு மான்முதற் கணங்களு மறியாப்,
பழமறைப் பொருளினைப் பகர்ந்தருள் புரியும்
 பானுவே யுனதடிப் பண்பினை நினைந்துள்,
ளுழைப்பினு லனுதின முனவருள் புரிவா
 யொப்பிலாப் பேரரு ளுருவுடைத் தவனே,
பழவடி யார்தொழ வீற்றிருந் தவனே
 பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (ரு)

பாவனை யகற்றிய பரம்பொருட் பொலிவே
 பரகதி கொடுத்திடும் பரமசற் குருவே,
தீவினை யகற்றிடுந் திருவுடைத் தேவே
 தில்லையி லமர்ந்தருள் சிதம்பரக் கோவே,

மேவுதற் கரியதோர் வெளியுருத் திருவே
வெய்யவென் வினையினை வீழ்த்திடுந் தருவே,
பூவினிற் சிறந்தொளிர் போதநற் பொருளே
புண்ணிய னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௬)

பத்தர்க டினந்தொழும் பங்கயப் பதனே
பாங்குட னடியவர் பணியநின் றவனே,
சித்தத்திற் றிகழ்ந்திடுஞ் சிதம்பர பரனே
செகமுத லிலையெனத் திகழ்த்துநின் றவனே,
யொத்தநல் லுளத்தினி லொளிர்ந்திடு மறிவே
வொளியுரு வெளிப்பட வோதிடுங் குருவே,
சுத்தசற் குணத்தவர்க் கருளிடுஞ் சோதி
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௭)

கமலங்கண் மலர்ந்தன காரிரு ளொழிந்தது
கதிரவ னுதித்தனன் கவினுடு மழுங்கின,
மும்மல மொழிந்திட முனிவர்கண் மகிழ்ந்திட
முநிதைநற் குணங்களு முதன்மையா யொளிர்ந்திட,
யமலவுன் பதத்திணை யடிமைக டுதித்திட
வம்பலத் தமர்பர னருள்கொடு விளக்கிட,
விமலநல் லடியர்கள் விருப்பொடு பணிந்தனர்
வித்தக னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௮)

முத்தியா முததியின் மூழ்கினர் சிலபேர்
மும்மலா மிருடனின் மூழ்கினர் சிலபேர்,
பத்தியா லுனதடி பாவினர் சிலபேர்
பாவியே னுனதருட் பாவிக்க வறியேன்,

சித்தியின் றிருவேநாற் சிற்சுக வருளே
சித்தர்கள் பரவுசீர் சிதம்பர வரசே,
நித்தியப் பொருளேயொண் ணிர்க்குண வடிவே
நின்மல னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௯)

போற்றின மாமறை யீறுகண் முழுதும்
புகழ்ந்தன மிருதிபு ராணம தனைத்து,
மேற்றின ரிந்திர னிமையவ ரெவரு
மியம்பின ராகிநல் விருடிகண் மறையோர்,
நாற்றிசை முழக்கினர் நடனமீ தங்க
ணற்சிவம் விளங்கிட நயந்தன ரெவருஞ்,
சீற்றமில் லடிமையேந் தினந்தினம் பணிந்தோஞ்
சிதம்பர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௧௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## பறை.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண் செந்துறை.

கொங்கையெழின் மங்கையரைக் கூடநினைந் தலைந்து
கோதிலறி வொழிந்துமிகக் குலைகுலைந்து திரிந்த
சங்கைதவிர்த் தின்பருளுந் தாயெனவே யெனக்குச்
சற்குருவா யுதித்தானெனச் சாற்றுமடா பறையை. (௧)

அந்தணரு முனிவர்களு மமரர்களுந் தேடு
மகண்டவறி வரைநொடியி லமைத்தருளும் பொருளைப்
பந்தங்கெடத் தினந்தினமும் பணிந்தடியைப் பரவப்
பரன்கருணை கிடைக்குமென வறையுமடா பறையை. (௨)

இந்தவுடனிலையளவு மிறைவனடி போற்றி
யேகமதா முன்வடிவை யிதயமதி னினைய
வந்தமிலா வறிவுமய மாக்கியெனைக் கொண்ட
வய்யனரு ளருளினனென் றறையுமடா பறையை. (௩)

மறைமுடிவி னிறைந்திடுமா வாக்கியத்தின் பொருளை
மனநிறையத் தந்தவொரு வள்ளறனை மறந்தால்
கறையுடைய நரகமதைக் கடக்கவொணா தென்றே
கலைகளெலா மறையுமென வறையுமடா பறையை. (௪)

தீங்குடைய நசைமனத்தைச் சேதனமாய்ச் செய்யத்
திருமேனி கொண்டுவந்த தெய்வமதை யெண்ணிப்
பாங்குடையச் செய்மனத்தைப் பதைப்பறவே நிறுத்திப்
பத்திசெய வருளுமென வறையுமடா பறையை. (௫)

விடையவின்மை நினைந்தோடும் வெறியுடைய மனத்தை
வேதன்வந்து தடுத்தாலும் விலக்கமுடி யாதே
தடைமனத்தை யரைநொடியிற் கறுத்தறுத்து நிறுத்திக்
தீர்ப்பனைநீத் தாண்டவனென் றறையுமடா பறையை. (௬)

பந்தமிலை மோட்சமிலை பகலிரவு மிலையே
பகர்ந்தொரு வகங்காரமும் பசுக்களுமே யிலையே
யந்தமுடைப் பூதமுத லவத்தைகளு மிலையே
யறிவுமய மாயிடுமென் றறையுமடா பறையை. (௭)

அவத்தைமுதற் கோசங்களு மகந்தைமுதற் பொருளு
மறிவுமய மாகவென்று மாநந்தமா நின்று
பவத்தைவெல்ல வெண்டுமென்றாற் பரகுருவைப் பணியும்
பத்தியினால் வருமெனவே யறையுமடா பறையை. (அ)

நானெனவு நீயெனவு நடித்தவுன தகந்தை
நன்மையுடைச் சிவமெனவே நாடிமிக வறிந்தா
லூனமிலா முத்தியொரு நொடியில் வருமெனவே
யோயாதே நிரந்தரமு மறையுமடா பறையை. (கூ)

எங்கள்குரு பரனடியை யிருஞ்சிரத்தி லணியி
லெங்குநிறை பரம்பொருளை யெளிதிலடைந் திடுவர்
பங்கமிலை பயமுமிலை பரமசிதா காசன்
பாதமல ரடையினென வறையுமடா பறையை. (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# அனுபவரூபம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பத்தியின் மூடனேனையும் பத்தர்கள் ளூழ வேயுருந்
தித்தகை மோசஞ் செய்தனை யிப்பர மாக வேயருண்
முத்தனை யாதி மாமறை முற்றுநின் றேத்து மீசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (க)

சத்திய ஞான வானந்த சற்குரு நாத னார்தமை
நித்திய போத னாகவே நிச்சய ஞான மேயருள்
சித்தனை தேசி கேசனைச் சிற்சுக நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (உ)

தொத்தர வான துக்கமுஞ் சுத்தமோ டாசை மத்தமு
மெத்து மும்மாயை முக்குண மெச்சுநன் மாதர் மக்களு
நித்தம தாக நிற்குமென் னிச்சய நீக்கு மீசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (ங)

அத்தனை யாசி லற்புத வச்சுத மான வாதியை
நித்தனை நீச னேனையு நித்திய மாக வேசெய்த
பத்தர்கள் பாடி யாடிடும் பத்ம விநோத பாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (ச)

கத்துபுன் வாத மேபுரி கர்த்தர்க ளின்று காணுஞ்
சத்திய போத மாகிய தற்பர ரூப சீலனைச்
சித்த சிதம்பர தேவனைச் சிற்சுக பாத விநோதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (ரு)

உத்தம மாதவர் சூழுற வற்பவ வேலைகள் பாழுற
மத்தமு மானமு மாளுற மச்சர வாதிக டோமுற
வத்தன் னடியரை யாளுற வன்பி லெழுங்குரு நாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (சா)

சித்த விகார மேசெயுஞ் சித்திர மாத ரார்தமை
நித்தமு நாடி நாடியே நிற்கிற மூட னேனையும்
பத்தரு ளின்று பாடிடப் பத்தி கொடுத்தரு ணாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (எ)

நித்தமு மும்மல மேவிய நிச்சய மில்லதொர் மனநினன்
பேத்தம துற்றிடு பேயனைப் பேரின் பளித்துமே யாண்டிடு
முத்தனை மூலமி னாதனை மூவர் துதித்திடும் பாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (அ)

பத்த ருளத்திடு பாதனைப் பத்தி யுளத்தமர் நாதனை
நித்த நினைப்பவர் நேசனை நிர்க்குண மூற்றரு ளீசனை
முத்தி கொடுத்தருண் மோசனை மூற்று தவத்தவர் நேசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (கூ)

பத்த ருளத்தெழு பானுவைப் பக்குவ ருக்கரு டானுவைச்
சித்தர் தமக்கரு டேனினைச் சிற்பர தத்துவ தேசினை
மத்த மதத்தவர் மாலினை மன்னு தவத்தரு ளீசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. (க0)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பார்ப்பானும் பறைச்சியும்.

தறன் வெண்செந்துறை.

நித்திய மானது போத
நின்மல முள்ளது சேதநு
சத்திய மானது சாந்தந்
தாயப்போ வெங்குதிங் காரை. (க)

சுக்கில சோணிதந் தேகஞ்
சுத்தம தானது போத
மெக்குல நல்லது பார்ப்பா
னெட்டப்போ வென்றிங் காரை. (உ)

உள்ளது போதமே யார்க்கு
முனக்கு மெனக்கும் வேறுண்டோ
கள்ளக் கருத்துடைப் பார்ப்பான்
கடக்கப்போ வென்றிங் காரை. (ங)

சோற்றுத் துருத்தியிற் பேதஞ்
சொல்லுவ தெப்படி பார்ப்பான்
பார்த்துப் பகர்ந்திடல் வேண்டும்
பாராமற் சொல்வது பாழாம். (ச)

உள்ளது போதமே யாரு
முனக்கு மெனக்கும்வே றுண்டோ
தள்ளுவ தேதடா பார்ப்பான்
றுனெட்டு வென்றிங் காரை. (ரு)

அறிவா யிலங்குவ தொன்றே
யறிவலதா மிந்தத் தேகம்
பிறிவாகச் சொல்வதிங் கெத்தைப்
பேதமறியாப் பிராமண னீரே. (சா)

ஆடலை யடலையென் றோதி
யகங்கரித் தேறப்போ வென்றாய்
மூடலை யுடலோ னென்று
முயங்கியழியு முழுமூட னீரே. (எ)

சுக்கிலஞ் சோணிதந் தம்மாற்
றேற்றுங் குலத்தினை நாடி
னெக்குல நல்லதே யாகு
மெனக்கு முனக்கு மேது குலஞ்சொலீர். (௮)

வழியி லிருவரும் போகச்சே
வாராதே யென்றான் வகையறியாம
லழிவில் சிவமெங்கு மானா
லாரை விலகெனன் மூடா. (௯)

அன்ன மயத்திற் குலந்தா
னறைகுவ தெந்த வரணம தாகுஞ்
சொன்ன மறையைத் தொகுத்துச்
சொல்லும் பிராமண சுத்த குலத்தீர். (௧0)

தூரப்போ தூரப்போ வென்றே
துரத்தும் பிராமணனீரே
யெறப்போ வென்றநிங் காரை
யெனக்கறி யச்சொலிச் சீரை. (௧௧)

பஞ்சகோ சத்தைநீர் பார்த்தால்
பார்ப்பான் பறையனுக் கொன்றே
விஞ்சு மறிவ துணர்ந்தால்
வேதியர் வேறேயோ கூறுமினீரே. (௧௨)

மலவுட றன்னைநீர் நோக்கி
மயங்கி யழிந்திட வேண்டா
நிலவு மறிவை நினைந்து
நித்திய மாய்நில்லு மந்தணநீரே. (௧௩)

எங்கு நிறைந்தது ஞான
மேகமாய் நின்றது மோனஞ்
சங்கை தவிர்ந்தது சான்று
சாயப்போ வென்குதிங் காரை. (௧௪)

அந்தண னாகிய நீரே
வறிவை யுணரவல் லீரே
லைந்த முயிராய் நிறைந்த
விருங்குரு நாதனை யேத்தீர். (௧௫)

மலக்கட மானது தேக
மாசி லறிவுரு போதம்
பலக்கப்போ வென்குதிங் காரைப்
பார்ப்பானீ யாரடா பார்ப்பான். (௧௬)

இங்குமங்கு மாகி நின்ற
வினையில் பரமமாம் போத
மெங்குஞ் சிதம்பர மாகி
லேறப்போ வென்குதிங் காரை. (௧௭)

ஆகாயம் போலுள போத
மளவில் கடந்தோறு நிற்கப்
போகாத வாராத வென்னைப்
போவெனச் சொல்லினை யாரே. (௧௮)

கடலல நின்றுள பானு
கலங்கி யசைந்தது போல
மடமையி னாலே கலங்கு
மதிகெட்ட வந்தண னீரே. (௧௯)

எட்டப்போ வென்றதிங் காரை
யேழைத்தனங் கொண்டு சொன்னீ
ரட்ட வுருவா மறிவ
ஞனந்த போதமே யாவன். (உ0)

பறைச்சிபோ வென்னெண்டாப் பார்ப்பான்
பானம தேகுமோ பாரா
யிறைச்சி யெலும்பதாய் நின்ற
வித்தேக மேகுமோ செர்ல்லாய். (உக)

நீயென்ற நானென்ற தெங்கே
நினைவ திறந்தானீ பாராய்
தானென்று நின்றதிங் கொன்றே
தத்துவமாகத் தனக்குளே பாரும். (உஉ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# அப்பா.

இரட்டைக்குறள்வெண் செந்துறை.

சச்சிதா நந்தத் தனிமுத ஞுமென னுஞ்
சாத்திரம் பொய்யோ தனக்கது வில்லையோ
மெச்ச நினைத்துச் சிவவேட்டங் கொண்டுநீ
விழிசிம் பிளிக்கை தவிர்ந்தாலோ வப்பா. (க)

ஆத்ம சொரூப வறிவேநீ யென்றிடு
மாரணம் பொய்யோ வனுபவ மில்லையோ
பார்ப்பறப் பார்க்கும் பரசிவன் றன்னையும்
பாஷாணம் விட்டும்மைப் பார்த்தாலோ வப்பா. (௨)

சுத்த சிதம்பர சோதிநீ யாகவே
சொல்லுஞ் சுருதியுஞ் சூத்திரமு பொய்யோ
வெத்தி யுரைத்திங் கிறைவனை நாடாத
வேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௩)

நித்திய மான நிலையது நீயெனு
நிசம தருள்சிவ னிச்சயம் பொய்யதோ
சத்திய மான நிலையி னில்லாமற்
சலிக்கு மவர்காசு கொள்ளோமே யப்பா. (௪)

எங்குஞ் சிதம்பர மாகி நிறைந்தரு
ளெங்குரு நாத னிசைத்ததுவும் பொய்யோ
சங்கை தவிர்ந்து தணிப்பொரு ளாகாத
தண்டக் காரன்காசு செல்லாதே யப்பா. (௫)

மங்கள மான சிவத்தை நிரந்தர
மாமறை நித்தம் வழுத்துதலும் பொய்யோ
வெங்கள் குருவி னிணையடி சூடாத
வேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௬)

முத்தி யருளு முதல்வ னடியிணை
மூலமே யென்றிடு மும்மறையும் பொய்யோ
சத்திய மாகத் தரிக்கு மறிவிலாச்
சங்கடர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௭)

ஆக நிறைந்த வருஞ்சிவ ஞானமை
யாகம மெல்லா மறைந்ததுதான் பொய்யோ
பாக மனத்தாற் பரத்தை யறிந்திடாப்
பாவியர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௯)

சித்துரு வாகச் செகத்தை யருளிடுஞ்
சின்மய னென்ற சிவனுரைதான் பொய்யோ
வத்து வவத்து வடிவ தறிந்திலா
வன்கணர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௯)

சித்தன் சிதம்பர தேவ னருளிய
செல்வத் திருவுடை வாக்கியந்தான் பொய்யோ
வத்தன் பெருமை யடியிணை வேண்டாத
வறிவீனர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௧௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# ஆண்டார்.

நேரிசைவெண்பா.

மத்த னேனையு முத்த னாக்கியிங் கெத்தி யாளவே சித்த
னேயெழுந், தாண்டாரே யென்பேனோ வாண்டவரே யென்பே
னோ. (௧)

சுத்த மாயுள பத்தர் நெஞ்சினி லத்த னாயிருந் தெத்தி
யாண்டரு, ளாண்டாரே யென்பேனோ வாண்டவரே யென்
பேனோ. (௨)

கத்தும் வாதியர் சித்தஞ் சென்றிடா வத்த னென்னுளே நித்த நின்றுமே, யாண்டாரே யென்பேனோ வாண்டாரே யென்பேனோ. (௩)

அய்யன் பொய்சொலா மெய்ய னென்னையுஞ் செய்ய தாளளித் துய்ய வாக்கியே, யாண்டாரோ யென்பேனோ வாண்டாரே யென்பேனோ. (௪)

கோடி மாமறை பாடி யாடிடப் பேடி யாயுளம் வாடினேனையு, மாண்டாரே யென்பேனோ வாண்டாரே யென்பேனோ. (௫)

அணிந்த சேவடி பணிந்து வாழ்த்திடத் துணிந்து கொண்டனன் றிணிந்த தாளிணை, யாண்டாரே யென்பேனோ வாண்டாரே யென்பேனோ. (௬)

சிதம்பர தேவை னிதம்பெ றம்பதந் தினந்தி னம்முளங் குதித்துப் பாடிட, வாண்டாரே யென்பேனோ வாண்டாரே யென்பேனோ. (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பாம்பாட்டி.

குறள்வெண்செந்துறை.

தாருக்கண் முத்தி தருமென் றெண்ணித்
தன்னை மறந்து சலித்தி டாதே
நீருட் குமிழி யுடலை நீக்கி
நித்தனைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (௧)

அந்தர வானத் தவருங் காணா
வருளை நினைந்திங் கழுது கண்ணீர்
சிந்தப் பொருமித் திகைத்து நாளுஞ்
சிதம்பரந் தன்னைப்பார்த் தாடாய் பாம்பே. (௨)

முத்தியு மிங்கே முடிவு மிங்கே
மோன மருளு முதலு மிங்கே
சத்தியு மிங்கே தலைவ னிங்கே
சந்ததம் பார்த்துநின் றாடாய் பாம்பே. (௩)

ஆருரு மிங்கே யகண்ட மிங்கே
வண்ட நிறைந்த வறிவு மிங்கே
பேருரு மிங்கே பிரம மிங்கே
பேரா திருந்துநீ யாடாய் பாம்பே. (௪)

சித்தனு மிங்கே சிவனு மிங்கே
சித்துஞ் சிவமாகி நின்ற திங்கே
யத்தனு மிங்கே யறிவு மிங்கே
யறிந்து பிரிந்துநின் றாடாய் பாம்பே. (௫)

பந்தமிங் கேமுத்தி தானு மிங்கே
பந்தங் கெடுத்தாண்ட பாத மிங்கே
தொந்தமிங் கேதொந்தம் போன திங்கே
தொந்தங் கடந்தநின் றாடாய் பாம்மே. (௬)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பாம்பாட்டு.

குறள்வெண்செந்துறை.

கண்டத்தி னிற்கின்ற கண்டி தன்னைக்
காணாது நின்று கலங்குவேனை
யண்டநிறைந்த வறிவைக் காட்டு
மாசானைப் பாடிநின் றாடாய் பாம்பே. (க)

கோசங்க ளைந்துங் குலைய நோக்கிக்
கூத்தன் றிருவடி சூட்டி யாண்டு
பாசங்க ளெல்லாம் பறக்கச் செய்யும்
பார்ப்பானைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (உ)

மூன்றுதே கத்தையு நீக்கி நின்ற
முத்தன் றிருவடி யாணை யாணை
சான்றுநீ யென்றெனைக் காட்டித் தந்த
சங்கர னைப்பாடி யாடாய் பாம்பே. (ங)

அவத்தை யனைத்தையு மறிந்து நின்ற
வானந்தத் தேவனு ராணை யாணை
பவத்தை யகற்றிய பாதந் தன்னைப்
பாடாமற் பாடிநின் றாடாய் பாம்பே. (ச)

சச்சிதா னந்தமாந் தன்னைக் காட்டித்
தத்துவ மாக்கினு ராணை யாணை
யச்சுத னுன வமல வீச
வாசானைப் பாடிநின் றாடாய் பாம்பே. (ரு)

மக்கண்மனை யெல்லாம் பொய்யென் றெண்ணி
மாசை யகற்றினு ராணை யாணை
யெக்குணமு மில்லா வீசன் றன்னை
யெப்போதும் பாடிநின் றாடாய் பாம்பே. (சு)

நித்திய மான நிலையு ணர்ந்த
நேரி லெழுந்தவ ரர்ணை யாணை
பத்தி யுடனே பகையை வெல்லப்
பார்ப்பானைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (ரு)

முத்தி யருளு முதல்வ னான
முத்த னடியிணை யாணை யாணை
சித்தன் சிதம்பர தேவன் றன்னைத்
தேடியே பாடிநின் றாடாய் பாம்பே. (அ)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# திருச்சாழல்.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

தில்லையிலே நடித்தபிரான் றேவைநக ரவதரித்தோ
னல்லிலாச் சமிவனத்தி லமர்ந்தருள்வ தென்னேடி
யெல்லையிலா மாதவங்க ளியற்றுகின்ற மாதவர்க
ணெல்லநா யகிபதத்தை நினைத்திலறுற் சாழலோ. (க)

தொன்றுதொட்டு வந்த துவக்கறுக்க வெம்பெருமான்
சென்றுசமி வனத்தைச் சேர்ந்ததென்றோ சாற்றேடி

ஊன்றுமிருள் போக்கவந்த கருணைமுத்து ராமலிங்கன்
றூன்று திருவடியைச் சூடவந்தான் சாழலோ. (௨)

அசரீரி யாயிருந்த வரும்பொருளே மனுடனென
வசரீரி யாக்கவந்தா ராரெனக்குச் சாற்றேடி
யசரீர மான்மவென வருளுஞ் சிதம்பரனென்
வசரீரி சொன்மறைக ளரற்றியகாண் சாழலோ. (௩)

கோயிலூ ரெழுந்தருளுங் குணக்கடலா யடியருக்கிங்
காய்துயரம் போக்கவந்த தாரெனக்குச் சாற்றேடி
யாயுமறை யறிவரிய வத்தனவ னெவ்வுயிர்க்குந்
தாயெனவே வந்தருளுந் தத்துவன்காண் சாழலோ. (௪)

சத்துவனு யெழுந்தருளித் தனையளித்தின் புருவருளுஞ்
சித்துருவ னாகிநின்ற செல்வனவ னாரேடி
யெத்துவித மில்லாதே யெமக்களித்த வெம்மிறைதான்
சித்தசப மாக்குவித்த சிதம்பரன்காண் சாழலோ (௫)

தீராப் பிறவிதனைத் தீர்த்தருடான் செய்தபிரா
னாராயி னவனாம மறிந்தபடி சாற்றேடி
பேராப் பெருங்கருணைப் பெம்மானை யெம்மானைச்
சீராக வோதுவன்யான் சிதம்பரன்காண் சாழலோ. (௬)

அச்சமறுத் தாண்ட வய்யன் றிருவடியை
நிச்சயமாய்க் கொண்டாட நீயெனக்குச் சாற்றேடி
புச்சன் புதியன் புனிதன்மறை தேடரிய
சச்சிதா னந்தத் தனிமுதலான் சாழலோ. (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அடிமடக்குஸ்துதி.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஐய னேயென தன்பினைச் சோதியே
யடிய ருள்ள மமர்ந்திடுஞ் சோதியே,
செய்ய தாளென் சிரத்தி லிருத்தியே
சித்த நின்னடி சேரத் திருத்தியே,
மைய னீக்கிடு மாமலர்த் தாளையே
மனத்து ணிற்க மதித்துவந் தாளையே,
தைய லார்மய னீங்கிடுந் தேவனே
தந்தை யான சிதம்பர தேவனே. (௧)

அசல மான வமலசொ ரூபனே
யச்ச நீங்க வருளும ரூபனே,
வசன மற்ற வடிவரு ளீசனே
வஞ்சர் நெஞ்சை வதைத்திடு மீசனே,
நிசம தாக நிகழ்ந்திடு நாதனே
நீச னேனுண் ணிறைந்திடு நாதனே,
திசைக ளியாவுஞ் செறிந்திடுந் தேவனே
தீதி லாத சிதம்பர தேவனே. (௨)

பந்த முத்தி பகர்ந்தரு ணாதனே
பாத மென்றலை தந்திடு நாதனே,
தொந்த மற்ற சுகமரு ளாதியே
துக்க நீங்கச் சுகமரு ளாதியே,

நிந்தை யின்றி நிகழ்ந்திடு நீதியே
நித்தி யப்பொரு ளாயொளிர் நீதியே,
தந்தை யாகிச் சமைந்திடு மத்தனே
தன்மை யப்பொரு டந்திடு மத்தனே. (௩)

சித்த மாறத் திகழ்ந்திடுஞ் சித்தனே
சிந்தை தன்னைக் கெடுத்தருள் சித்தனே,
பத்தி செய்யப் பணித்தருள் பாலனே
பாவம் விண்டிடச் செய்யுங்கட் பாலனே,
யுத்தி யென்னை யிணக்கிய வீசனே
யேழை யேனையுங் காத்தரு ளீசனே,
முத்தி தந்தெனை யாண்டருண் மூலனே
மோன ஞான சிதம்பர மூலனே. (௪)

அஞ்ச லென்றெனை யாண்டரு ளய்யனே
யகில ஞான மகற்றிடு மய்யனே,
சஞ்ச லப்பணி சாடிய சண்டனே
சன்ம யப்பொரு ளாம்பிர சண்டனே,
யுஞ்ச லொத்த வொருமன நீக்கியே
யுயர்சி வந்தனைத் தானென வாக்கியே,
நெஞ்ச மொத்து நிறைந்திடு மீசனே
நீச னேனையு மாண்டரு ளீசனே. (௫)

முத்து மாமணி போன்றொளிர் மூர்த்தியே
முடிவ ளித்தெனை யாண்டமர் மூர்த்தியே,
கத்தும் வாதியர் கைப்படா வாதியே
கால மூன்றுங் கடந்துள வாதியே,

சுத்த மெய்த்தவர் தோய்ந்திடுஞ் சோதியே
சுகம ளித்த துரியநற் சோதியே,
சித்த னெந்தை சிதம்பர தேவனே
சின்ம யப்பொரு ளாகிய தேவனே. (௬)

சச்சி தாநந்த மாகிய முத்தனே
தன்ம யப்பொரு ளாகிய முத்தனே,
மெச்சு மெய்யடி யாருளச் சித்தனே
மெய்ம்மை முத்தி விளக்கிடுஞ் சித்தனே,
யச்ச நீக்கு மகண்டசொ ரூபனே
யன்ப ருள்ள மகலாச்சொ ரூபனே,
பச்சம் வைத்த பரமநற் பாதனே
பாத கத்தனைப் பார்த்தரு ளாதனே. (௭)

தன்னைத் தந்த சமத்துறைத் தாணுவே
தந்தை போன்றருள் சன்மயத் தாணுவே,
யென்னை யென்னி லெனக்கரு ளீசனே
யெம்மு ளத்தி னிறைந்திடு மீசனே,
முன்னை நான்மறை யோதிடு மூலனே
மூவ ருக்குமு வாகிய மூலனே,
சின்ன மேது மிலாவருட் சோதியே
சிவசி தம்பரத் தேசிக சோதியே. (௮)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

# இம்பில்.

### கலித்தாழிசை.

குற்றியிற் கள்வன் கொடுமர சாண்டானென்
றெத்திசை தோறுநின் றிம்பிலடி
யெனக்குழி யில்லையென் றிம்பிலடி. (௧)

வந்தி வயிற்றி லுதித்தவோர் சுந்தரன்
வான்முழு தாண்டானென் றிம்பிலடி
வையமது போலென் றிம்பிலடி. (௨)

கட்டையிற் கள்வனார் கானலி னீர்தனைக்
கண்டு குடித்தாரென் றிம்பிலடி
காரணந் தில்லையென் றிம்பிலடி. (௩)

கயிற்றி லரவு கடித்துடன் மாண்டனன்
கனவிற் புருடனென் றிம்பிலடி
ககனப்பே யாறனென் றிம்பிலடி. (௪)

இந்திர சாலத் தெழுந்த வரசனோர்
சுந்தர றுறனென் றிம்பிலடி
தோன்றல கதுபோலென் றிம்பிலடி. (௫)

இந்த வுலகு நிலைக்குங் கறுப்போல
வந்திங் குதித்ததென் றிம்பிலடி
வாறுறி யோடுமென் றிம்பிலடி. (௬)

நீர்மேற் குமிழி நிலையாக நிற்குமோ  
னித்திய மிச்சக மிம்பிலடி  
நிலையில தாமென விம்பிலடி. (௭)

சாயை சகட்டுரு டன்னை நிகர்க்குமோ  
மாயை வடிவதென் றிம்பிலடி  
மாறிமா றிப்போமென் றிம்பிலடி (௮)

வில்லும் வெயிற்குஞ்சும் போல விளங்கிடுஞ்  
சொல்லு மித்தேகமென் றிம்பிலடி  
சொல்லள வுள்ளதென் றிம்பிலடி. (௯)

வானத்தி னீலமும் வையமு மொன்றென  
மோனத் தவர்சொன்னா ரிம்பிலடி  
முத்தி நிலையிலென் றிம்பிலடி. (௧௦)

சோபா திகமாகத் தோன்று முலகத்தை  
யாபாதித் துப்பார்த்தோ மிம்பிலடி  
யைய னருளேயென் றிம்பிலடி (௧௧)

நிருபா திகமா நிகழுஞ் செகத்தெனி  
லொருபாதி யில்லையென் றிம்பிலடி  
யொடுங்கிற்று வையமென் றிம்பிலடி (௧௨)

அந்தக் கரண மடங்கத் துறந்தவ  
ரெந்தைக் கினியாரென் றிம்பிலடி  
யென்றும் பிறவாரென் றிம்பிலடி. (௧௩)

மனத்தைக் கெடுக்கும் வலய முடையோ  
ரனைத்துஞ் சிவமாக விம்பிலடி  
யறிவா ரறிவாரென் றிம்பிலடி. (௧௪)

நானெனும் போத நழுவ விடுத்தவர்
ஞானதி தீரரென் றிம்பிலடி
சாந்த சுசீலரென் றிம்பிலடி. (௧௫)

ஈசன் செயலே யெலாமென் றிருப்பவர்
தேசுடைச் செல்வரென் றிம்பிலடி
செத்துப் பிறவாரென் றிம்பிலடி. (௧௬)

ஆனையின் கைபோல வாலு மனத்தின
ரீனர்க்கு ளீனரென் றிம்பிலடி
யென்றிவ ருய்வாரென் றிம்பிலடி. (௧௭)

சென்றடை யாத திருவுடை யாளனை
யென்று மறவோமென் றிம்பிலடி
யேகாந்த மாகநின் றிம்பிலடி. (௧௮)

வனத்துக்கு ளேதவஞ் செய்தங் கிருந்தாலு
மனத்துக்க மாறுதென் றிம்பிலடி
வருமே பிறவியென் றிம்பிலடி. ([illegible])

அய்யன் சிதம்பர தேவ னருளினான்
மெய்யே விளங்குமென் றிம்பிலடி
வேதஞ் சொனவண மிம்பிலடி. (௨௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# வண்டு.

கலிவிருத்தம்.

சித்தஞ் சிவமென ஆதூது வண்டே
செகமு மறிவென ஆதூது வண்டே
யத்த னருளென ஆதூது வண்டே
யம்பர மானதென் றாதூது வண்டே. (க)

எத்தியே யாண்டானென் றாதூது வண்டே
யேழைபங் காளனென் றாதூது வண்டே
பத்தி தருவானென் றாதூது வண்டே
பங்கயத் தாளனென் றாதூது வண்டே. (உ)

சுத்த வறிவேயென் றாதூது வண்டே
சொல்ல வொணாததென் றாதூது வண்டே
கத்தன் கடவுளென் றாதூது வண்டே
ககன வடிவனென் றாதூது வண்டே. (உ)

முத்தி முதல்வனென் றாதூது வண்டே
முடியா முதல்வனென் றாதூது வண்டே
பத்தி மனத்தின ருதூது வண்டே
பார்க்கப் பொலிவானென் றாதூது வண்டே. (ச)

அன்னத்தை நீக்கினு மூதூது வண்டே
யரும்பசி கொண்டாலு மூதூது வண்டே
யென்னத்தன் றானென்றுனென் றாதூது வண்டே
யெல்லாஞ் சிவமாய்க்கண் டூதூது வண்டே. (ரு)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# சிவசங்கரசங்கீர்த்தனம்.

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கடலின்றெழு மொருவமு துண்டவர்
கடநின்றில நின்றில நின்றில
சடநின்றிட யோகுசெய் யோகியர்
தனுவிந்திர தனுவென வேகின
வுடல்நின்றிடும் வலியொடு வெனவெணி
யுயிர்கொன்றுட றினுமறி வீனர்க
டிடவன்கொடு நரகினில் வீழ்குவர்
சிவசங்கர சங்கர சங்கர. (க)

உணரவொன்றிப குலமதி லேகலை
யுளதும்முப கிடதமு மயர்வற
வரைவின்றிய வதனத னுரையொடு
மதியின்புற வறிதவ ராயினுஞ்
சிரமம்பட வுயிர்வதை செய்தது
தினும்வன்கொடு மனதுடை யீனர்க
டிரமிங்கிவர் நரகினில் வீழ்வர்கள்
சிவசங்கர சங்கர சங்கர. (உ)

ஒருவன்னல வொன்றல வேறல
வுருவென்றது கூறவொ ணாதது
மருவுந்தன தன்பர்க ணெஞ்சினின்
மறைவின்றி நிறைந்த பரம்பொரு
ளருவன்றுரு வன்றென நின்றது
[illegible]துரங்குரு பரனென வருதலுந்
திருவந்து திகழ்ந்திடு கின்றது
சிவசங்கர சங்கர சங்கர. (ங)

சிவமங்கள மாகி நிறைந்தது
சிவமெங்கணு நின்று திகழ்ந்தது
சிவமன்பர்கள் சிந்தை யுறைந்தது
சிவமந்தண மாகி யிருந்தது
சிவமெம்முயி ராகி நிகழ்ந்தது
சிவமொன்றெடு மேவை லுறுந்தது
சிவமெங்கள் சிதம்பர மானது
சிவசங்கர சங்கர சங்கர. (௪)

கனகந்திகழ் பொதுவினி லுறைவது
கலகம்படு மதரள விலைந்தது
மனதன்புறு வமலத லழிவெனும்
வனசந்தனி னிதமுறை பொருபொரு
டனதின்புறு கருணையி னுருவொடு
தனிவண்சபி வனமதி னிலவியெழுந்
செனிதங்கெட வொருபொரு ளருளிய
சிவசங்கர சங்கர சங்கர. (௫)

முற்றிற்று.
திருச்சிற்றம்பலம்.

---

## வாழ்த்து.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வாழி மாமறை வாழிநல் லாகமம் வாழி சைவ மறைய வர் மன்னவர், வாழி யானினம் வாழி மணிமன்றம் வாழி குஞ்சித ரஞ்சித நற்பதம், வாழி வாழி சபையெ வாலயம் வாழி வாழியங் குள்ள மடாலயம், வாழி வாழி சிதம்பர தேசிகன் வாழி பின்வரு மாதவ ரியாருமே.

திருச்சிற்றம்பலம்.